First Edition 2020

**Author:**

Sis. Gladys, Anudhina Manna Team

**Published by:**

Anudhina Manna Team

**Created by:**

Yesudas Solomon, www.WordOfGod.in

**Download:**

This book can be downloaded from www.WordOfGod.in and www.Archive.org web sites.

**Self-Printing:**

You can print this book yourself with the options A4 Size, Booklet Type, Both the sides printing. After printing, you can fold or cut in the middle.



**Facebook:**

https://www.facebook.com/anudhina.manna

**Email:**

anudhinamanna@gmail.com

# பொருளடக்கம்

# *1.* தகப்பனின் நேசம்

*தேவன், தம்முடைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்புகூர்ந்தார் (யோவான் 3:16).*

*ரிக் வான் பீக் என்பவர் அமெரிக்காவின் மிக்சின் மாகாணத்தில் வசிக்கிறார். அவருடைய மனைவியின் பெயர் மேரி. அவர்களுக்கு மாடிசன் என்ற மகள் பிறந்தாள். அவளுக்கு மூளை மற்றும் நரம்பில் பாதிப்பு ஏற்பட்டதால் அவள் எப்போதும் படுத்த படுக்கையாகவே இருகக வேண்டிய நிலை ஏற்பட்டது. 2008ம் ஆண்டு வரை ஒரு நாளைக்கு இரண்டு பாக்கெட் சிகரெட் குடித்து கொண்டிருந்த ரிக் வான் குடிப்பழக்கும் உடையவராகவும் இருந்தார். தன் மகளுக்காக நீண்ட நாள் வாழ வேண்டுமென தீர்மானித்து, இந்த கொடிய பழக்க வழக்கங்களை விட்டவிட்டு ஓட்டப்பந்தயங்களில் பங்கெடுக்க பயிற்சிகள் செய்ய ஆரம்பித்தார்.*

*அதற்கு தன்னுடைய மாற்றுதிறனாளி மகளையும் ஜோடி சேர்த்து கொண்டார். படுக்கையில் கிடக்கும் அவள் எப்படி ஓட முடியும்? எனவே அவளுக்கென்று விசேஷமான மூன்று சக்கர நாற்காலி, படகு ஆகியவற்றை செய்தார். ஓடும்போது மூன்று சக்கர நாற்காலியில் அவளை படுக்க வைத்து, அதை தள்ளிக்கொண்டு ஓடுவார். நீந்தும்போது அந்த படகில் அவளை படுக்க வைத்து, படகின் கயிறை தன்னுடன் இணைத்து கொண்டு நீந்துவார். மிதிவண்டி ஓட்டும்போதும்*

*மூன்று சக்கர நாற்காலியை மிதிவண்டியின் பின்பக்கத்தில் இணைத்து கொள்வார்.*

*இதுவரை இருவரும் சேர்ந்து எழுபதுக்கும் அதிகமான போட்டிகளில் கலந்துள்ளனர். சில நேரங்களில் ஓடும்போது அவளை சுமந்து கொண்டும் ஓடுவார். ஒருமுறை டிரைத்தலான், அதாவது மிதிவண்டி, நீச்சல், ஓட்டம் என மூன்றையும் குறிப்பிட்ட தூரம் ஒன்றன் பின் ஒன்றாக செய்ய வேண்டிய போட்டியில் மகளுடன் கலந்து கொண்டார். தன் ஊனமுற்ற மகளுக்கு இவர் காட்டின பரிவையும் கரிசனையையும் பார்த்த பத்திரிக்கையாளர்களும், பார்வையாளர்களும் 'இந்த நூற்றாண்டின் தகப்பனார்' என பெயர் சூட்டி, ஏன் இப்படி செய்கிறீர்கள் என்று கேட்டனர். அப்பொழுது அவர் 'வெளியிலுள்ள காற்று வேகமாக அவளது முகத்தில் படுவதையும், தலைமுடி பறந்து முகத்தில் விழுவதையும் அவள் அதிகாக விரும்புவாள். நான் அவளை அதிகமாக நேசிப்பதால் அவள் என்னுடைய இதயம், நான் அவளுடைய காலாக இயங்குகிறேன். என்னை காட்டிலும் மாடிசன்தான் அநேகருடைய வாழ்க்கையை மாற்றியிருக்கிறார். நாங்கள் இருவரும் சேர்ந்து ஒரு நல்ல குழுவாக இருக்கிறோம்' என்றார். இந்த உருக்கமான பதில் அநேகருடைய வாழ்க்கையை தொட்டது.*

*மாற்று திறனாளியான தன் மகளுக்காக அநேக நாட்கள் வாழ வேண்டுமென்று, கெட்ட பழக்கங்களை விட்டு அவளையும் தன்னோடு சேர்த்து கொண்டு விளையாட்டு வீராங்கனையாக மாற்றிய தகப்பனின் அன்பை என்னவென்று சொல்ல முடியும்? நம்மில் அநேகர்கூட மாற்று திறனாளியோ,*

*அல்லது சுகவீனமாக இருக்கிற பிள்ளைகளுக்காக அநேக நாட்கள் வாழ வேண்டும் என்ற வாஞ்சிக்கிறோமல்லவா?*

*உலக பெற்றோராகிய நாம் நம் பிள்ளைகளை இவ்வளவு அதிகமாய் நேசிப்போமானால், பரம தகப்பன் நம்மேல் வைத்திருக்கும் பாசம் எவ்வளவு பெரியதாயிருக்கும்? அவர் தம்முடைய ஒரே பேறான குமாரன் என்றும் பாராமல் நமக்காக அவரை இந்த உலகத்திற்கு அனுப்பி, இவ்வளவாய் உலகத்தில், நம்மேல் அன்பு கூர்ந்தாரல்லவா?*

*கிறிஸ்து நம்மேல் வைத்த பாசம் பெரியது. தம்முடைய கடைசி சொட்டு இரத்தம் வரைக்கும் நமக்காக சிந்தி, நம்மை இரட்சித்தாரே! அவருடைய அன்புக்கு ஈடாக நாமும் அவரை நேசிக்க வேண்டும் அல்லவா? நாம் அவரை நேசிப்போமானால், நான் அவளது காலாக இயங்குகிறேன் என்று அந்த தகப்பன் சொன்னதுபோல நாம் கர்த்தருடைய காலாக, சொல்லப்பட்டிராத இடங்களுக்கு செல்லவும், நாம் அவருடைய வாயாக, கஷ்டத்திலும் பாடுகள் மத்தியிலும் இருப்பவர்களுக்கு ஆறுதல் சொல்லவும், வியாதி படுக்கையில் இருப்பவர்களுக்கு நம் கைகளினால் உதவிகள் செய்யவும் வேண்டுமல்லவா?*

*அநேகருடைய வாழ்க்கையை தொடுவதற்காக கர்த்தர் நம்மை தெரிந்தெடுத்திருக்கிறார். நம்முடைய அன்பினால், நம்முடைய ஆறுதல் வார்த்தைகளினால் மற்றவர்களை தொடுவோமா? கர்த்தரிடம் கொண்டு வருவோமா? கிறிஸ்துவின் அன்பை பறைசாற்றுவோமா? ஆமென் அல்லேலூயா!*

*எனக்காய் பேசிட நாவு வேண்டும்*
*என்னை போல் அலைந்திட கால்கள் வேண்டும்*
*என்னில் அன்புகூற ஆட்கள் வேண்டும்*
*இதை உன்னிடம் கேட்கிறேன் தர வேண்டும்*

*அழைக்கிறார் இயேசு அவரிடம் பேசு நடத்திடுவார்*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, உலகப்பிரகாரமான தகப்பன் தன் பிள்ளையை இவ்வளவாய் நேசிக்கும்போது தாய் மறந்தாலும், தகப்பன் கைவிட்டாலும், எங்களை விட்டு விலகாத, எங்களை உள்ளங்கையில் வரைந்து, எங்களை அதிகமாய் நேசிக்கிற தகப்பன் நீர் எங்களுக்கு இருப்பதற்காக உம்மை துதிக்கிறோம். கிறிஸ்துவின் கரங்களாக, கிறிஸ்துவின் கால்களாக, வாயாக எங்களை பயன்படுத்தும். இயேசுகிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

## 2. பயப்படாதே; விசுவாசமுள்ளவனாயிரு

*இயேசு அதைக் கேட்டு: பயப்படாதே; விசுவாசமுள்ளவனாயிரு என்றார் - (லூக்கா 8:50).*

யவீரு என்னப்படும் ஒரு ஜெப ஆலயத்தலைவன் இயேசுகிறிஸ்துவிடம் வந்து, தன்னுடைய ஒரே குமாரத்தி அதுவும் சிறுப்பெண் மரணத்தருவாயில் இருந்தபடியால், தன்னுடைய வீட்டிற்கு வந்து அவளுக்காக ஜெபித்து சுகத்தை தரும்படியாக அவரிடம் மன்றாடி கேட்டார்.

இயேசுவும் சரி என்று அவருடன் அவருடைய வீட்டிற்கு போகையில், பன்னிரண்டு வருடமாய் பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரீ வந்து, தன்னுடைய பணத்தையெல்லாம் வைத்தியர்களிடம் செலவழித்தும், தன் நிலைமை மாறாமல் பெலவீனப்பட்டு இருக்கையில், கிறிஸ்துவின் வஸ்திரத்தின் ஓரத்தையாகிலும் தான் தொட்டால் தான் சுகமடைவோம் என்று தன்னுடனே சொல்லிக் கொண்டு, அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தை தொட்டாள்.

அவள் தொட்ட மாத்திரத்தில் இயேசுகிறிஸ்துவிடமிருந்து வல்லமை புறப்பட்டு, அவளை உடனே சுகப்படுத்தியது. அப்பொழுது இயேசுகிறிஸ்து என்னை தொட்டது யார் என்று கேட்டார். அநேகர் அவரை நெருக்கி கொண்டு வந்து கொண்டிருந்தபடியால், இவர் ஏன் இப்படி கேட்கிறார் என்று சீஷர்கள் அவரிடம், 'ஐயரே, திரளான ஜனங்கள் உம்மைச் சூழ்ந்து நெருக்கிக் கொண்டிருக்கிறார்களே, என்னைத் தொட்டது யார் என்று எப்படிக் கேட்கிறீர் என்றார்கள்'.

அதற்கு இயேசு: என்னிலிருந்து வல்லமை புறப்பட்டதை அறிந்திருக்கிறேன்; ஆதலால் ஒருவர் என்னைத் தொட்டதுண்டு என்றார். அப்பொழுது அந்த ஸ்திரீ தான் மறைந்திருக்கவில்லையென்று கண்டு, நடுங்கிவந்து, அவர் முன்பாக விழுந்து, தான் அவரைத் தொட்ட காரணத்தையும் உடனே தான் சொஸ்தமானதையும் எல்லா ஜனங்களுக்கும் முன்பாக அவருக்கு அறிவித்தாள். அவர் அவளைப் பார்த்து: மகளே, திடன்கொள், உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது, சமாதானத்தோடே போ என்றார் (லூக்கா 8:46-48)

இந்த காரியங்கள் ஒரு பக்கம் நடந்து கொண்டிருக்க, தன் மகளை மரணத்தருவாயில் வைத்துக் கொண்டு, இயேசுவந்து தொட்டால் சுகமாகும் என்று காத்திருந்த யவீருவுக்கு, ஐயோ தாமதமாகி கொண்டிருக்கிறதே, என் மகளுக்கு என்ன ஆகுமோ என்று பதற்றத்துடன் நின்று கொண்டிருக்கிறார். அந்த சமயத்தில் "ஜெப ஆலயத்தலைவனுடைய வீட்டிலிருந்து ஒருவன் வந்து, அவனை நோக்கி: உம்முடைய குமாரத்தி மரித்துப் போனாள், போதகரை வருத்தப்படுத்த வேண்டாம் என்றான்" (49ம் வசனம்).

ஒரு வேளை யவீரு நினைத்திருக்கலாம், இந்த அம்மா வந்து இயேசுவை தொட்டதினால் தான் இத்தனை நேரம் கடந்து போயிற்று. இல்லாவிட்டால், கொஞ்ச முந்தியாவது கிறிஸ்து வந்து என் மகளை தொட்டிருப்பார் என்று. ஆனால் அவர் எதுவும் சொல்வதற்கு முன்பு "இயேசு அதைக் கேட்டு: பயப்படாதே; விசுவாசமுள்ளவனாயிரு, அப்பொழுது அவள் இரட்சிக்கப்படுவாள் என்றார்" (வசனம் 50). அவிசுவாசமான

*எந்த வார்த்தையும் யவீரு பேச இயேசுகிறிஸ்து அனுமதிக்கவில்லை.*

*அப்படியே யவீருவின் வீட்டிற்கு சென்று "எல்லாரையும் அவர் வெளியே போகப்பண்ணி, அவளுடைய கையைப்பிடித்து: பிள்ளையே எழுந்திரு என்றார். அப்பொழுது அவள் உயிர் திரும்ப வந்தது; உடனே அவள் எழுந்திருந்தாள்; அவளுக்கு ஆகாரங்கொடுக்கக் கட்டளையிட்டார்" (54-55 வசனங்கள்).*

*பிரியமானவர்களே, ஜெப ஆலயத்தலைவன் யவீருவின் மனநிலையை ஒருமுறை நாம் எண்ணிப்பார்த்தால், தன் ஒரே மகள், மிகவும் சுகவீனமாயிருக்கிறாள், வாழ்க்கையின் கடைசி விளிம்பிற்கே வந்து விட்டாள், அவளை இயேசுகிறிஸ்து எப்படியாவது சுகப்படுத்த வேண்டும் என்று வாஞ்சையுடன் இயேசுகிறிஸ்துவை அண்டி வந்தபோது, எதிர்பாராதவிதமாக அந்த சகோதரியின் குறுக்கீடு இவற்றால் தடை வந்தது. அதற்குள் வேலைக்காரர்கள் வந்து, மகள் மரித்து விட்டாள் என்று கூறினபோது, அந்த தகப்பனின் இருதயம் எப்படியாயிருந்திருக்கும்? ஒரே மகள் மரித்துப்போனாளே, எல்லாவற்றிற்கும் முடிவு வந்து விட்டது என்று நினைக்க ஆரம்பிக்கிறபோது, இயேசுகிறிஸ்துவின் கனிவுள்ள வார்த்தைகள் புறப்பட்டு வருகிறது, 'பயப்படாதே; விசுவாசமுள்ளவனாயிரு' என்று.*

*ஒரு வேளை நம்முடைய வாழ்க்கையிலும் எல்லாம் முடிந்து விட்டது. நான் கடைசி கட்டத்தில் இருக்கிறேன். இதற்கு மேல் ஒன்றுமே நடக்க போவது இல்லை என்று நினைத்து*

கொண்டிருக்கிறீர்களா? யார் என்ன செய்தாலும் இனி நல்லது நடக்க போவதில்லை என்று மனம் சோர்ந்து போயிருக்கிறீர்களா? உங்களுக்குத்தான் இயேசுகிறிஸ்து சொல்கிறார், 'பயப்படாதே; விசுவாசமுள்ளவனாயிரு' என்று.

வேதத்தில் எத்தனையோ பேரின் வாழ்க்கையில் இதுதான், இனிமேல் எதுவும் நல்லது நடக்க போவதில்லை என்று தீர்மானித்திருந்தவர்களின் வாழ்க்கையில் அதற்குமேல்தான் நல்லது நடந்திருக்கிறது. மோசே இராஜ அரண்மனையை விட்டு, ஆடுகளை மேய்த்து நாற்பது வருடங்கள் ஆயிற்று. தன் வாழ்க்கை இவ்வளவு தான், இனிமேல் நான் ஆடு மேய்ப்பவனாகத்தான் என் வாழ்க்கையை முடிப்பேன் என்று நினைத்திருந்த வேளையில்தான் அவருக்கு தேவனுடைய வார்த்தை உண்டாகி, அவர் அத்தனை இஸ்ரவேலரையும், எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்து விடுதலையாக்கி வெளியே கொண்டு வந்தார். பெரிய அற்புதங்களையும் அடையாளங்களையும் செய்து, தேவனே பெரியவர் என்று நிரூபித்தார்.

யோசேப்பு சிறைச்சாலையிலிருந்தபோது, ஒரு வேளை நினைத்திருக்கக்கூடும், கர்த்தரும் என்னை மறந்தார், நான் இனி இந்த சிறையிலேயே இருக்க வேண்டியது தான் என்று. ஆனால் நாள் வந்தது, பார்வோனுக்கு சொப்பனத்தை கொடுத்து, தேவன் அவருடைய சிறையிருப்பை மாற்றி, தேசத்து அதிபதியாக்கினார்.

இப்படி எத்தனையோ உதாரணங்களை சொல்லிக் கொண்டே போகலாம். நீங்களும் வாழ்வின் முடிவிற்கே வந்து

*விட்டேன் என்று நினைக்கிறீர்களோ, கர்த்தருடைய வார்த்தை உங்களுக்குத்தான் வருகிறது, பயப்படாதே; விசுவாசமுள்ளவனாயிரு என்று. ஆம், விசுவாசமுள்ளவர்களாயிருப்போம் கர்த்தர் கடைசி நிமிஷத்திலும் அற்புதம் செய்து, பெரிய காரியங்களை நம்மை கொண்டு செய்ய முடியும். மனம் சோர்ந்து போகாதிருப்போம். தேவன் புதிய காரியங்களை செய்து, புதிய ஆசீர்வாதங்களால் நம்மை நிரப்பும்படியாக, ஒருவேளை சில காரியங்களை அனுமதித்திருக்கலாம். ஆனால் அதுவே முடிவு என்று நினைத்து சோர்ந்து போகாதிருப்போம். கர்த்தர் நம்பி விசுவாசிப்போம், பயத்தை புறம்பே தள்ளுவோம். முடிவிலும் ஒரு தொடக்கத்தை கர்த்தர் உண்டாக்குவார். அவரை விசுவாசிப்பவர்களுக்கு நிச்சயமாகவே எல்லாவற்றையும் ஆசீர்வாதமாக மாற்றுவார். ஆமென் அல்லேலூயா!*

*ஈசாக்கின் தேவனும் நான் - அந்த*
*யாக்கோபின் தேவனும் நான்*
*அடிமையாய்ப் போன யோசேப்பை*
*தேசத்து அதிபதியாக்கினதும் நான்*

*என் சமுகம் உன் முன் செல்லும்*
*ஒன்றுக்கும் கலங்காதே*
*ஒரு போதும் கைவிட மாட்டேன்*
*அழைத்தது நான்தானே*

**ஜெபம்:** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, எல்லாம் முடிந்தது என்று நாங்கள் நினைக்கும் வேளையில் எல்லாவற்றையும் புதியதாய் மாற்றி, ஆசீர்வாதங்களினால்*

*எங்களை நிரப்புகிற நல்லவரே உமக்கு ஸ்தோத்திரம். எந்தவகையிலும் நாங்கள் மனம் சோர்ந்து போய் விடாதபடி, விசுவாசமுள்ளவர்களாயிருக்கும்படி எங்களது விசுவாசத்தை வர்த்திக்க செய்யும். பயத்தை புறம்பே தள்ளி, விசுவாசமுள்ளவர்களாக எங்களை மாற்றும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 3. சுமக்க வேண்டிய சிலுவை

*சிலுவையைப் பற்றிய உபதேசம் கெட்டுப்போகிறவர்களுக்குப் பைத்தியமாயிருக்கிறது, இரட்சிக்கப்படுகிற நமக்கோ அது தேவபெலனாயிருக்கிறது - (1 கொரிந்தியர் 1:18).*

*ஒரு மோட்சப்பிரயாணி வாக்குதத்தம் செய்யப்பட்ட மகிமையான தேசத்தை நோக்கி பயணம் செய்துக் கொண்டிருந்தான். தன்னுடைய பாரமான சிலுவையை சுமந்துக் கொண்டு அவன் மகிழ்ச்சியாக பயணம் செய்துக் கொண்டிருந்தான்.*

*பயணத்தில் ஏற்பட்ட களைப்பின் காரணமாக ஒரு நிழலைக் கண்டு அங்கு ஓய்வெடுக்கும்படி தங்கினான். ஓய்வாக படுத்திருக்கும்போது, அருகிலுள்ள காட்டில் ஒரு மனிதன் மரத்தை வெட்டிக் கொண்டிருப்பதைக் கண்டான்.*

*அந்த மனிதனிடம், 'நண்பா, என்னுடைய இந்த சிலுவை மிகவும் பாரமாக இருக்கிறது. அதை நான் கொஞ்சம் வெட்டித்தள்ளட்டும். பின் அதை சுமப்பதற்கு எனக்கு இலகுவாக இருக்கும்' என்று சொல்லி, அந்த மனிதனிடம் கோடாரியை வாங்கி, தன்னுடைய சிலுவையின் நீளத்தை வெட்டி, சிறிதாக்கி, தன்னுடைய பாரத்தை குறைத்துக் கொண்டான்.*

*சிலுவையின் பாரம் குறைவாக இருந்தபடியால் பிரயாணம் எளிதாக இருந்தது. வெகுசீக்கிரமே வாக்குதததத்தம் செய்யப்பட்ட தேசத்தின் அருகாமையில் வந்து விடடான்.*

*அங்கு தூரத்தில் மகிமையான தேசத்தை பார்த்த அவன் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. “என் தேவனை முகமுகமாக காணப்போகிறேனே” என்று பேரானந்தம் கொண்டான்.*

*அவன் அருகில் வந்து சேர்ந்தபோது, அந்த மகிமையான தேசத்தை கடக்க ஒரு பிளவு காணப்பட்டது. அதை எப்படி கடப்பது என்று யோசித்துக் கொண்டிருந்தபோது, 'உன் சிலுவையை இணைப்புப் பாலமாக வைத்து அந்த பிளவைத்தாண்டி வா' என்ற சத்தம் கேட்டது. உடனே மகிழ்ச்சி நிறைந்தவனாக தன் சிலுவையை எடுத்து அந்த பிளவில் வைத்தபோது, அதன் நீளம் பற்றாமல் போனது.*

*அவன் பாரமாக இருக்கிறது என்று எந்த அளவு நீளத்தை குறைத்தானோ அதே அளவு அந்த பிளவை தாண்ட தேவைப்பட்டது. 'ஐயோ என் சிலுவையை வெட்டி சிறிதாக்காமல் இருந்திருந்தேனானால் நான் மகிமையின் தேசத்தை இந்நேரம் சென்று சேர்ந்திருப்பேனே, இபபோது நான் என்ன செய்வேன்' என்று கதறினான்.*

*திடீரென்று கண் விழித்து எழுந்தான். தான் கண்டது சொப்பனம்தான் என்று அவனுக்கு புரிந்தது. தன் அருகிலிருந்த பாரசிலுவையை கட்டி அணைத்துக் கொண்டான். எந்த சூழ்நிலையிலும் எனக்கு கொடுக்கப்பட்ட சிலுவையை நான் குறைக்க நினைக்க மாட்டேன் என்று தீர்மானித்தான். தன் பயணத்தை தொடர்ந்து, மகிமையான தேசத்தை சென்றடைந்தான். அல்லேலூயா!*

*பிரியமானவர்களே, நம் ஒவ்வொருவருக்கும் ஒரு சிலுவை கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த நாட்களில் சிலர் நாம் சிலுவையை சுமக்க வேண்டியதில்லை என்று கூறுகின்றனர். ஆனால் இயேசுகிறிஸ்து 'அப்பொழுது, இயேசு தம்முடைய சீஷர்களை நோக்கி: ஒருவன் என்னைப் பின்பற்றி வர விரும்பினால், அவன் தன்னைத் தான் வெறுத்து, தன் சிலுவையை எடுத்துக்கொண்டு என்னைப் பின்பற்றக்கடவன்' (மத்தேயு 16:24) என்று கூறினார்.*

*கிறிஸ்துவை பின்பற்ற விரும்பினால் நாம் நம்மை வெறுத்து, நம்முடைய சிலுவையை எடுத்துக் கொண்டு அவரை பின்பற்ற வேண்டும். கர்த்தருடைய சிலுவையை அல்ல, நம்முடைய சிலுவையை எடுத்துக் கொண்டுதான் பின்பற்ற வேண்டும். அப்படி பின்பற்றும்போது, நம்முடைய சிலுவை பாரமாக இருக்கிறது என்று சிலுவையை எடுத்துச் செல்லாமல் இருப்போமானால், ஒருவேளை நாம் மகிமையான தேசத்தை சென்று சேர முடியாமற் போகலாம்.சிலுவையை எடுத்துச் செல்லாமல் இருப்பது என்பது எந்த நாளும் நம் குறைகளையும், பாடுகளையும், துன்பங்களையும், வேதனைகளையும் முறுமுறுத்துக் கொண்டே இருப்போமானால் அது நாம் சிலுவை சுமக்க தயங்குவதற்கு ஒப்பாகும்.*

*“தன் சிலுவையைச் சுமந்துகொண்டு எனக்குப் பின்செல்லாதவன் எனக்குச் சீஷனாயிருக்கமாட்டான்” (லூக்கா 14:27) என்று இயேசுகிறிஸ்து கூறினார். நாம் அவருடைய சீஷர்களாக இருக்க வேண்டுமானால், நம் சிலுவையை சுமந்து அவருக்கு பின் செல்ல வேண்டும்.*

*நம் வாழ்க்கையில் சிலுவையை போன்ற துன்பங்களும், துக்கங்களும், துயரங்களும் வந்து சேர்ந்தாலும், நாம் அவற்றை சுமந்து, கர்த்தருடைய வழியில் அவரை பின்பற்றும்போது, 'வருத்தப்பட்டுப் பாரஞ்சுமக்கிறவர்களே! நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்; நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன்' (மத்தேயு 1:28) என்று சொன்னவர் நமக்கு இளைப்பாறுதலை நிச்சயமாக தருவார். அல்லேலூயா!*

*கிறிஸ்தவ வாழ்க்கை ரோஜாப்பூக்கள் விரிக்கப்பட்ட வாழ்க்கை அல்ல, அது பாடு நிறைந்த வாழ்க்கையாக இருந்தாலும், கர்த்தர் அதன் நடுவில் இருந்து நம் பாதையை செவ்வைப்படுத்துவார். நம்முடைய பாரங்களை பாடுகளை அவர் ஏற்றுக் கொள்வார். அல்லது சுமப்பதற்கு தாங்குவதற்கு ஏற்ற பெலனை தருவார். ஆமென் அல்லேலூயா!*

*இளைப்பாறுதல் தரும் தேவா*
*களைத்தோரை தேற்றிடுமே*
*சிலுவை நிழல் எந்தன் தஞ்சம்*
*சுகமாய் அங்கு தங்கிடுவேன்*

*என்னை கைவிடாதிரும் தேவா*
*என்ன நிந்தை நேரிடினும்*
*உமக்காக யாவும் சகிப்பேன்*
*உமது பெலன் ஈந்திடுமே*

*திருப்பாதம் நம்பி வந்தேன்*
*கிருபை நிறை இயேசுவே*
*உமதன்பைக் கண்டடைந்தேன்*

*தேவ சமுகத்திலே*

***ஜெபம்:*** *எங்கள்அன்பின் பரலோக தகப்பனே, நாங்கள் எங்கள் சிலுவையை சுமந்து கர்த்தருக்கு பின்செல்லும்படி தேவன் எங்களுக்கு பெலனை தருவீராக. இளைப்பாறுதல் தருவேன் என்று சொன்னவர் களைப்பாய் சோர்ந்து போயிருக்கிறவர்களை தேற்றும். திடப்படுத்தும். உம்மில் சார்ந்து கொள்ள செய்யும். உமது பெலனை கட்டளையிடுவீராக. இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# *4.* இரண்டு வகை சோதனைகள்

*மனுஷருக்கு நேரிடுகிற சோதனையேயல்லாமல் வேறே சோதனை உங்களுக்கு நேரிடவில்லை. தேவன் உண்மையுள்ளவராயிருக்கிறார்; உங்கள் திராணிக்கு மேலாக நீங்கள் சோதிக்கப்படுகிறதற்கு அவர் இடங்கொடாமல், சோதனையைத் தாங்கத்தக்கதாக, சோதனையோடுகூட அதற்குத் தப்பிக்கொள்ளும்படியான போக்கையும் உண்டாக்குவார். - (1 கொரிந்தியர்10:13)*

*ஒரு மூன்று வயது சிறுவன் பெற்றோருக்கு தெரியாமல் பீரோவை திறந்து ஏதோ ஒரு பொருளை எடுத்துத் தின்று விட்டான். அதற்கு அந்த தாயும், தகப்பனும், அந்த சிறுவனை கன்னத்தில் அறைந்தார்கள். தொடர்ந்து நான்கு மணி நேரங்கள் அடித்து கொண்டே இருந்தார்கள். அந்த சிறு குழந்தை அழுது அழுது தூங்கக் கண்களை மூடினாலும் விடவில்லை. முகத்தில் தண்ணீரை தெளித்து, தோளைப்பிடித்து, குலுக்கி, காதை திருகி தொடர்ந்து நான்கு மணி நேரம் அந்த தண்டனை நிறைவேறியது. அந்த சிறுவன் செய்த தவறுக்கு அவ்வளவு கடினமான தண்டனையா என்று நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. ஆனால் அந்த தண்டனை அன்பினால் வெளிப்பட்டது என்பதை பின்னர்தான் அறிய முடிந்தது.*

*நடந்தது என்னவென்றால், அச்சிறு குழந்தை பீரோவை திறந்து கைக்கு கிடைத்த தூக்க மாத்திரைகளில் பத்தை எடுத்து விழுங்கி விட்டது. டாக்டரிடம் அழைத்து சென்றார்கள்.*

அவர் சுமார் நான்கு மணி நேரம் குழந்தையை தூங்க விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அப்பொழுது குழந்தை சரியாகி விடும். ஒரு வேளை தூங்கி விட்டால் குழந்தையின் உயிருக்கு ஆபத்து என்று கூறியிருந்தார். ஆகவேதான் அந்த பெற்றோர், குழந்தையை அடித்து, கிள்ளி, காதை திருகி தூங்க விடாமல் செய்து, அந்த உயிரை காப்பாற்றி விட்டனர். ஆம், பெற்றோர் அவனை தண்டிக்கவில்லை. அன்பினிமித்தம் சிட்சித்தனர்.

நம்முடைய வாழ்விலும் நமக்கு ஏற்படுகிற சோதனைகளுக்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவது சோதனை பரிட்சையைப் போன்றது, தேவன் தமது பிள்ளைகளை பெலப்படுத்தி, மற்றவர்கள நம்மை பின்பற்றும்படி நல்ல ஒழுங்கை கற்றுக் கொடுக்கவும், சாட்சியாக நம்மை நிலைநிறுத்தவவும், இச்சோதனையை அனுமதிப்பார்.

ஆபிரகாம் ஈசாக்கை பலியிட சோதிக்கப்படுதல், யோபுவின் சோதனை போன்றவை இம்முதலாம் வகை சோதனைகள். இவர்களை போன்று அநேக நேரங்களில் நாம் தனிமையில் கஷ்டப்படுவதை போலவும், கைவிடப்பட்டதைப் போலவும் உணரலாம். 'இதோ நான் முன்னாகப் போனாலும் அவர் இல்லை, இடது புறத்தில் அவர் கிரியை செய்தும் அவரைக் காணேன், வலது புறத்திலும் நான் அவரைக் காணாதபடிக்கு ஒளித்திருக்கிறார். ஆனாலும் நான் போகும் வழியை அவர் அறிவார். அவர் என்னை சோதித்தப்பின்பு நான் பொன்னாக விளங்குவேன்' (யோபு 23: 8-10) என்று யோபு கூறுகிறார்.

*இதிலிருந்து நமக்கு வருகிற சோதனைகள் நம்முடைய மேன்மைக்காக, நம்மை பரிசுத்தப்படுத்தவே என்பதை புரிந்துக் கொள்ளலாம். ஆனாலும் சோதிக்க தேவன் கேடான காரியங்களை செய்வதில்லை. சாத்தானை அனுமதிக்கிறார். இவ்வகை சோதனையை நாம் பொறுமையோடு சகிக்க வேண்டும். அதன்பின் பொன்னாக விளங்குவோம்.*

*இரண்டாவது சோதனை பாவத்தின் மீதான விருப்பம். இந்த சோதனைகளை மனிதனுடைய பாவ சுபாவத்தால் அல்லது இருதயத்திலிருந்து ஏற்படுகிறது. நாம் பாவத்தில் விழுந்து தேவனுக்கு தூரமாகும்படி சாத்தான் எப்பொழுதும் பாவமான ஆசைகைள, இச்சைகளை நம் இருதயத்தில் ஏற்படுத்திக் கொண்டே இருக்கிறான். இச்சை, பண ஆசை, புகழ், பெருமை எல்லாம் இவற்றுள் அடங்கும்.*

*சாத்தான் ஏவாளை சோதித்தான். ஏவாள் பாவம் செய்தாள். இயேசுவை சோதித்தான், இயேசு சோதனையை ஜெயித்தார். ஆகவே இந்த இரண்டாவது வகை சோதனையானது தேவனிடத்திலிருந்து வருவதில்லை. அது சாத்தானிடத்திலிருந்தும், நம் பாவ மாம்சத்திலிருந்தும் வருகிறது. அது நமது மேன்மைக்கானதுமல்ல. பாவம் செயய வேண்டும் என்ற விருப்பம் சாத்தானிடத்திலிருந்தே வருகிறது. ஆகவே இப்படிப்பட்ட சோதனையிலிருந்து விடுவிக்கப்படும்படி நாம் எப்பொழுதும் விழித்திருந்து ஜெபிக்க வேண்டும். 'நீங்கள் சோதனைக்குட்படாதபடிக்கு விழித்திருந்து ஜெபம்பண்ணுங்கள். ஆவி உற்சாகமுள்ளதுதான்,*

மாம்சமோ பலவீனமுள்ளது' (மாற்கு 14:38) என்று இயேசுகிறிஸ்து கூறினாரே.

முதலாவது சோதனை அல்லது பரிட்சையை நாம் பொறுமையோடு சகிக்க வேண்டும். இரண்டாவது சோதனையை அல்லது பாவ விருப்பத்தை ஜெயிக்க வேண்டும். தேவன் கொடுக்கும் சோதனையிலிருந்து தப்பித்துக் கொள்ளும்படியாக போக்கையும் அவர் உண்டாக்குகிறபடியால், நாம் தப்பித்துக் கொள்ள முடியும் ஆனால் சாத்தான் கொடுக்கும் சோதனையில் கர்த்தரின் உதவியோடு, ஆவியானவரின் ஒத்தாசையோடு நாம் ஜெயிக்க வேண்டும். தேவன் நமக்கு உதவி செய்ய வல்லவராயிருக்கிறார். ஆமென் அல்லேலூயா!

போராட்டம் பாடுகள் நம் வாழ்வில் வந்தாலும்
சோர்ந்திடவே வேண்டாம்
உலகத்தை ஜெயித்தவர் நம்முடன் இருக்கையில்
ஜெயம் ஜெயம் ஜெயம் நமக்கே

இயேசு நல்லவர் இயேசு வல்லவர்
என்றென்றும் மாறாதவர் அவர்
என்றென்றம் மாறாதவர்

**ஜெபம்:** எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, எங்களுக்கு ஏற்படும் சோதனைகளில் நீர் எங்களை திருத்தும்படி, எங்களை பரிசுத்தப்படுத்தும்படி அனுமதிக்கிறவைகளை நாங்கள் ஏற்றுக் கொண்டு நீர் விரும்புகிற வண்ணம் சுத்தமாக, திருந்தி உமக்கு பிரியமாக வாழ கிருபை செய்யும். பிசாசானவன் தந்திரமாக

*எங்களை சோதனைக்குள் பிரவேசிக்க வைத்து, உம்மை விட்டு எங்களை பிரிக்காதபடி, பாவ சோதனைகளுக்கு நாங்கள் தப்பித்துக் கொள்ளும்படி எங்களை காத்தருளும். உம்முடைய வழிகளிலே நடந்து உமக்கு சாட்சிகளாக ஜீவிக்க கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 5. தேடி வந்த தெய்வம் இயேசு

*இதோ, வாசற்படியிலே நின்று தட்டுகிறேன்; ஒருவன் என் சத்தத்தைக்கேட்டு, கதவைத் திறந்தால், அவனிடத்தில் நான் பிரவேசித்து, அவனோடே போஜனம்பண்ணுவேன், அவனும் என்னோடே போஜனம்பண்ணுவான். - (வெளிப்படுத்தின விசேஷம் 3:20).*

கர்னல் இங்கர்சால் ஒரு பெரிய நாத்திகவாதி. கடவுளே இல்லை என்று சொல்லி அநேக புத்தக்களை எழுதினார். மாத்திரமல்ல, அநேக கிறிஸ்தவ ஊழியர்களை தர்க்கத்திற்கு அழைப்பது அவருடைய வழக்கமாயிருந்தது.

ஒருமுறை அந்த நாத்திகவாதி நடத்திய புத்திசாலிகளின் பாசறைக்கு தேவ ஊழியரான ஹென்றிவார்டு சென்றிருந்தார். தன்னுடைய நாத்திகவாத கூட்டத்திற்கு அந்த போதகர் வந்திருப்பதை பார்த்ததும் கர்னலுக்கு இன்னும் உற்சாகம் வந்து விட்டது. கடவுள் இல்லை என்பதற்கு தன்னுடைய வாதத்தை அடுக்கடுக்காக அடுக்கி திறம்பட பேசினார். கடவுள் இருப்பதை நிரூபிக்க முடியாது. கடவுள் என்பதே ஒரு பெரிய தத்துவம் என்று பல உதாரணங்கள், கதைகள் மூலமாக விளக்கி சொல்லி கொண்டே இருந்தார்.

ஆனால் போதகரோ ஒன்றும் பேசாமல் அமைதியாய் உட்கார்ந்திருந்தார். கூட்டத்திலுள்ளவர்கள் எல்லாரும் போதகர் தன்னுடைய கருத்தை தெரிவிக்கும்படி கேட்டார்கள். அதற்கு அந்த முதிய போதகர் எழுந்து, 'நான் இந்த கூட்டத்திற்கு

*வந்து கொண்டிருக்கும்போது, ஒரு சம்பவம் நடந்தது. நான் ஒரு முக்கியமான ரோடு வழியாக வந்து கொண்டிருந்தேன். அங்கே இரண்டு கால்களும் ஊனமான ஒரு மனுஷன் தன் கையின் இடுக்கிலே இரண்டு ஊன்று கோல்களை வைத்து கஷ்டப்பட்டு அநத ரோடடை கடக்க முயற்சித்தான். அந்த ரோடு பள்ளமாக, சேறும் சகதியுமாக இருந்தது. அப்போது எங்கிருந்தோ ஒரு முரடன் ஓடி வந்தான். 'உனக்கு ஏன் இந்த ஊன்றுகோல்?' என்று சொல்லி, அந்த முடவனுடைய இரண்டு கோல்களையும் பிடுங்கி கொண்டு ஓட ஆரம்பித்தான். பாவம் அந்த முடவன், அழுக்குதண்ணீரில் விழுந்து பரிதாபமாய் கதறினான். அந்த கூககுரல் இன்னும் என் காதில் கேட்டு கொண்டிருக்கிறது' என்று கூறினார்.*

*உடனே அந்த நாத்திகவாதி கோபத்துடன், 'அந்த முரடன் சுத்த அயோக்கிய பயலாக இருக்க வேண்டும், ஈவு இரக்கமில்லாத அவனுக்கு என்ன தண்டனை கொடுத்தாலும் தகும்' என்று கூறினார். ஜனங்களும் யார் அவன்? என்று கேட்டனர் போதகர் உணர்ச்சி வசத்துடன், அங்கிருந்த மக்களை பார்த்து ' நான் உண்மையை சொல்லுகிறேன். மனிதனுடைய ஆத்துமாக ஊனமடைந்திருக்கிறது. அவன் எப்படியாவது கடவுள் பக்தி என்ற ஊன்று கோலை ஊன்றி எழும்ப முயற்சிக்கிறான். ஆனால் எனதருமை நாத்திகவாதிகளான கர்னல் போன்றவர்களோ, தேவ பக்தி என்ற ஊன்று கோல்களை பிடுங்கி கொண்டிருக்கிறார்கள். இதனால் மனித ஆத்துமா நம்பிக்கையில்லாமல் தவிக்கிறது. மனித ஆத்துமாவுக்குள்ளே இருக்கும் கிறிஸ்தவத்தை பிடுங்குவதுதான் உங்கள் தொழிலானால் அதை மனம் நிறைந்த*

அளவுக்கு செய்யுங்கள். மரத்தை வளர்ப்பது கடினம், நீங்களோ அதை வெட்டி வீழ்த்துகிறீர்கள்' என்றார். அவர் பேசி முடித்தவுடன் பெரும் அமைதி நிலவியது.

இந்த நாட்களில் தேவையற்ற புத்தகங்களை படித்து, தேவன் இல்லை என்கிற எண்ணம் வாலிபர் பலருக்கு உருவாகி இருக்கிறது. அவர்கள் தேவையுள்ள புத்தகமாகிய வேதத்தை விட்டுவிட்டு, தேவையற்ற, குப்பையும், ஒன்றுக்கும் உதவாததுமாகிய தத்துவங்களை ஏற்று கொண்டு, தங்களுக்கே கேடு விளைவித்து கொண்டிருக்கிறார்கள்.

மனிதன் படைக்கப்படும்போதே அவனுடைய இருதயத்தில் தேவனை தேடும்படியான இடம் கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால் அவன் தேவன் இல்லை என்று சொல்லும்போது, அந்த இடம் வெற்றிடமாக மாறி விடுகிறது. வெற்றிடமாக உள்ள அந்த இடத்தில் வேறு எதை வைத்தாலும் அந்த இடத்தை நிரப்ப முடியாது.

மற்றும், உண்மையான தேவனை அவன் கண்டுபிடிக்கும் வரை அவனது இருதயத்தில் வெற்றிடமே காணப்படுகிறது. அதை அவன் நிரப்புவதற்காக எங்கெங்கோ தேவனை தேடி அலைகிறான். 'இருக்கின்ற இடம் விட்டு இல்லாத இடம் தேடி எங்கெங்கோ அலைகிறாய் ஞான தங்கமே' என்று பண்டைய புலவன் பாடி வைத்து போனான். ஆம், அவர் இருக்கும் இடம் நம் இருதயமே. அதில் அவரை அழையாதபடி, இல்லாத இடங்களை நோக்கி, எங்கெங்கோ சென்று, தவமிருந்து அந்த தெய்வத்தை, தன்னுடைய

*வெற்றிடமாகிய இருதயத்தில் வைக்கும்படி தேடி கொண்டிருக்கிறான். உண்மையான தெய்வம், அவர்கள் தேடி செல்லும் இடங்களில் அல்ல என்ற உண்மையை அந்த மனிதன் அறிந்து கொள்வது மிகவும் கடினமானதொன்றாகும்.*

*மனிதனை தேடி வந்த தெய்வம் ஒருவர் உண்டு என்பதை அவன் அறிந்தானானால் எத்தனை நலமாயிருக்கும்! மற்ற தெய்வங்களை தேடி அவன் ஒவ்வொரு இடமாக செல்கிறான். ஆனால், நம்மை தேடி வந்த தெய்வம் ஒருவர் உண்டு. அவர் தான் இயேசுகிறிஸ்து. 'நீங்கள் என்னைத் தெரிந்துகொள்ளவில்லை, நான் உங்களைத் தெரிந்துகொண்டேன்' - (யோவான் 15:16) என்று சொன்ன ஒரே தேவன் இயேசுகிறிஸ்து மட்டும்தான். நாம் இருக்கிற இடத்தை தேடி வந்து, தம்மை வெளிப்படுத்த சித்தம் கொண்டு, இப்போது நீங்கள் படிக்கும் இந்த வார்த்தைகள் மூலம் உங்களுக்கு தம்மை வெளிப்படுத்தி கொண்டிருக்கிறாரே, நீங்கள் அவரை தேடி போகவில்லை, அவர் உங்களை தேடி வந்திருக்கிறார். நீங்கள் அவரை ஏற்று கொள்ளும்போது, அவர் உங்களுக்குள்ளே வந்து உங்கள் வாழ்க்கையை மாற்றி, வெறுமையாயிருக்கிற காலியிடத்தை நிரப்பி, உங்களை அற்புதமாக நடத்துவார். 'இதோ, வாசற்படியிலே நின்று தட்டுகிறேன்; ஒருவன் என் சத்தத்தைக்கேட்டு, கதவைத் திறந்தால், அவனிடத்தில் நான் பிரவேசித்து, அவனோடே போஜனம்பண்ணுவேன், அவனும் என்னோடே போஜனம்பண்ணுவான்' - (வெளிப்படுத்தின விசேஷம் 3:20) என்று நம் இருதய கதவை தட்டி கொண்டிருக்கும் தேவனுக்கு நம் இருதய கதவுகளை திறப்போமா? நாம் திறக்கும்பட்சத்தில்*

*அவர் உள்ளே பிரவேசித்து, நம்மை ஆசீர்வதிப்பார். ஆமென் அல்லேலூயா!*

*வாசலண்டை நின்று ஆசையாய் தட்டும்*
*நேசர் இயேசுவுக்குன் உள்ளம் திறவாயோ*
*பாவியை ஒருபோதும் தள்ளாத நேசர்*
*வாவென்று உன்னை அழைக்கிறாரே*

*வழியும் சத்தியமும் ஜீவனும் இயேசு*
*வாசலும் மீட்பரும் தேவனும் இயேசு*
*இயேசுவல்லால் வேறு இரட்சிப்பு இல்லையே*
*இரட்சண்ய நாள் இன்றே வந்திடாயோ*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, இந்த நாளிலும், தேவன் இல்லை என்று மதிகேடன் தன் இருதயத்தில் சொல்லி கொண்டு, அவன் தன்னையே ஏமாற்றி கொண்டாலும், இருதயத்தில் வாசம் செய்கிற தேவன் ஒருவர் உண்டு என்பதையும், அவரே இருதயத்தின் வெற்றிடத்தை நிரப்ப வல்லவர் என்பதையும் அறிந்து கொள்ள கிருபை தாரும். எங்களை தேடி வந்த தெய்வமும், நாங்கள் அவரை அறியாத போது, அவர் எங்களை தேடி வந்து, எங்களை தெரிந்து கொண்டு எங்களுக்குள்ளே வாசம் செய்கிற தயவிற்காக உமக்கு நன்றி. இந்த நாளில் யாராவது இன்னும் உம்மை ஏற்று கொள்ளாமலிருந்தால், வாசலண்டை நின்று தட்டும் உம்முடைய சத்தத்தை கேட்டு, தங்கள் இருதய கதவுகளை திறந்து, உம்மை அழைக்கவும், நீர் அங்கு தங்கியிருந்து, அவர்களுக்கு அற்புதங்களை செய்யவும் கிருபை*

*செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

## *6.* பாடுபடும்போது பொறுமை

*நீங்கள் குற்றஞ்செய்து அடிக்கப்படும்போது பொறுமையோடே சகித்தால், அதினால் என்ன கீர்த்தியுண்டு? நீங்கள் நன்மைசெய்து பாடுபடும்போது பொறுமையோடே சகித்தால் அதுவே தேவனுக்குமுன்பாகப் பிரீதியாயிருக்கும் (1பேதுரு2:20)*

*ஸ்டான்லி ஜோன்ஸ் ஒரு சிறந்த கிறிஸ்தவ மிஷனெரி. இவர் பல ஆண்டுகளாக ஒரு விசுவாசிக்கு பண உதவி செய்து வந்தார். ஆனால் ஒரு கால கட்டத்தில் அவருக்கு உதவ முடியாத சூழ்நிலையில் உதவியளிப்பதை நிறுத்திக் கொண்டார்.*

*இதனால் பாதிப்புக்குள்ளான அந்த விசுவாசி இத்தன ஆண்டுகளாக தனக்கு உதவியளித்து வந்த அந்த மிஷனெரியை பல இடங்களில் அவதூறாக பேசினார். செய்திதாளிலும் அவரை பற்றி தாறுமாறாக செய்திகளை வெளியிட்டார். அதனால் ஸ்டான்லி ஜோன்ஸ் மற்றவர்கள் முன்பாக வெட்கிதலை குனியும் நிலை உண்டானது. இத்தனை ஆண்டகளாய் என்னிடத்தில் உதவி பெற்றவர் என்னை அநியாயமாய் தூற்றி திரிகிறாரே என மிகவும் மனம் நொந்து போனார். என்ன செய்வதென்று அறியாமல் கலங்கி கொண்டிருந்தார்.*

*இறுதியில் ஒரு முடிவுக்கு வந்தார். அந்த விசுவாசிக்கு ஒரு கடிதம் எழுதினார். அந்த கடிதத்தை வாசிப்பவர்கள்*

*யாராயிருந்தாலும் அவருடைய உண்மை தன்மையை விளங்கி கொள்ள முடியும். எந்த சூழ்நிலையிலும் தான் உண்மை தவறியதில்லை என்பதை பிறர் மறுக்க முடியாத அளவிற்கு அந்த கடிதம் அமைந்திருந்தது.*

*கடிதத்தை அனுப்புவதற்கு சற்று முன்பு எதற்கும் இதை தனது நெருங்கிய நண்பனிடம் காட்டி விட்டு அனுப்பலாம் என்ற எண்ணம் ஏற்பட்டது. ஆகவே அதை தன் நண்பருக்கு அனுப்பி, அதை குறித்ததான கருத்தை தெரிவிக்கும்படி கேட்டார்.*

*அவரிமிருந்து மிக சுருக்கமான பதில் வந்தது. 'மீட்பின் பணிக்கு இது ஏற்றதல்ல' என்று எழுதியிருந்தார். இதை பார்த்ததும் அவரது இருதயத்தின் ஆழத்தில் தொடப்பட்டார். மேற்கணட வசனம் அவருடன் பேசியது. ஆகவே அந்த கடிதத்தை அனுப்பாமல் கிழித்து போட்டார். 'ஆண்டவரே, நீரே எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர், இந்த பிரச்சனையை நீரே பொறுப்பெடும்' என்று ஜெபித்து விட்டு, அமைதியோடு விட்டு விடடார். சில வாரங்கள் கழித்து அந்த விசுவாசியிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் தன்னுடைய எல்லா செயல்களுக்காகவும் வருத்தம் தெரிவிதது மன்னிப்பு கேட்டு எழுதியிருந்தார். தேவனின் செயலை பார்த்தீர்களா?*

*பிரியமானவர்களே, கர்த்தருக்கென்று உண்மையாக இருக்கும் நம்முடைய வாழ்விலும் இதுபோன்ற செயல்கள், சந்தர்ப்பங்கள் நேர்ந்திருக்கலாம். ஆனால் அதை எப்படி கையாண்டோம் என்று நினைத்து பார்ப்போம்.*

*ஆண்டவரிடத்தில் ஒப்புவித்தோமா, அல்லது நாமே அதற்கான தீர்வை தேடிக் கொண்டோமா?*

*ஒருவேளை அந்த நபர் நம்மிடம் மன்னிப்பு கேட்டு எழுதாத, சொல்லாத பட்சத்தில் நாம் மனமொடிந்து போக வேண்டிய அவசியமில்லை. கர்த்தரிடம் நாம் ஒப்புவித்தால் நீதியுள்ள நியாயாதிபதி நிச்சயமாய் பொறுப்பெடுத்து கொள்வார். அல்லேலூயா!*

*நம்மை தவறாய் புரிந்து கொள்ளும் அனைவரிடமும் போய் நம்மை நியாயப்படுத்த வேண்டிய அவசியமில்லை. நான் அப்படி சொல்லவில்லை, செய்யவில்லை என்று காரணம் கூறி கொண்டிருக்க வேண்டிய அவசியமும் இல்லை. 'கர்த்தரை நோக்கி அமர்ந்திரு' என்று தாவீது சொல்வது போல எல்லா காரியங்களையும் அவரிடத்தில் ஒப்புவித்து கர்த்தர் கிரியை செய்யும்படி காத்திருக்கும்போது, தேவன் மகிமையான காரியங்களை செய்வார்.*

.

*இயேசுகிறிஸ்துவும் வீணான குற்றசாட்டுகளுக்கு மத்தியில் நிற்கும்போது வாய் திறவாதிருந்தார். மூன்றாம் நாளில் அவர் மகிமையாக உயிர்தெழுந்த போது அதுவே அதற்கு பதிலாக அமைந்தது. ஆகவே இப்படிப்டபட்ட வீண் நிந்தனைகளின் மத்தியில் நாம் செய்ய வேண்டியது, ஒவ்வொருவரிடமும் போய் நம் நியாயத்தை கூறுவது அல்ல, பொறுமையுடன் நிந்தனைகள் சகித்த இயேசுவையே நினைத்து தேவன் நியாயம் செய்ய விட்டு விட வேண்டும். 'ஆகையால் நீங்கள் இளைப்புள்ளவர்களாய் உங்கள் ஆத்துமாக்களில் சோர்ந்துபோகாதபடிக்கு, தமக்கு விரோதமாய்ப் பாவிகளால்*

*செய்யப்பட்ட இவ்விதமான விபரீதங்களைச் சகித்த அவரையே நினைத்துக்கொள்ளுங்கள்' (எபி-12:3) என்;று வேத வசனம் கூறுகிறதல்லவா?*

.

*நாம் அப்படி நிந்தித்தவர்களோடு போராடுவோம் என்றால் கர்த்தர் ஒன்றும் செய்யாமல் விட்டுவிடுவார். ஆனால் கர்த்தரின் கரத்தில் நாம் ஒப்புக்கொடுத்தால் அவர் நம்மை உண்மையுள்ளவர்கள் என்று நிரூபிப்பதுமன்றி, அவர்களையும் உண்மையுள்ளவர்களாக்குவார். ஆமென் அல்லேலூயா!*

*பெரு வெள்ளம் மதிலை மோதி*
*பெருங்காற்றும் அடிக்கையில்*
*எங்கள் புகலிடமே எந்தன் தஞ்சமே*
*பெருங்கன்மலையின் நிழலே*

*உம்மை போற்றி பாடுவேன்*
*எங்கள் உயர்ந்த கன்மலையே*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே எங்களை குறித்து அநியாயமாய் தூற்றி திரிகிறவர்கள் மேல் நாங்கள் கோபம் கொள்ளாமல் நீர் எல்லாவற்றையும் பார்த்து கொள்வீர் என்று உம்முடைய கரத்தில் வைத்துவிடும் பொறுமையை எங்களுக்கு தருவீராக. நாங்கள் பொறுமையிழந்து உம்முடைய நாமம் தூஷிக்கப்பட காரணர்களாக இல்லாதபடி எங்களை உம்மிடத்தில் ஒப்படைக்கிறோம். நீர் அவர்களை மாற்றப் போவதற்காக நன்றி. இயேசுகிறிஸ்துவின் இனிய நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் நல்ல தகப்பனே ஆமென்.*

# 7. வழுவாத விசுவாசம்

என்னிடத்தில் இடறலடையாதிருக்கிறவன் எவனோ அவன் பாக்கியவான் என்றார். - (மத்தேயு 11:6).

சார்லஸ் டெம்பிள் டான் என்ற பெயரை கேட்டவுடன் யாரேனும் உங்களுடைய ஞாபகத்திற்கு வருகிறார்களா, அதற்கு வாய்ப்பில்லை. ஆனால் பில்லி கிரஹாம் என்றவுடன் உங்களுக்கு அநேகமாக தெரிநதிருக்கும், இன்று உலகப்புகழ் பெற்று விளங்கும் பில்லி கிரஹாமும், சார்லசும் இளவயது நண்பர்கள். 1945ல் நடைபெற்ற ஒரு கிறிஸ்தவ வாலிபர் கூட்டத்தில் நண்பர்கள் ஆனார்கள். பின் இவர்கள் இருவரும் சேர்ந்து ஐரோப்பா முழுவதும் பிரயாணம் செய்து சுவிசேஷ கூட்டங்கள் நடத்தினர். பின் நாட்களில் இந்த சார்லஸ் 1200 பேர் கொண்ட ஒரு சபையை தனி மனிதனாக உருவாக்கினார். அந்நாட்களில் அநேகர் பில்லி கிரஹாமை விட சார்லஸ்தான் மிக வல்லமையான ஊழியராக வருவார் என கருதினார்கள்.

இப்படி வல்லமையாக ஊழியம் செய்த சார்லஸ் வாழ்வில் திடீரென ஓர் பெரிய மாற்றம் ஏற்பட்டது. அதற்கு காரணம் வாழ்க்கை என்ற மாதப்பத்திரிக்கையே ஆகும். அதில் வட ஆப்ரிக்காவில் நிலவிவரும் கடும் பஞ்சத்தை குறித்த புகைப்பட செய்தி வெளியாயிருந்தது. அதில் ஒரு நீக்ரோ பெண்மணி பஞ்சத்தால் இறந்த ஒரு குழந்தையை கையில் வைத்தவாறு வானத்தை அண்ணாந்து பார்ப்பது போல படமிருந்தது, இந்த படத்தை பார்த்த சாலஸ்க்கு ஒரு சந்தேகம் எழும்பலாயிற்று. அன்பு நிறைந்த தெய்வம் இந்த உலகில் இருந்தால் மழை

*இல்லாமல் இந்த குழந்தை இறக்க நேரிடுமா? இந்த தாயின் வேதனையை அவர் அறிந்திருந்தாரானால் நிச்சயம் இது நடக்காது என்ற சிந்தனை உருவானது. அவரது வலுவான விசுவாசம் மிகுந்த ஆட்டம் கண்டது. அநேக கேள்விகளால் குழப்பப்பட்டு விசுவாசத்தை முற்றிலும் இழந்து ஊழியத்தை விட்டு விலகலானார். அதோடு பில்லி கிரஹாமையும் தேவனை நம்புவது மடத்தனம் என்றார். ஆனால் அவரோ கேள்வி அநேகம் இருந்தாலும், தன் விசுவாசத்தை காத்து கொணடு கிறிஸ்துவுக்குள் நிலைத்திருந்தார். சார்லஸோ தீவிர நாஸ்திகவாதியாகி, அதன் கொள்கையை தனது நாவல்களிலும் புத்தகங்களிலும எழுத ஆரம்பித்தார்.*

*வேதத்திலே யோவான்ஸ்நானகன் இயேசுகிறிஸ்துவை இவ்வுலகிற்கு காட்டுவதற்காக அனுப்பப்பட்ட தீர்க்கதரிசி. இயேசுகிறிஸ்துவை உலகத்தின் பாவத்தை சுமந்து தீர்க்கும் தேவ ஆட்டுக்குட்டி என இஸ்ரவேலருக்கு ஆணித்தரமாக அறிவித்தார். ஆனால் பின்நாட்களில் ஏரோது ராஜாவினால் சிறையில் அடைக்கப்பட்டபோது, இயேசுகிறிஸ்துவால் அற்புதங்கள் எதுவும் நடந்து, தான் விடுவிக்கப்படாததால் வரப்போகிற மேசியா நீர் தானா என்று இயேசுவிடம் கேட்டனுப்பினார். அப்போது இயேசுகிறிஸ்து 'என்னிமித்தம் இடறலடையாதிருக்கிறவன் பாக்கியவான்' என்றார்.*

*பிரியமானவர்களே, நாம் ஒவ்வொருவரும் சிந்திக்கும் திறனிலும், ஒரு காரியத்தை ஆராய்வதிலும் வித்தியாசமுண்டு, ஆகவே பிசாசானவன் நம்மை வீழ்த்த பலவகையான வழிமுறைகளை கையாளுகிறான். சிலரை பாவத்திலும், சிலரை குழப்பமான தத்துவங்களினாலும், சந்தேகங்களினாலும்*

*விசுவாசத்தினின்று விழப்பண்ணுகிறான். பிசாசின் தந்திரங்களுக்கு ஜாக்கிரதையாய் நம்மை காத்துக கொள்ள வேண்டும். விசுவாசத்தையும் சத்தியத்தையும் பற்றிய சந்தேகங்கள் நமக்கு வரும்போது, பொறுமையாக தேவ சமுகத்தில் காத்திருந்து ஜெபிக்க வேண்டும். ஆண்டவர் நமது விசுவாசம் வழுவாதபடி போதித்து நடத்துவார். வேத வசனத்திற்கு முதலிடம் கொடுத்து, இரவும் பகலும் ஆசையாய் தியானம் பண்ணும்போது நாம் சார்லஸை போல வழி விலகாமல் பில்லி கிரஹாமை போல தேவனுக்கென்று எழுந்து பிரகாசிப்போம். நித்திய ஜீவனையும் சுதந்தரித்து கொள்வோம். ஆமென் அல்லேலூயா!*

*கோலியாத்தை முறியடிப்போம்*
*இயேசுவின் நாமத்தினால்*
*விசுவாச கேடகத்தால் நாம்*
*பிசாசை வென்றிடுவோம்*
*வெற்றி கொடி பிடித்திடுவோம்*
*நாம் வீர நடை நடந்திடுவோம்*
*காடானாலும் மேடானாலும்*
*கர்த்தருக்கு பின் நடப்போம்*
*கலப்பையில் கை வைத்திட்டோம்*
*நாம் திரும்பி பார்க்க மாட்டோம்*

***ஜெபம்:*** *எங்களை நேசித்து வழிநடத்தும் பரலோக பிதாவே, எங்கள் விசுவாசம் வழுவி போக தக்கதாக பிசாசானவன் கொண்டு வருகிற எந்த சந்தர்ப்பத்திலும் நாங்கள் உம்மை விட்டு பின் வாங்கி போகாத வண்ணம்*

*விசுவாசத்திலே உறுதியாய் தரித்திருக்க உதவி செய்யும். எங்கள் விசுவாசத்தை வர்த்திக்க பண்ணும் தகப்பனே. நாங்கள் உம்மேல் வைத்திருக்கிற நம்பிக்கையும், விசுவாசமும் எத்தனை புயல் வந்தாலும், காற்று வீசினாலும் மாறாதபடிக்கு, உம்மிலே ஆழமாய் வேரூன்றி நிலைத்திருக்கவும், எந்த காரணத்தினாலும் உம்மிடத்திலே இடறலடையாதபடிக்கும் எங்களை காத்தருளும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 8. அன்பே பிரதானம்

*பிரியமானவர்களே, ஒருவரிலொருவர் அன்பாயிருக்கக்கடவோம்; ஏனெனில் அன்பு தேவனால் உண்டாயிருக்கிறது; அன்புள்ள எவனும் தேவனால் பிறந்து, அவரை அறிந்திருக்கிறான். அன்பில்லாதவன் தேவனை அறியான்; தேவன் அன்பாகவே இருக்கிறார் - (1 யோவான் 4:7,8).*

*டோக் நிக்கோலஸ் (Doug Nichols) என்பவர் இந்தியாவிற்கு மிஷனரியாக வந்தார். அவர் இந்திய மொழியை கற்க ஆரம்பித்த போது அவருக்கு காச நோய் (Tuberculosis) பிடித்தது. அதனால் அவர் ஒரு டிபி சானிடோரியத்தில் இருக்க நேர்ந்தது. அந்த இடம் மிகவும் அழுக்காகவும், அசுத்தமாகவும் இருந்தது. அநேக வியாதியஸ்தர்களும் இருந்தனர். அந்த இடத்தில் அந்த நோயாளிகளுக்கு சுவிசேஷம் சொல்ல வேண்டும் என்று ஆர்வத்தோடு அவர்களுக்கு சுவிசேஷ, கைபிரதிகளை கொடுக்க ஆரம்பித்தார்.*

*அவர் அப்படி கொடுக்க ஆரம்பித்த போது, அதை ஒருவரும் வாங்க முன்வரவில்லை. புத்தகங்களை கொடுத்தால் அதையும் யாரும் வாங்கவில்லை. அவர்களுகடைய மொழி தெரியாததால் அவர்களோடு பேசவும் முடியவில்லை. ஆகவே மிகவும் சோர்ந்து போனார். அவருக்கு இருந்த வியாதியினால் அவர் வெளியே செல்லவும் முடியாத நிலை, உள்ளே இருப்பவர்களுக்கும் அவர் பிரயோஜனமற்றவராய் வாழ்நாளை கடத்த வேண்டிய நிலைமை ஏற்பட்டது.*

*ஒவ்வொரு நாளும் இரவு இரண்டு மணியளவில் அவர் டிபி வியாதியினால் இரும ஆரம்பித்து தொடர்ந்து இருமிக் கொண்டே இருந்தார். அப்போது அவர் தூரத்தில் ஒரு வயதான மனிதர், தன் படுக்கையில் இருந்து எழுந்தரிக்க முயற்சித்து, முடியாமல் தவித்து, பிறகு தன் படுக்கையில் மீண்டும் விழுந்து அழுதபடியே படுத்துக் கொண்டிருப்பதை பார்த்தார். அந்த மனிதர் மிகவும் தளர்ந்து பெலவீனமாய் இருந்தபடியால் அவரால் எழுந்து பாத்ரூமுக்கு போக முடியவில்லை. அதனால் படுக்கையிலேயே சிறுநீர் கழித்து, அதனால் அங்கிருந்த நர்சுகள் அவரிடம் முகம் சுழித்து, மற்ற நோயாளிகள் அதனால் வரும் துர் நாறற்த்தினால் அவரை இழிவாக பேசுவதையும் நிக்கோலஸ் பார்த்தார்.*

*அடுத்த நாள் மீண்டும் அவர் இரவில் இரும ஆரம்பித்தபோது, அந்த வயதான மனிதர் மீண்டும் எழுந்தரிக்க ஆரம்பித்து, முடியாமல் தேம்ப ஆரம்பித்தார். அப்போது நிக்கோலஸ் தன் படுக்கையை விட்டு எழுந்து, அந்த வயதான மனிதரிடம் போய், அவரை ஒரு குழந்தையை போல் தூக்கி பாத்ரூமிற்கு கொண்டு சென்று, அவர் சிறுநீர் கழிக்க உதவி செய்து, மீண்டும் அவரை படுக்கையில் கொண்டு வந்து கிடத்தினார். அப்போது அந்த வயதான மனிதர், அவரை பிடித்து முத்தமிட்டு நன்றி என்று சொல்வதை கண்டார்.*

*அடுத்த நாள் காலையில் மற்ற நோயாளிகள் அவரிடம் வந்து, அவர் கொடுத்த கைபிரதிகளை வாங்கி வாசிக்க ஆரம்பித்தனர். அவரிடம் தேவனை குறித்த விளக்கங்களை*

*கேட்க ஆரம்பித்தனர். அங்கிருந்த டாக்டர்களும் நர்சுகளும் நோயாளிகளும் அவர் அங்கு இருந்த நாட்களில் கர்த்தருக்குள் வழிநடத்தப்பட்டனர்.*

*அவர் செய்த ஒரே ஒரு காரியம், அந்த வயதான மனிதரை பாத்ரூமிற்கு கொண்டுசென்றது தான். அதை யார் வேண்டுமானாலும் செய்திருக்கலாம் ஆனால், அதை யாரும் செய்ய முன்வரவில்லை. ஏனென்றால் அன்பு அந்த இடத்தில் இல்லை.*

*அவர் அங்கு தன் கைபிரதிகளை கொடுத்து செய்ய முடியாததை, பெரிய பிரசங்கத்தை கொண்டு செய்ய முடியாததை, தன்னிடம் உள்ள பொருட்களை கொடுத்து செய்ய முடியாததை ஒரு சிறிய தியாகமாக செய்த காரியம் செய்ய வைத்தது. அன்பு தேவனால் உண்டாயிருக்கிறது; அன்புள்ள எவனும் தேவனால் பிறந்து, அவரை அறிந்திருக்கிறான். அன்பில்லாதவன் தேவனை அறியான்; தேவன் அன்பாகவே இருக்கிறார்.*

*அன்பாகவே இருக்கிற தேவனின் அன்பை, இந்த உலகத்தில் அன்புக்காக ஏங்கி கொண்டு இருக்கும் மனித குலத்திற்கு கொண்டு செல்வோமா? ஒரு சிறிய மனிதாபிமான காரியம் அவர்களுடைய சிந்தனையையே மாற்றி விடும். மிகவும் பிரச்சனையில் இருக்கும் ஒருவரிடம், அவருடைய பிரச்சனைகளை கேட்டறிந்து, அவரிடம் ஆறுதலாக பேசி, நான் உங்களுக்காக ஜெபிக்கிறேன் என்று கூறும்போது, அந்த மனிதர் தன் வாழ்நாளில் நீங்கள் சொன்ன ஆறுதலான*

*வார்த்தைகளை மறக்கவே மாட்டார். ஒரு சிறு அன்பான செய்கை எத்தனை ஆறுதலை கொண்டு வரும் தெரியுமா?*

*கடந்த வாரம் மிகவும் தலைவலியால் துடித்த போது ஒரு சகோதரி என் தலையை அமுத்தி தடவி கொடுத்த போது ஒரு ஏஞ்சல் என் தலையை தடவி கொடுத்த மாதிரியாக நான் உணர்ந்தேன். ஒரு சிறிய மனிதாபிமான காரியம் தேவையுள்ளவர்களை நிச்சயமாக தேவனிடத்திற்கு வழிநடத்தும். தேவனின் அன்பை நாம் மற்றவர்களுக்கு வெளிப்படுத்தும் கருவியாக செயல்படுவோமா? அன்புள்ள எவனும் தேவனால் பிறந்து, அவரை அறிந்திருக்கிறான். ஆமென் அல்லேலூயா!*

*அன்பே பிரதானம்*
*சகோதர அன்பே பிரதானம்*

*பலபல பாஷை படித்தறிந்தாலும்*
*கலகலவென்னும் கைமணியாமே*

*சினமடையாது தீங்கு முன்னாது*
*தினமழியாது தீமை செய்யாது*

***ஜெபம்:** அன்பாகவே இருக்கும் எங்கள் நல்ல தகப்பனே, உம்முடைய பெரிதான அன்பினால் பாவிகளாகிய எங்களையும் இரட்சித்தீரே உமக்கு ஸ்தோத்திரம். நாங்கள் ஒருவரிலொருவர் அன்பாயிருக்க கிருபை செய்யும். எங்கள் கிரியைகளில், அன்பில்லாத இந்த உலகத்திற்கு அன்பாகிய உம்மை*

*வெளிப்படுத்த எங்கள் ஒவ்வொருவரையும் அன்பால் நிரப்பும். எங்கள் சரீரத்தை சுட்டெரிக்க ஒப்புகொடுத்தாலும் அன்பில்லாவிட்டால் அதனால் பயன் ஒன்றுமில்லை என்பதை உணர்ந்து, உம்முடைய அன்பை மற்றவர்களுக்கு வெளிப்படுத்த கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 9. தேவனற்றவர்களின் வாழ்வு

*அக்காலத்திலே கிறிஸ்துவைச் சேராதவர்களும், இஸ்ரவேலுடைய காணியாட்சிக்குப் புறம்பானவர்களும், வாக்குத்தத்தத்தின் உடன்படிக்கைகளுக்கு அந்நியரும், நம்பிக்கையில்லாதவர்களும், இவ்வுலகத்தில் தேவனற்றவர்களுமாயிருந்தீர்களென்று நினைத்துக்கொள்ளுங்கள் (எபேசியர் 2:12)*

*நாம் இரட்சிக்கப்படாத நாட்கள் சற்று நினைத்து பார்ப்போம் என்றால், நாம் கிறிஸ்துவை சேராதவர்களும், தேவனுடைய பரலோக இராஜ்யத்திற்கு புறம்பானவர்களும், வாக்குத்தத்தம் எதையும் பெற்று கொள்ளாதவர்களும், நம்பிக்கையே இல்லாதவர்களுமாக எல்லாவற்றிற்கும் மேலாக தேவனே நம் வாழ்வில் இல்லாதவர்களாக வாழ்ந்து வந்திருக்கிறோம். ஆனால் இப்போதோ எத்தனை பெரிய வித்தியாசம்! அந்த பயங்கரமான நிலைமையிலிருந்து நாம் எத்தனையாக மாறுபட்டு இருக்கிறோம்! அல்லேலூயா!*

*நான் வேலை செய்யும் இடத்தில் ஒரு ஜெர்மானிய பெண், பாகிஸ்தானின் தூதரகத்தில் வேலை செய்யும் நபரை மணந்து கொண்டாள். ஒரு நோயாளியாக எப்போதும் வந்து சிகிச்சை எடுத்து கொண்டு போவது வழக்கம். அப்போது வரும்போதெல்லாம் தான் ஒரு முக்கியமான ஆள் என்றும், தன்னை உடனே கவனித்து கொள்ள வேண்டும் என்று எதிர்ப்பார்ப்பாள்.*

*காலங்கள் கடந்தது. சமீபத்தில் ஒரு நோயாளியாக வந்திருந்ததை பார்த்தபோது பரிதாபமாக இருந்தது. மிகவும் மெலிந்து, தான் எங்கிருக்கிறோம் என்று அறியாமல், கவனிக்க ஆளில்லாமல், ஏழு நாட்கள் எதை கொடுத்தாலும் உண்ணாமல், போட்டிருந்த உடையை மாற்ற சம்மதிக்காமல், அழுக்காக குளியாமல் பரிதாபமாக இருந்தாள். கடைசியாக அவளை மனநோய் மருத்துவமனைக்கு அனுப்பி இருந்தார்கள்.*

*இந்த பெண்ணின் வாழ்க்கையை பார்க்கும்போது, என்ன நடந்தது? கர்த்தர் அவள் வாழ்வில் இல்லை. உலகம் தான் இருந்தது. ஒருவேளை கர்த்தருக்குள் இருந்திருந்தால் அவளுக்காக ஜெபிக்க ஆட்கள் இருந்திருப்பார்கள். அவளுடைய வாழ்க்கை வேறுவிதமாக இருந்திருக்கலாம்.*

*நாம் மற்றவர்களுடைய வாழ்க்கை பார்த்து கற்று கொள்ள வேண்டிய பாடங்களை கற்று கொள்ளத்தான் வேண்டும். கர்த்தரை ஏற்று கொண்டவர்களின் வாழ்விற்கும், ஏற்று கொள்ளாதவர்களின் வாழ்விற்கும் உள்ள வித்தியாசத்தை நாம் காணத்தான் வேண்டும். அதற்காக கர்த்தரை ஏற்று கொண்டவர்களின் வாழ்வில் பிரச்சனையே வராது என்றோ, வழியெல்லாம் சந்தோஷம்தான் என்றோ சொல்ல வரவில்லை.*

*எவ்வளவுதான் பணம் இருந்தாலும் அது வாழ்க்கை அல்ல, நம் வாழ்வில் சமாதானமும் சந்தோஷமும் இருந்தாலே அதுதான் வாழ்க்கை. அந்த சமாதானத்தை கொடுப்பது யார்? இந்த உலகமோ, பணமோ, செல்வாக்கோ, சொத்துக்களோ*

அல்ல, கர்த்தர் மாத்திரமே கொடுக்க முடியும். நமக்கெல்லாம் தெரியும் நம் முன்னாள் முதலமைச்சர் ஜெயலலிதா அவர்களுக்கு இல்லாத சொத்தா? செல்வாக்கா? பணமா? எல்லாம் இருந்தாலும் கடைசி நாட்களில் அவரை காணக்கூட யாரும் இல்லாதபடி, அவரும் யாரையும் காணாதபடி அப்படியே மரித்து போனார். எத்தனை சொத்து இருந்தாலும் அது அவருக்கு கடைசி நாளில் துணையாக இருக்கவில்லை.

ஆனால் ஒரு விசுவாசி மரிக்கும்போது பாருங்கள், அவருக்காக ஜெபிக்க எத்தனை பேர்? சமீபத்தில் மரித்த சகோதரன் நபில் கொரோசியை உதாரணமாக எடுத்து கொண்டால், அவருக்காக முகம் தெரியாக எத்தனை பேர் அவர் சுகமாக வேண்டும் என்று கண்ணீரோடு ஜெபித்தோம்? உலகமுழுவதிலுமுள்ள விசுவாசிகள் ஜெபித்தோமல்லவா? கர்த்தருடைய சித்தம் வேறாக இருந்தாலும், அவருடைய கடைசி நாட்களில் அவரோடு அவர் பாரத்தை சுமக்க, அவரோடு கூட இருக்க, ஜெபிக்க, ஆறுதல் படுத்த எத்தனை பேரை கர்த்தர் கட்டளையிட்டாலல்லவா?

தேவனுடைய இராஜ்யத்தை சேர்நதவர்கள் மட்டுமல்ல, நமக்காக ஜெபிக்க, நம்மை ஆதரவாக விசாரிக்க, நம்மை தேற்ற சபையினரையும், போதகரையும் கர்த்தர் வைத்திருக்கிறாரல்லவா? எங்கள் சபையில் வருகிற யாரும் இதுவரை வியாதி என்று படுக்கையில் விழுந்தது இல்லை. போதகரின் ஜெபத்தினாலும், சபையில் ஏறெடுக்கப்படும் ஜெபங்களினாலும் நமக்கு ஒரு பாதுகாப்பை கர்த்தர்

*கொடுத்திருக்கிறாரல்லவா?, எத்தனை சிலாக்கியம் இது! எத்தனைப் பேருக்கு இந்த சிலாக்கியம் உண்டு?*

*கர்த்தரை ஏற்று கொண்டதால் நாம் இப்போது கிறிஸ்துவை சேர்ந்தவர்களும், இஸ்ரவேலின் காணியாட்சிக்கு உள்ளானவர்களும், வாக்குதத்தின் உடன்படிக்கைக்கு சொந்தக்காரர்களும், நம்பிக்கை உள்ளவர்களும், தேவனை உடையவர்களுமாயிருக்கிறோமல்லவா? எத்தனை பெரிய பாக்கியம் இது! எத்தனை பெரிய சிலாக்கியம் இது?*

*எதை பெற்று கொள்ளாவிட்டாலும் கர்த்தரை பெற்று கொள்வோம். அவரை உறுதியாக பற்றி கொள்வோம். தேவனற்றவர்களாக வாழ்வதைவிட பரிதாபமான வாழ்வு வேறு இல்லை என்பதை உணர்ந்து கொள்வோம். இருளின் அதிகாரத்திலிருந்து நம்மை விடுதலையாக்கி, தமது அன்பின் குமாரனுடைய ராஜ்யத்திற்கு உட்படுத்தினவருமாயிருக்கிற பிதாவை ஸ்தோத்திரித்து அவருக்கு சாட்சியாக வாழ்வோமாக. கர்த்தரே நமக்கு பெரிய சொத்தாக, முத்தாக, வாழ்வின் நிறைவாக இருப்பாராக. ஆமென் அல்லேலூயா!*

*இருளின் அதிகாரம் நீக்கி விட்டீர்*
*இயேசு அரசுக்குள் சேர்த்து விட்டீர்*
*உமக்கு சொந்தமாய் வாங்கி கொண்டு*
*உரிமை சொத்தாக வைத்து கொண்டீர்*

*நன்றி தகப்பனே நன்மை செய்தீரே*
*நன்றி தகப்பனே நன்மை செய்தீரே*

**ஜெபம்:** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, நாங்கள் உம்முடைய பிள்ளைகளாக இருப்பது எங்களுக்கு கிடைத்த பெரிய பாக்கியம் ஐயா. உமக்கு கோடானு கோடி நன்றிகளை ஏறெடுக்கிறோம். நீரே எங்களுக்கு சமாதானம் தருகிறவர், உம்மையன்றி எங்களுக்கு வேறு கதி இல்லை தகப்பனே, நீரே எங்கள் வாழ்வின் முதன்மையாக, சொத்தாக இருப்பீராக. இயேசுகிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

## 10. தேவனுடைய ஈவு

*கிருபையினாலே விசுவாசத்தைக்கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள்; இது உங்களால் உண்டானதல்ல, இது தேவனுடைய ஈவு; ஒருவரும் பெருமைபாராட்டாதபடிக்கு இது கிரியைகளினால் உண்டானதல்ல - (எபேசியர் 2:8-9).*

ஒரு ஏழைப் பெண் தன்னுடைய வியாதியில் தவிக்கும் சிறுப்பிள்ளைக்கு திராட்சை கொண்டு வரும்படி பக்கத்தில் இருந்த ஒரு திராட்ச தோட்டத்தில் போய் அங்கிருந்த காவல்காரனிடம் தன்னிடமிருந்த பணத்தைக் கொடுத்து, கொஞ்சம் திராட்சை கொடுக்கும்படி வேண்டினாள். ஆனால் அந்த காவல்காரனோ, அந்த பெண்ணின் ஏழை நிலையைக் கண்டு, விரட்டினான். கொஞ்சமும் கொடுக்க முன்வரவில்லை.

அந்த சமயத்தில் அந்த பக்கம் வந்த அந்த நாட்டு இராஜாவின் மகள், நடந்த காரியத்தை கண்டாள். அந்த பெண்ணை அழைத்து, என்ன நடந்தது என்று விசாரித்தாள். அப்போது அந்தப் பெண், தன்னிடமிருந்த சிறுப்பணத்தை அந்த இளவரசியிடம் கொடுத்து, 'அம்மா, இந்த பணத்தை எடுத்துக் கொண்டு, என் மகளுக்கு திராட்சை பழம் தாருங்கள்' என்று வேண்டினாள்.

அப்போது அந்த இளவரசி, அந்தப் பெண்ணைப் பார்த்து, 'உனக்கு புரியவில்லையா? இந்தத்தோட்டம் என்னுடைய தகப்பனாருடையது. என் தகப்பனார் ஒரு வியாபாரி அல்ல, அவர் இந்த நாட்டின் இராஜா, அவர் பணத்திற்கு

கொடுப்பவர் அல்ல, உனக்கு வேண்டிய மட்டும் திராட்சைப் பழங்களை எடுத்துக் கொள்' என்று கூறினாள். அந்தப் பெண் தன் மகளுக்கு வேண்டிய திராட்சைப்பழங்களை எடுத்துச் சென்றாள்.

தேவன் கொடுக்கும் இரட்சிப்பும் இலவசமே! அது இலவசமாய் இருப்பதால்தான் அநேகர் அதைப் பெற்றுக் கொள்ள முன்வருவதில்லை. அதையே உங்கள் சரீரங்களை கொடூரமாய் கீறிக் கொள்பவர்களுக்கு பரலோக இராஜ்யம் உண்டு என்றால் அநேகர் முன்வருவார்கள். அல்லது சில காரியங்களை நீங்கள் செய்தால்தான் இரட்சிப்பு உண்டு என்றால் அதையும் செய்ய ஆட்கள் முன்வருவார்கள். ஆனால், இரட்சிப்பு இலவசம் என்றால், மனிதனுடைய மூளையில், 'அது எப்படி நான் எதுவும் செய்யாமலே எனக்கு பரலோக இராஜ்யம் எப்படி கிடைக்கும்?' என்று யோசிக்கிறார்கள்.

எந்த கிரியைகளினாலும் அந்த விலையேறப்பெற்ற இரட்சிப்பை பெற்றுக் கொள்ள முடியாது. ஒரு சிலர் மிகவும் நல்லவர்களாக, மற்றவர்களுக்கு வாரி வழங்குபவர்களாக, அவர்களது தேவைகளில் உதவி செய்பவர்களாக இருப்பார்கள். அதைக் காணும் மற்றவர்கள் இவர்களுக்கு நிச்சயம் பரலோகம் உண்டு என்று நினைப்பார்கள். இவர்களுக்கு கிடைக்காவிட்டால் வேறு யாருக்கு என்று சொல்வார்கள். ஆனால் வேதம் திட்டவட்டமாக சொல்கிறது, ஒருவரும் பெருமைபாராட்டாதபடிக்கு இது கிரியைகளினால் உண்டானதல்ல என்று.

*இயேசுகிறிஸ்து சிலுவையில் கோரப்பாடுகள் பட்டு, தம்முடைய மாசில்லாத இரத்தத்தை சிந்தி, நமக்கு இந்த இரட்சிப்பை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறார். அதை நாம் எந்த விலைக் கொடுத்தும் வாங்க முடியாது. நம்முடைய எந்த நல்ல கிரியைகளும் அதற்கு எந்த வகையிலும் ஈடாகாது. கிருபையினாலே விசுவாசத்தைக்கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள்; இது உங்களால் உண்டானதல்ல, இது தேவனுடைய ஈவு என்று வேதம் கூறுகிறது.*

*அந்த விலையேறப்பெற்ற ஈவாகிய இலவசமான இரட்சிப்பை நாம் விசுவாசித்து பெற்றுக் கொள்வோமா? நாம் செய்யும் எந்த காரியங்களும் நம்மை பரலோகத்தில் சேர்க்கவே முடியாது. கிறிஸ்துவின் இரத்தத்தினால் கழுவப்பட்டு, விசுவாசத்தினாலே அந்த இரட்சிப்பை நாம் பெற்றுக் கொள்வோமாக. எந்த பணமும், உடலை வருத்துதலும், நற்கிரியைகளும் செய்ய முடியாததை நம் தேவன் தம்முடைய ஒரே பேறான குமாரனாகிய கிறிஸ்துவின் இரத்தத்தில் வைத்துவிட்டார். அந்த இரத்தத்தினால் கழுவப்பட்டாலே போதும், நாம் இரட்சிக்கப்படுவோம், பரலோக இராஜ்யத்திற்கு தகுதியாவோம்.*

*மேலே உள்ள கதையில் அந்த இளவரசி சொன்னதுப்போல, பரலோக இராஜ்யம் முழுவதும் நம் பரம தகப்பனுக்குத்தான் சொந்தம். அதை பெற்றுக் கொள்ள நாம் எந்த கிரயத்தையும், எந்த சம்பிரதாயங்களையும் செய்ய வேண்டியதில்லை. நம் பாவங்களை கர்த்தரிடம் அறிக்கையிட்டு இரட்சிப்பை*

இலவசமாகப் பெற்றுக் கொள்வோம். கர்த்தர் சீக்கிரம் வருகிறார். ஆயத்தமாவோம். ஆமென் அல்லேலூயா!

உளையான சேற்றில் வாழ்ந்த என்னை
தூக்கி எடுத்தீரே
கல்வாரி இரத்தம் எனக்காக சிந்தி
கழுவி அணைத்தீரே
நன்றி உமக்கு நன்றி
அப்பா பிதாவே அன்பான தேவா
அருமை இரட்சகரே ஆவியானவரே

**ஜெபம்:** எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, நாங்கள் உமக்கு விரோதமாக செய்த பாவங்களை போக்கும்படி எங்களுடைய கிரியைகள் எதுவும் இல்லாமல், கிறிஸ்துவின் விலையேறப்பெற்ற இரத்தத்தினாலே கழுவப்படும்படி நீர் வைத்திருக்கிற அநாதி திட்டத்திற்காக உமக்கு நன்றி செலுத்துகிறோம். எங்களுடைய எந்த நல்ல செயல்களும், கிரியைகளும் எங்களை பரலோகத்தில் சேர்க்காது என்பதை உணர்ந்து, விசுவாசித்து, எங்கள் பாவங்களை அறிக்கையிட்டு, இயேசுகிறிஸ்துவின் இரத்தத்தால் கழுவப்பட்டு, பரலோக இராஜ்யத்திற்கு பங்குள்ளவர்களாக எங்களை மாற்றும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.

# 11. உலகத்தில் அன்புகூர்ந்த பிதாவானவர்

தேவன், தம்முடைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்புகூர்ந்தார் - (யோவான் 3:16).

முதலாம் உலக மகா யுத்தம் நடந்து கொண்டிருந்த போது, ஒரு தகப்பன் தன் மகனை கூட்டி கொண்டு தெருவில் நடந்து சென்று கொண்டிருந்தார். அப்பொழுது ஒவ்வொரு வீட்டின் வெளியிலும் தங்கள் வீட்டிலிருந்து ஒரு மகன் போருக்கு சென்றிருப்பதை குறிக்கும் வகையில் அடையாளமாக ஒரு நட்சத்திரத்தை மாட்டி இருந்தார்கள். அந்த மகன் தன் தகப்பனாரிடம், ஏன் அப்பா, இநத நட்சத்திரத்தை மாட்டி வைத்திருக்கிறார்கள் என்று கேட்டான். அதற்கு தகப்பன் அதன் முக்கியத்தை அவனுக்கு விளக்கினார்.

அவர்கள் நடந்து சென்று கொண்டிருந்தபோது, எந்த வீட்டில் நட்சத்திரம் தொங்கி கொண்டிருந்ததோ, அந்த வீட்டை கண்டவுடன் அந்த சிறுவன் நின்று, தன் கைகளை உற்சாகமாய் தட்டி நடந்து வந்து கொண்டிருந்தான். திடீரென்று வானத்தில் இருந்த ஒரு நட்சத்திரத்தை காட்டி, 'அப்பா, அப்பா இங்க பாருங்க, தேவனும் தம்முடைய மகனை அனுப்பியிருக்கிறார்' என்று தன் கரங்களை உற்சாகமாக தட்டினான்.

*அநேகர் தங்கள் நாட்டிற்காக தங்கள் உயிரை கொடுத்தார்கள். ஆனால் தேவனோ இந்த உலகத்திற்காக தம்முடைய ஒரே பேறான குமாரனையே இரட்சிக்கும்படியாக கொடுத்து விட்டார். அல்லேலூயா!*

*வேறு எந்த மதத்திலும் தம் மகனை உலகத்தில் பாடுகளின் வழியாக சிலுவை மரணத்தின் வழியாக உலகத்திற்கு இரட்சிப்பை கொடுத்ததாக கூறப்படவில்லை. வேறு யாரும் பாவிகளுக்காக தங்களை ஒப்புக்கொடுத்ததாகவும் எந்த வேதத்திலும் இல்லை.*

*ஒரு தகப்பனுக்காகவது, தாய்க்காவது, தங்கள் மகனை தங்கள் நாட்டிற்காக ஒப்புகொடுப்பதும் போருக்கு அனுப்பி வைப்பதும் மிகவும் கடினமான காரியம் என்று நாம் யாவரும் அறிவோம். தங்கள் பிள்ளைகள் ஒவ்வொரு பெற்றோருக்கும் தங்கள் கண்களை போல. நம் தேவனுக்கும் தமது ஒரே பேறான குமாரனை அனுப்புவது மிகவும் எளிதாயிருந்திருக்குமா? இல்லை, அவருக்கும் அது மிகவும் கடினமான காரியமே!*

*அதுவும், அவர் இந்த உலகத்தில் செய்த மூன்றரை வருட ஊழியத்தில் நன்மையான காரியத்தை தவிர வேறு எதையும் செய்யாத போதும், அவரை இகழ்ந்து பேசியும், அந்த ஊழியத்தின் முடிவில், அவரை துன்புறுத்தி, சாட்டைகளினால் அடித்து, பாரமான சிலுவையை அவர் சுமந்து, கொல்கதா மலையின் மேல் ஏற வைத்து, அவரை சிலுவையில் அவருடைய கடைசி சொட்டு இரத்தம் வரை சிந்த*

*வைப்பார்கள் என்று அறிந்திருந்தும் அவரை இந்த பாழ் உலகத்திற்கு இரட்சகராக அனுப்பினார் என்றால் அந்த தியாகம் நாம் எத்தனை வரிகளில் எழுதினாலும் அது அடங்காதது. அந்த தியாகத்தை எந்த வார்த்தைகளாலும் சொல்லி முடியாதது. நம் பிள்ளைகள் பாடுபடுவார்கள் என்று அறிந்தால், நாம் அந்த இடத்திற்கு நம் பிள்ளையை அனுப்பி வைப்போமா? ஒருக்காலும் அனுப்பி வைக்கமாட்டோம். ஆனால், பரம தகப்பனை பாருங்கள், அவர் நம் மேல் வைத்த அன்பினால் அப்படி செய்தார் என்று வேதம் கூறுகிறது.*

*அவர் இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார் என்று வாசிக்கிறோம். தம் குமாரனை உபத்திரவப்படுத்த போகிற உலகத்தில், அவரை அனுப்பி வைத்ததினால், அவர் நம் மேல் வைத்த அன்பை விளங்க பண்ணுகிறார். அந்த அன்புக்கு நாம் எவ்வளவேனும் பாத்திரர்கள் அல்ல, அல்லவே அல்ல! பாவத்திலும், சாபத்திலும், கர்த்தருக்கு துரோகம் செய்பவர்களும், அவரை விட்டு தூரம் போகிறவர்களுமாகிய நமக்காகவே அவர் தம்முடைய ஒரே பேறான குமாரனை அனுப்பி வைத்தார். எதற்காக, அவரை விசுவாசிக்கிறவர்கள் யாரும் கெட்டு போகாமல், அதாவது நரகத்திற்கு செல்லாமல், நித்திய ஜீவனை பெற்று கொள்ளும்படியாகவே அவரை நமக்காக அனுப்பினார். அல்லேலூயா!*

*நம் ஆத்துமா அத்தனை விலையேறப்பெற்றது. நாம் அவரை விசுவாசியாவிட்டால், நித்திய நரகம் என்பது அவருக்கு தெரியும். நாம் நரகத்தில் சென்று நித்திய நித்தியமாய் அவியாத அக்கினியில் தவிக்க கூடாது என்ற ஒரே*

*காரணத்திற்காக தமது ஒரே பேறான குமாரனை நாம் இரட்சிக்கப்படும்படியாக அனுப்பினார். நாம் அதை அறிந்திருக்கிறோமா? உணர்ந்திருக்கிறோமா?*

*இயேசுகிறிஸ்துவின் சிலுவையில் சிந்திய அந்த விலையேறப்பெற்ற இரத்தமே, நம் சகல பாவங்களையும் நீக்கி சுத்திகரிக்க வல்லது. நம் பாவங்களை மன்னிக்கவல்லது. வேறு எந்த பரிகாரமும், எந்த புண்ணிய ஸ்தலத்திற்கு செல்வதும், புண்ணிய நதியில் குளிப்பதும் பாவத்தை போக்காது. இயேசுகிறிஸ்துவின் இரத்தம் மாத்திரமே எந்த பாவத்தையும் போக்க வல்லது. அவரால் கழுவ முடியாத பாவம் எதுவும் இல்லை. அவரால் மன்னிக்க முடியாத பாவமும் எதுவும் இல்லை. நாம் செய்யும் ஒரு சிறிய ஜெபமே நம்முடைய பாவத்தை கழுவி, நமக்கு நித்திய ஜீவனை தரவல்லது. தேவன் அத்தனை எளிதாக வைத்த இரட்சிப்பை சாத்தான் பெரிய பெரிய நம்மால் செய்ய முடியாத பரிகாரங்களால் முடியும் என்று நம்ப வைக்கிறான். அவனுடைய தந்திரங்களில் விழுந்துபோகாமல், இயேசுகிறிஸ்துவின் இரத்தத்தினால் மாத்திரமே இரட்சிப்பு உண்டு என்பதை உணர்ந்து, அவரிடத்தில் மன்னிப்பை பெற்று கொள்வோம். நித்திய ஜீவனை பெற்று கொள்வோம். ஆமென் அல்லேலூயா!*

*இரத்தம் சிந்துதல் இல்லாமல் மன்னிப்பில்லை*
*இயேசு நாமம் சொல்லாமல் இரட்சிப்பில்லை*
*கூப்பிடு இயேசு இயேசு என்று - உன்*
*குறையெல்லாம் நிறைவாக்கி நடத்திடுவார்*

**ஜெபம்:** *எங்கள் மேல் எவ்வளவாய் அன்பு கூர்ந்து வழிநடத்தும் எங்கள் நல்ல தகப்பனே, இந்த நாளில் நீர் எங்கள் மேல் வைத்த அன்பினால், இயேசுகிறிஸ்து பாடுபடுவார் என்று அறிந்தும் அவரை இந்த உலகத்திற்கு இரட்சிப்பை கொடுக்க அனுப்பின உம்முடைய மாதயவிற்காக உமக்கு நன்றி அப்பா, இப்போதும் நான் பாவி என்று அறிக்கையிடுகிறேன். என் பாவங்களை இயேசுகிறிஸ்துவின் விலைமதியாத இரத்தத்தால் கழுவி சுத்திகரித்து விடுவீராக. இயேசுகிறிஸ்துவை என் சொந்த இரட்சகராக ஏற்று கொள்கிறேன். அவர் என் உள்ளத்தில் வந்து வாசம் செய்வாராக. தம்மையே எனக்காக தந்த அவருக்கு என்னையே கொடுத்து விடுகிறேன். அவர் வாசம் செய்து, ஆளுகை செய்யும் இடமாக என் இருதயம் விளங்குவதாக. இயேசுகிறிஸ்துவின் இனிய நாமத்தில் வேண்டி கொள்கிறேன் நல்ல தகப்பனே ஆமென்.*

## *12.* நன்றியுள்ள இருதயம்

*அப்பொழுது இயேசு: சுத்தமானவர்கள் பத்துப்பேர் அல்லவா, மற்ற ஒன்பதுபேர் எங்கே? தேவனை மகிமைப்படுத்துகிறதற்கு, இந்த அந்நியனே ஒழிய மற்றொருவனும் திரும்பிவரக்காணோமே என்று சொல்லி, அவனை நோக்கி: நீ எழுந்துபோ, உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது என்றார் - (லூக்கா 17: 17-19).*

*வியட்நாமில் நடந்த போரில், ஒரு இராணுவத்தலைவன் தன் கீழ் வேலைப் பார்த்த ஒரு சாதாரண போர் வீரனை காப்பாற்ற முயற்சிக்கும்போது, அவனை காப்பாற்றிவிட்டு, ஆனால் தான் காயப்பட்டு, அதன் காயங்களினால் அந்த இடத்திலேயே மரிக்க நேரிட்டது, அதைக் குறித்து அவருடைய பெற்றோருக்கு அறிவிக்கப்பட்டு, அவர்கள் அவரது நினைவாக ஒரு கூட்டத்தை ஆயத்தப்படுத்தி இருந்தார்கள். அப்போது அந்த கூட்டத்திற்கு அந்த போர்வீரனையும் அழைத்திருந்தார்கள்.*

*அந்த கூட்டத்திற்கு அந்த போர் வீரன் மிகவும் தாமதமாக வந்ததுமன்றி, நன்கு குடித்துவிட்டு வந்திருந்தான். அங்கிருந்த உணவு பொருட்களை அநாயசமாக சாப்பிட்டதுமன்றி, தன்னை காப்பாற்றிய அந்த தலைவனுக்கு தன் சார்பாக ஒரு நன்றியைக் கூட தெரிவிக்கவில்லை. மட்டுமல்ல, சாப்பிட்டு முடித்தவுடன், தன்னை அழைத்திருந்த அந்தக குடும்பத்திற்கு ஒரு நன்றியைக் கூட தெரிவிக்காமல், பேசாமல் போய் விட்டான். அவன் போனவுடனே, அந்த தலைவனின் தாயார்*

*கதறி அழுது, இந்த நன்றியில்லாத மனிதனுக்காகவா என் மகன் தன் ஜீவனைக் கொடுத்தான் என்று கதறினார்கள்.*

*இன்று நம்மில் எத்தனைப் பேர் அப்படி நன்றியில்லதவர்களாக இருக்கிறோம்? தேவன் நமக்கு பாராட்டிய கிருபைகள்தான் எத்தனை? அதை ஒரு முறையாவது நாம் நினைத்து அவரை துதிக்கிறோமா? பத்து குஷ்டரோகிகள் சுத்தமானாலும் ஒருவன் தான் திரும்ப வந்து அவருக்கு நன்றி சொன்னான். சுத்தமானவர்கள் பத்துப்பேர் அல்லவா, மற்ற ஒன்பதுபேர் எங்கே? தேவனை மகிமைப்படுத்துகிறதற்கு, இந்த அந்நியனே ஒழிய மற்றொருவனும் திரும்பிவரக்காணோமே என்று இயேசுகிறிஸ்து சொன்னாரல்லவா?*

*தேவன் செய்த நன்மைகளை மறவாதபடிக்கு எச்சரிக்கையாயிருப்போம். அவருக்கு நன்றியறிதலுள்ளவர்களாய் இருப்போம். நம்முடைய தாழ்வில் நம்மை நினைத்தாரே! நாம் வேண்டுவதற்கும் நினைப்பதற்கும் அதிகமாய் நம்மை ஆசீர்வதித்திருக்கிறாரே! அவருக்கு நாம் எத்தனையாய் நன்றி சொல்ல வேண்டும்! ஒரு நிமிடம் ஒரு தாளை எடுத்து கர்த்தர் செய்த பத்து காரியங்களை எழுதி, அப்பா உமக்கு ஸ்தோத்திரம். எனக்கு இப்படி கிருபை பாராட்டினீரே என்று கூறுவோமானால், அவர் எத்தனை மகிழ்வார்?*

*நாம் யாருக்காவது ஒரு நன்மை செய்யும்போது அவர்கள் நமக்கு நன்றி சொல்ல வேண்டும் என்று எதிர்பார்ப்பது இயற்கையானது. ஆனால் அவர்கள் நன்றி எதுவும்*

சொல்லாமல் போய் விட்டால், நாம் இந்த மனிதனுக்கு போய் செய்தோமே என்று நினைப்போமில்லையா? அதுப் போலத்தான் கர்த்தர் நமக்கு செய்த நன்மைகளுக்கு நாம் நன்றி சொல்லாமல் போனால், அவரும் அதுப் போலத்தான் நினைப்பார். மற்ற நன்மைகளை அவர் தருவார் என்று நாம் எதிர்ப்பார்ப்பது எப்படி? நாம் அவரிடமிருந்து என்ன பெற்று கொண்டாலும் அதற்கு நன்றி சொல்ல பழகிக் கொள்வோம். இன்று, நாம் தேவன் செய்த நன்மைகளை மறப்பதினால்தான், வீண் பெருமை, அகந்தை நம்மை ஆட்கொள்கிறது. நாம் இருந்த நிலைமையிலேயே நாம் இன்று இல்லை. கர்த்தர் நம்மை நிச்சயமாக உயர்த்தியிருக்கிறார். நாம் இருந்த பழைய நிலைமையை மறக்கும்போதுதான், மற்றவர்களை காட்டிலும் நான் உயர்ந்தவன் என்று நம் மனம் பெருமை கொள்கிறது. ஆகையால் நாம் ஜெபிக்கும்போது, அப்பா, நீர் செய்த நன்மைகளை மறவாதிருக்கும் நன்றியுள்ள இருதயத்தை எனக்கு என்றும் தாரும் என்று ஜெபிக்க வேண்டும்.

மட்டுமல்ல, நாம் சும்மா இருக்கும் போதால்லாம் னம் இருதயத்தில் நன்றி அப்பா, நன்றி தேவனே என்று மனதில் சொல்லி கொண்டே இருக்க வேண்டும். அநேக ஸ்தோத்திரங்களால் கிருபை பெருகும் என் று வேதம் கூறுகிறது. ஸ்தோத்திரம் சொல்ல சொல்ல கிருபை பெருகி கொண்டே இருக்கும். மட்டுமல்ல, தேவையற்ற சிந்தனைகள் யாவும் நம்மை விட்டு அகலும்.துதித்துக் கொண்டே இருப்போம். கர்த்தரின் கிருபைகளை பெற்றுக் கொண்டே இருப்போம். கர்த்தர் செய்த நன்மைகளை மறவாதிருப்போம். கர்த்தர் நம்மை ஆசீர்வதிப்பார். ஆமென் அல்லேலூயா!

*நன்றி சொல்லாமல் இருக்கவே முடியாது*
*பல நன்மை செய்த கர்த்தருக்கே*
*நன்றி நன்றி நன்றி என்று*
*சொல்லி நான் துதிப்பேன்*
*நாள்தோறும் போற்றுவேன்*

*எத்தனையோ நன்மைகளை என் வாழ்வில் செய்தாரே*
*ஏராளமாய் நன்றி சொல்லுவேன்*
*அத்தனையும் நினைத்து நினைத்து நான் துதிப்பேன்*
*ஆண்டவரை போற்றுவேன்*

***ஜெபம்:*** *எங்களை அதிகமாய் நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, உம்மைத் துதிக்கிறோம். அப்பா நீர் செய்த நன்மைகளை மறவாதிருக்கும் நன்றி மறவா இருதயத்தை எங்களுக்கு எப்போதும் தாரும். நீர் எங்களுக்கு செய்த நன்மைகள் கோடா கோடி தகப்பனே, எப்படி நன்றி சொல்லுவோம்? உமக்கு நன்றி என்று இருதயத்தின் ஆழத்திலிருந்து சொல்கிறோம். எங்கள் வாழ்வில் ஒவ்வொரு நிமிடமும் நாங்கள் மூச்சு விடுவதுக் கூட உமது கிருபைதான் என்று உணர்ந்து, உமக்கு நன்றியாய் ஜீவிக்க உதவி செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

## *13.* உயர்ந்த அனுபவம்

*அப்பொழுது பேதுரு இயேசுவை நோக்கி: ஆண்டவரே, நாம் இங்கே இருக்கிறது நல்லது; உமக்குச் சித்தமானால், இங்கே உமக்கு ஒரு கூடாரமும்,மோசேக்கு ஒரு கூடாரமும், எலியாவுக்கு ஒரு கூடாரமுமாக, மூன்று கூடாரங்களைப் போடுவோம் என்றான் (மத்தேயு17:4)*

*இயேசு கிறிஸ்துவும் அவருடன் பேதுரு, யாக்கோபு, யோவான் ஆகிய மூன்று சீஷர்களும் மறுரூப மலையிலிருந்து அப்போதுதான் இறங்கி வந்திருந்தார்கள். அந்த அனுபவம் இன்னும் அவர்கள் இருதயத்திலிருந்து அகலாதிருந்தது. மோசேயும், எலியாவும் அங்கு இயேசுவுடன் பேசி கொண்டிருந்ததை நேரில் அந்த சீஷர்கள் கண்டிருந்தனர். இயேசுவின் முகம் சூரியனை போல பிரகாசித்திருப்பதை நேரில் கண்டிருந்தனர். 'ஆஹா! என்ன ஒரு உன்னத அனுபவம் அது! அதிலேயே அப்படியே இருந்து விட்டால் எத்தனை நலமாயிருக்கும்' என்று யோசித்தபடியே, அவர்கள் அந்த நினைப்புடனே கீழே இறங்கி வந்து கொண்டிருந்தனர்.*

*அவர்கள் அப்படி இறங்கி ஜனங்களிடத்தில் வந்தபோது, நிஜ வாழ்க்கையின் பிரச்சனைகளை சந்திக்க நேர்ந்தது. ஒவ்வொரு மலை அனுபவத்திற்கு பிறகும் நிச்சயமாக ஒரு பள்ளத்தாக்கின் அனுபவம் இருக்கத்தான் செய்கிறது. . ஒரு வேளை ஒரு அருமையான நற்செய்தி கூட்டத்திற்கு சென்று, அங்கு பிரசங்கியாரின் பிரசங்கத்தையும், தேனிலும் இனிதான பாடல்களையும் கேட்டு விட்டு, வீடு வந்து சேரும்போது,*

*ஒருவேளை நாம் நிஜ வாழ்க்கையின் நிஜங்களை உணரும்போது, அட, இதுதான் உண்மையான வாழ்க்கை! என்று நினைக்க தோன்றும். அப்படியே அந்த கூட்டங்களிலேயே இருந்தால் எத்தனை சந்தோஷம்! எத்தனை சமாதானம்! ஆனால், நாம் வாழ போவது, யதார்த்தமாய் இருக்க போவது நாம் வாழ போகிற வாழ்க்கைதான். நாம் சந்திக்க இருக்கிற பிரச்சனைகளைதான்.*

*'இயேசு ஞானஸ்நானம் பெற்று, ஜலத்திலிருந்து கரையேறினவுடனே, இதோ, வானம் அவருக்குத் திறக்கப்பட்டது; தேவ ஆவி புறாவைப்போல இறங்கி, தம்மேல் வருகிறதைக் கண்டார். அன்றியும், வானத்திலிருந்து ஒரு சத்தம் உண்டாகி: இவர் என்னுடைய நேசகுமாரன், இவரில் பிரியமாயிருக்கிறேன் என்று உரைத்தது' - (மத்தேயு* ***3:16-17).*** *இயேசுகிறிஸ்து நினைத்திருக்கலாம், பிதாவுடனும், பரிசுத்த ஆவியானவருடனும் இருக்கும் இந்த அனுபவமல்லவா, ஐக்கியமல்லவா நான் பரலோகில் கொண்டிருந்தேன் என்று.*

*ஆனால் அந்த உன்னத அனுபவத்திற்கு பின், உடனே அவர் சாத்தானுடன் சோதனையை சந்திக்க வேண்டியிருந்தது. உயர உன்னதமான அனுபவத்திற்கு பிறகு, பள்ளத்தாக்கை போன்ற நம்மை திணற வைக்கும் சோதனைகள் நமக்காக காத்திருக்கலாம்! கிறிஸ்து சாத்தானை வேத வார்த்தைகளால் ஜெயித்தார். மறுரூப மலையிலிருந்து கீழே இறங்கி வந்தபோது, சீஷர்களுக்கு சந்திர ரோகியாய் தவிக்கும் அந்த மகனுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. ஆனால்*

*இயேசுகிறிஸ்து அவனை கொண்டு வரசெய்து, அவனிலிருந்த பிசாசை அதட்டினார். அது உடனே அவனை விட்டு அகன்றது. இயேசுகிறிஸ்து உன்னத அனுபவத்திற்கு பின் வரும் பள்ளத்தாக்கை போன்ற சோதனைகளையும், பிரச்சனைகளையும் எளிதாய் சந்தித்தார். பிரச்சனைகளை தீர்த்து வைத்தார்.*

*நாமும் எப்போதும் உயர உன்னதமான அனுபவங்களிலேயே இருந்து விட முடியாது. கீழே பள்ளத்தாக்கை போன்ற சோதனைகளையும் பிரச்சனைகளையும் சந்திக்கத்தான் வேண்டும். அதில்தான் நாம் கர்த்தருக்கு கீழ்ப்படிதலையும், அவர் மேல் சார்ந்து ஜீவிக்கிற ஜீவியத்தையும் பெற்று கொள்கிறோம். அவரில் அதிகமாய் அன்பு கூர்ந்து வாழ கற்று கொள்கிறோம். நாம் கண்டு அல்ல, காணாமல் அவரை விசுவாசிக்கிறவர்கள். நாம் தான் அதிக பாக்கியவான்கள்.*

*நம்மை ஊக்குவிக்க தேவன் அவ்வப்போது அருமையான வெளிப்பாடுகளையும், தரிசனங்களையும், அனுபவங்களையும் தருகிறார். ஆனால் அதிலேயே நாம் நின்று விடக்கூடாது. நின்று விட முடியாது. பள்ளத்தாக்கின் அனுபவத்தினூடே செல்லும்போது, தேவன் நம்மோடு கூட இருப்பதை உணர்ந்து, அவரில் களிகூர்ந்து, ஜெயம் பெற்று வாழும் வாழ்க்கையே உன்னத வாழ்க்கையாகும். அப்படிப்பட்ட வாழ்க்கை வாழவே நாம் அழைக்கப்பட்டிருக்கிறோம்.*

*'நீ தண்ணீர்களைக் கடக்கும்போது நான் உன்னோடு இருப்பேன்; நீ ஆறுகளைக் கடக்கும்போது அவைகள் உன்மேல் புரளுவதில்லை; நீ அக்கினியில் நடக்கும்போது வேகாதிருப்பாய்; அக்கினிஜுவாலை உன்பேரில் பற்றாது' - (ஏசாயா 43:2) என்று வாக்களித்த தேவன் நம் ஆறுகளை போன்ற பிரச்சனைகளிலும், அக்கினி போன்ற அனுபவங்களிலும் நம்மோடு இருக்கும்போது, நாம் பள்ளத்தாக்கின் அனுபவத்திலும் களிப்போடு கடந்து வர அவர் உதவி செய்வார். ஏனெனில் ஆறுகளை கடக்கும்போது, அவர் படகாய் வந்திடுவார். அக்கினியில் இருக்கும்போது நான்காவது ஆளாக அவர் வந்து, அக்கினியின் வாசம் கூட நம்மீது வீசாதபடி வெளியே பத்திரமாய் கொண்டு வருவார். அல்லேலூயா!*

*ஒரு நாள் இயேசுகிறிஸ்து வருவார். அவர் நம்முடைய கண்ணீரை துடைப்பார். 'பள்ளத்தாக்கில் வாழ்ந்த வாழ்க்கை போதும்' என்று அன்போடு நம்மை உயர்ந்த பரலோக வாழ்க்கைக்கு கொண்டு செல்வார். அங்கு சோதனையோ, பிரச்சனைகளோ, துன்பங்களோ, பள்ளத்தாக்கின் எந்த அனுபவங்களும் இல்லை. நாம் திரும்ப பள்ளத்தாக்கின் வாழ்க்கைக்கு வரவே மாட்டோம். உயர்ந்த உன்னத மலை போன்ற அனுபவத்திலேயே என்றென்றும் வாழுவோம். ஆமென் அல்லேலூயா! .*

*அலைகள் படகின்மேல்*
*மோதியே ஆழத்தினாலும்*
*கடல்மேல் நடந்து வந்து*

*கர்த்தரே என்னைத் தூக்கினார்*
*அல்லல் நீக்கியவர்*
*அமைதிப்படுத்தினார்*

*இருள் சூழ்ந்த லோகத்தில்*
*இமைப்பொழுதும் தூங்காமல்*
*கண்மணிபோல என்னை*
*கர்த்தர் இயேசு காத்தாரே*
*கானங்களால் நிறைந்து*
*காலமெல்லாம் பாடுவேன்*

*அஞ்சிடேன் அஞ்சிடேன்*
*என் இயேசு என்னோடிருப்பதால்*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, பள்ளத்தாக்கை போன்ற இருளான சோதனைகளும், பிரச்சனைகளும் எங்கள் வாழ்வில் வரும்போது, அவைகளை விட்டு எங்களுக்கு உயர்ந்த மலையின் அனுபவத்திற்குள் சென்று அங்கேயே இருந்து விட தோன்றினாலும், பள்ளத்தாக்கின் அனுபவத்தில் நீர் எங்களுடனே கூட இருக்கிறீர் என்கிற முழு விசுவாசத்தோடு, பள்ளத்தாக்கின் வாழ்வை கிறிஸ்துவை போல வெற்றிகரமாக முடிக்க எங்களுக்கு தேவன் கிருபை செய்வீராக. நீர் எங்களோடு எப்போதும் இருக்கிறீர் என்கிற விசுவாசம் ஆழமாய் எங்கள் இருதயத்தில் பதித்தருளும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

## 14. எதை தெரிந்தெடுப்பீர்கள்?

திருடன் திருடவும் கொல்லவும் அழிக்கவும் வருகிறானேயன்றி வேறொன்றுக்கும் வரான். நானோ அவைகளுக்கு ஜீவன் உண்டாயிருக்கவும், அது பரிபூரணப்படவும் வந்தேன் - யோவான் 10:10.

ஒரு பணக்கார வாலிபன், மரித்து, பரலோக வாசலண்டை போனபோது, அங்கு பரிசுத்த பேதுரு நின்று அந்த வாலிபனிடம், நாங்கள் இங்கு ஒரு புதிய தீர்மானம் கொண்டு வந்திருக்கிறோம். பரலோகத்திற்கு செல்வதா அல்லது நரகம் செல்வதா என்று நீங்களே தீர்மானிக்கலாம் என்றார். அப்போது அந்த வாலிபன், 'ஓ! இவ்வளவுதானே, நான் பரலோகத்திற்கு செல்லவே விரும்புகிறேன்' என்றுக் கூறினான். அப்போது பேதுரு, அப்படி தீர்மானிப்பது அவ்வளவு எளிதல்ல, அதற்கு முன்பு நரகத்தில் ஒரு நாளும், பரலோகத்தில் ஒரு நாளும் செலவழிக்க வேண்டும். அதன்பின், நீ முடிவெடுக்கலாம் என்றுக் கூறினார்.

முதலில், அவன் நரகத்திற்கு அனுப்பப்பட்டான். அங்கு போனவுடன், அருமையான ஒரு தோட்டம் இருந்தது. அங்கு அவனுடைய பழைய நண்பர்களும், அவனோடு கூட வேலை செய்தவர்களும், அவனை வரவேற்று, பழைய கதைகளைப் பேசி, சந்தோஷமாய் நேரத்தைக் கழித்தார்கள். சாத்தானையும் அவன் சந்தித்தான். சாத்தானும் நல்ல மனிதனாகவே காணப்பட்டான். இரவில் நல்ல சாப்பாடு பரிமாறப்பட்டது. நேரம்போனதே தெரியாமல், அந்த நாள் முடிவடைந்தது.

அடுத்த நாள் அவன் பரலோகத்திற்கு சென்றான். அங்கும், நாள் நன்றாகவே இருந்தது. மேகங்களில் மேல், பறந்தும், பாட்டுகளைப் பாடியும் அந்த நாள் முடிவடைந்தது.

அடுத்த நாள், பேதுரு வந்து அவனிடம், 'நீ என்ன முடிவெடுத்திருக்கிறாய்?' என்றுக் கேட்டபோது, அந்த வாலிபன், "பரலோகம் நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் நரகத்தில் நான் என் நேரத்தை நன்கு செலவழித்தேன். ஆகவே நான் நரகத்திற்குச் செல்லவே விரும்புகிறேன்" என்றுக் கூறினான். அப்படிச் சொன்னவுடன் அவன் நரகத்திற்கு உடனே அனுப்பப்பட்டான். அங்கு போனவுடன், முந்திய நாள் பார்த்ததைப்போல எந்த தோட்டமும் இல்லை. அழுக்கும் பூச்சிகளும், அருவருப்பான துர்நாற்றமும் வீசியது. அவனுடைய நண்பர்கள் கிழிந்த அழுக்கு உடைகளை அணிந்து, அசுத்தமாய் இருந்தனர். அவர்களை குட்டிப் பிசாசுகள் துரத்தி வேலை வாங்கிக் கொண்டிருந்தன. அப்போது அவன் அங்கு வந்த சாத்தானிடம்," "எனக்கு ஒன்றும் புரியவில்லை, நேற்று நான் வந்தபோது என் நேரம்போனதே தெரியாமல், சந்தோஷமாய் கழித்தேன், நல்ல சாப்பாடு கொடுக்கப்பட்டது. ஆனால் இன்றோ எல்லாம் தலைகீழாக இருக்கிறதே" என்றுக் கேட்டதற்கு சாத்தான், வஞ்சக சிரிப்புடன், 'நேற்று உன்னை நாங்கள் இங்கு வருவதற்கு தெரிந்தெடுத்தோம். இன்று நீ எங்களில் ஒருவன்' என்று அலட்சியமாக சொல்லிவிட்டு, சாட்டையினால் அடித்து, வேலை செய்யும்படி விரட்டினான்.

*இந்தக் கதை கற்பனையாக இருந்தாலும் சாத்தான் மக்களை தன் பக்கம் இழுப்பதற்காக பாவத்தையும் உலகத்தின் கவர்ச்சிகளையும் மிகவும், அழகாக காட்டி, இதுவே நல்லது என்று ஆத்துமாக்கள் நினைக்கும்படியாக அவர்களை மயக்கி தன் பக்கம் இழுக்கிறான். ஆனால், அவர்கள் உண்மையான சாமாதானத்தையும், சந்தோஷத்தையும் இயேசு கிறிஸ்துவின் தனிப்பட்ட உறவின் மூலமும், அவருடைய இரத்ததத்தினால் கழுவப்பட்டாலொழிய கிடைக்காது என்பதையும் மறைத்து பாவத்தை மிகவும் அருமையாக கவர்ச்சிகரமாக காட்டுகிறான். அவனுடைய தந்திரத்தில் சிக்கிக் கொண்ட ஒருவரும் வெளியே வருவது மிகவும் கடினம். சிக்கிக் கொள்ளாதபடி நாம் நம்மைக் காத்துக் கொள்ள வேண்டும். சாத்தான் தனக்கு கொஞ்ச காலம்தான் உண்டென்று அறிந்து, தன்னால் இயன்ற வரை ஆத்துமாக்களை தன் பக்கம் ஈர்ப்பதற்காக உலக சந்தோஷங்ளை காட்டி, அதுதான் வாழ்க்கை என்பதைப் போல் அவர்களை தன் பக்கம் இழுத்துக் கொண்டிருக்கிறான். கிறிஸ்துவுக்கு விரோதமாக வாழ்வதும், பாவங்களை செய்வதிலுமே சந்தோஷம் இருப்பதைப் போல் அவன், செய்கிற காரியங்களில் ஆத்துமாக்கலும் இழுப்புண்டு பாவத்தை தண்ணீரைப போல குடிக்கிறார்கள்.*

*மனுஷனுக்குச் செம்மையாய்த் தோன்றுகிற வழியுண்டு; அதின் முடிவோ மரண வழிகள் (நீதிமொழிகள். 16:25) என்று வேதம் திட்டவட்டமாகக் கூறுகிறது. நம்முடைய வழிகள் அல்ல, நம்முடைய ஞானம் அல்ல, கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் மேலுள்ள விசுவாசமும், அவரே தேவனென்று அறிக்கையிட்டு, அவரை சொந்த இரட்சகராக*

*ஏற்றுக் கொள்வதுமே நம்மை பரலோகம் சேர்க்கும். அவராலேயன்றி வேறொருவராலும் இரட்சிப்பு இல்லை; நாம் இரட்சிக்கப்படும்படிக்கு வானத்தின் கீழெங்கும், மனுஷர்களுக்குள்ளே அவருடைய நாமமேயல்லாமல் வேறொரு நாமம் கட்டளையிடப்படவும் இல்லை என்று அப்போஸ்தலர் **4:12**ல் வேதம் நமக்கு தெளிவாக கூறுகிறது. ஆகவே கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டு நம்முடைய பாவத்தை அறிக்கையிட்டு, அவரிடம் மன்னிப்பு கேட்போம். இரட்சிப்பை இலவசமாக பெற்றுக் கொள்வோம். அவருக்கென்று வாழ்வோம். சாத்தானின் தந்திரங்களை முறியடிப்போம். அவன் திருடவும் கொல்லவும் அழிக்கவும் வருகிறானேயன்றி வேறொன்றுக்கும் வரான். ஆனால் கிறிஸ்துவோ அவைகளுக்கு ஜீவன் உண்டாயிருக்கவும், அது பரிபூரணப்படவும் வந்தார். அவரை நம்புவோம். அவருக்குள் வாழ்வோம் பாலோக ராஜ்ஜியத்தை சுதந்தரிப்போம். ஆமென் அல்லேலூயா!*

*கல்வாரியின் அன்பினையே*
*கண்டு விரைந்தோடி வந்தேன்*
*கழுவும் உம் திரு இரத்தத்தாலே*
*கறை நீங்க இருதயத்தை*

***ஜெபம்:*** *எங்களை நேசித்து வழிநடத்துகிற நல்ல தகப்பனே, இந்த நாளுக்காக உமக்கு நன்றி செலுத்துகிறோம். பிசாசானவன் திருடவும் கொல்லவும் அழிக்கவும் வருகிறதை நாங்கள் அறிந்து அவனுடைய தந்திரங்களுக்கு தப்பி ஜீவிக்க ஒவ்வொரு நாளும் எங்களுக்குக் கிருபைச் செய்யும். எங்கள்*

*பாவங்களை உம்முடைய சமுகத்தில் அறிக்கையிடுகிறோம். இயேசுகிறிஸ்துவின் இரத்தம் எங்கள் பாவங்களை நீக்கி சுத்திகரிக்கிறதற்காக நன்றி. உமது குமாரனாகிய இயேசுகிறிஸ்துவை எங்கள் உள்ளத்தில் அழைக்கிறோம். அவரை எங்கள் சொந்த இரட்சகராக ஏற்றுக்கொள்கிறோம். நீர் எங்களை உம்முடைய பிள்ளைகளாக ஏற்றுக் கொள்வதற்காக நன்றி. எங்கள் பாவங்களை மன்னித்ததற்காக நன்றி பரலோக இராஜ்ஜியத்திற்கு எங்களை பாத்திரவான்களாக மாற்றியதற்காக உமக்கு கோடி ஸ்தோத்திரங்கள். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 15. நேச வைராக்கியம்

*நேசம் மரணத்தைப்போல் வலிது; நேசவைராக்கியம் பாதாளத்தைப்போல் கொடிதாயிருக்கிறது; அதின் தழல் அக்கினித் தழலும் அதின் ஜுவாலை கடும் ஜுவாலையுமாயிருக்கிறது - (உன்னதப்பாட்டு 8:6).*

புஷ்யோக் என்னும் ரஷ்ய வாலிபன் எப்போதும் புன்சிரிப்புடன் இருப்பான். அவனை காண்பவர்களை கவர்ந்திழுக்கும் உள்ளத்தை உடையவனாய் இருந்தான். மட்டுமல்ல, இனிமையாக பாடி வாத்திய கருவிகளைஇசைப்பதில் அவனுக்கு இணை அவன்தான்.

அவனது பெற்றோர் அவனை இசைக்கல்லூரியில் சேர்த்தனர். சங்கீதத்தை முறைப்படி கற்றது மட்டுமல்ல, எல்லா இசைக் கருவிகளையும் திறமையாக மீட்டுவதிலும் பிரசித்திப் பெற்றவனாக இருந்தான். தன்னோடு சுட படிக்கும் மாணவன் மூலமாக கிறிஸ்து தம் ஜீவனை கல்வாரியில் எபபடி கொடுத்தார் என்பதை அறிந்தான். அவன் உள்ளம் கிறிஸ்துவுக்காக பொங்கியது. கிறிஸ்து தம் ஒரே ஜீவனை எனக்காக அர்ப்பணித்தாரென்றால் ஏன் என் திறமை தாலந்துகள் எல்லாவற்றையும் அவருக்காக அர்பணிக்கக்கூடாது என தீர்மானித்தான்.

அவன் பட்டம் பெறும் நாள் வந்தது. அவனது அருமையான பெற்றோர்கள் மகிழ்ச்சியோடு, ஒழுங்கு செய்யப்பட்ட பெரிய மண்டபத்தில் காத்துக்

*கொண்டிருந்தனர். அவனுடைய ஆசிரியர்கள் பெருமையோடு தம்தம் ஆசனங்களில் வந்து அமர்ந்தனர்.*

*ரஷ்யாவில் நாடோடிப்பாடலான 'பொன் வாத்தின் மதுரக்கீதம்' என்ற பாடலையே தன் பட்டம் பெறும் பாடலாக தெரிந்தெடுத்தான். தன் முழு உள்ளத்தையும் அந்த பாடலில் இணைத்து, உருக்கமாக பாடிக் கொண்டே வந்தான். அந்தப் பாடலோடு கூட அப்படியே கல்வாரியின் கீதத்தையும் இணைத்து இயேசுவின் அன்பு, அவரது தியாகத்தையும், உருக்கமான குரலில் பாடி முடித்தான். கல்லைப் போலுள்ள உள்ளங்கள் மெழுகைப்போல உருகின. அவனது ஆசிரியர்கள் திகைத்தார்கள். அரசாங்க அதிகாரிகள் உறுமினார்கள். அவன் மெதுவாய் மேடையில் எழுந்து நின்று, உறுதியான குரலில், 'பாரமான சிலுவையை தம் தோள்களிலே தூக்கிக் கொண்டு எருசலேம் வீதி வழியாக இரத்த வியர்வையோடு நடந்து, எனக்காக ஜீவனைக் கொடுத்தவரை, தம் ஜீவனைப் பார்க்கிலும் என்னை அதிகமாக நேசித்தவரை நான் எப்படி நேசியாமல் இருக்க முடியும்?' என்று கூறினான்.*

*அப்பொழுதே அவன் கைகளில் விலங்குகள் மாட்டப்பட்டன. அவன் பெற்றோர் கலங்கி தவித்தனர். அவன் அவர்கள் பக்கமாக திரும்பினான், 'அம்மா,கல்வாரி கீதத்தோடு என் வாழ்க்கையின் கீதத்தையும் இணைத்துக் கொண்டதில் நான் பெருமைப்படுகிறேன்' என்றான். மரண தண்டனைக்காக அவன் நடந்து சென்றான். அவன் நடையில் ஒரு கெம்பீரம் இருந்தது.*

பிரியமானவர்களே, நம் தேவன் மேல் நமக்கு இதுப் போன்ற நேச வைராக்கியம் உண்டா? கிறிஸ்தவ வாலிபர்கள் பலர், தங்களது தாலந்துகளை கர்த்தருக்கென்று பயன்படுத்தாமல், தங்கள் விருப்பப்படி சினிமா பாடல்களுக்கும், மற்ற பாடல்களுக்கும் உபயோகப்படுத்தி கொண்டிருக்கும் காலத்தில், நாம் நம் பிள்ளைகளுக்கு, தேவனுக்கேற்ற வைராக்கியத்தை குறித்து போதிக்கிறோமா? நாங்கள் எங்கள் பிள்ளைகளுக்கு கீபோர்ட் கற்றுக் கொடுக்கும்போது, வயலின் வாசிக்கும் ஒருவர் வீட்டிற்கே வந்து கற்றுக் கொடுக்கிறேன் என்றும், தனக்கு வயலின், கிட்டார், கீ போர்ட் வாசிக்க தெரியும் என்று கூறினார். நாங்களும் சந்தோஷமாக எல்லாவற்றையும் எங்கள் பிள்ளைகளுக்கு கற்றுக் கொடுங்கள் என்று கூறினோம்.

அப்படியே அவர் ஒத்துக்கொண்டு, முதல் பாடலை தன் வயலினால் வாசிக்க ஆரம்பித்தார். அது ஒரு சினிமாப்பாடலாக இருந்தது. உடனே நாங்கள் அவரிடம், 'நாங்கள் கிறிஸ்தவர்கள், சினிமாப்பாடல் எங்களுடைய பிள்ளைகளுக்கு கற்றுக் கொடுக்க வேண்டாம்' என்று கூறினோம். அவர் 'நீங்கள் என்ன, எல்லாப்பிள்ளைகளும் இப்படித்தான் கற்று வருகிறார்கள்' என்று கூறினார். நாங்கள் 'மற்றவர்கள் எப்படி வேண்டுமானாலும் கற்றுக் கொள்ளட்டும், நாங்கள் அப்படி செய்ய மாட்டோம்' என்று அவரை நிறுத்தி விட்டு, கிறிஸ்தவ ஆசிரியரை தேடிப்பிடித்து, அவரிடம் கற்றுக் கொள்ள வைத்தோம்.

*நாம் கர்த்தருக்கென்று நேச வைராக்கியம் பாராட்டும்போது, அவரும் நமக்காக வைராக்கியம் காட்டுவார். நாம் உலகம் செல்லும் வழியில் சென்றால், நமக்குத்தான் நஷ்டம். நம்முடைய பிள்ளைகளுக்கு சிறு வயதில் இருந்தே கர்த்தருக்கென்று வாசிக்கும்படியாக சொல்லிக் கொடுப்போம். தங்களது எந்த தாலந்துகளானாலும், அதை கர்த்தருக்கென்றே உபயோகிக்கிற பிள்ளைகளாக நம் பிள்ளைகள் வளரட்டும். உலகத்திற்கு செய்யும்படி அநேகர் இருக்கிறார்கள். ஆனால் கிறிஸ்துவுக்காக நாம் செய்வது எதுவோ அது அநேகருக்கு பிரயோஜனமாகவும், கர்த்தருக்குள் அவர்களை நடத்துகிறவைகளாகவும் இருக்கும்.*

*சிலர் சபைக்காக நேச வைராக்கியம் காண்பிக்கிறோம் என்பார்கள். ஆனால் அவர்கள் வைராக்கியம் அவர்கள் பதவிகளின் மேலும், மனிதர்கள் மேலும் இருக்கிறதேயன்றி, கர்த்தருக்காக இருப்பதில்லை. கேட்டால் சபைக்காக நான் என்ன வேண்டுமானாலும் செய்வேன் என்று சொல்வார்கள். இது தேவனுக்காக பாராட்டுகிற வைராக்கியம் அல்ல, மனிதருக்காக பாராட்டுகிற வைராக்கியமே! சபைக்காக வைராக்கியம் பாராட்டுதல் என்பது, சபையில் மூப்பரோட இணைந்து சபையின் ஊழியங்களில் பங்கு கொள்வது, கர்த்தர் கொடுத்த போதகருக்கு கீழ்ப்பட்டு, அவருடன் ஊழியத்தில் இணைத்துக் கொள்வது, சபைக்கும், சபை விசுவாசிகளுக்கும் பிரயோஜனமாயிருப்பது போன்ற காரியங்களாகும். ஆனால் அதை விட்டுவிட்டு, பதவிக்கும், புகழுக்கும் ஆசைப்பட்டு, போதகர்களையும், அவர்களுடைய பிரசங்கங்களையும் கேலி செய்து, அவர்களை புண்படுத்தும் கூட்டமே இப்போது*

*பெருகி வருகிறது. நம் வைராக்கியம் மனிதர்கள் மேல் அல்ல, கர்த்தரின் மேலும், அவருடைய ஊழியங்களின் மேலும் பெருகட்டும்.*

*'நேசம் மரணத்தைப்போல் வலிது; நேசவைராக்கியம் பாதாளத்தைப்போல் கொடிதாயிருக்கிறது; அதின் தழல் அக்கினித் தழலும் அதின் ஜுவாலை கடும் ஜுவாலையுமாயிருக்கிறது' என்ற வசனத்தின்படி அப்படிப்பட்டதான நேசத்தை நமக்காக ஜீவனைக் கொடுத்து, அன்பு, நேசம் என்றால் என்னவென்று சொல்லிக்கொடுத்த கிறிஸ்துவின் மேல் காட்டுவோம். அவர் நம்மில் மகிழ்ந்து நம் மேல் இன்னும் நேச வைராக்கியமாய் இருப்பார். ஆமென் அல்லேலூயா!*

*உம்மீது கொண்ட நேசம்*
*அக்கினி ஜூவாலை அன்றோ*
*தண்ணீரும் வெள்ளங்களும்*
*தணிக்க முடியாதையா*

*உமக்கே ஸ்தோத்திரம் உமக்கே ஸ்தோத்திரம்*
*உயிருள்ள நாளெல்லாம் உமக்கே ஸ்தோத்திரம்*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, நீர் எங்களுக்காக காட்டிய நேச வைராக்கியத்தை நாங்களும் உம்மீது காட்டும்படி கிருபை செய்யும். எங்களது தாலந்துகளை உமக்கு மாத்திரம் உபயோகிக்கும்படியாக எங்களை உணர்த்தும். உலக காரியங்களுக்கு நாங்கள் விலகி,*

*உமக்கென்று ஜீவிக்கவும், உமக்காக வைராக்கியமாய் காரியங்களை செய்யவும் கிருபை தாரும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

## *16.* சிலுவையினால் ஒப்புரவு

*பகையைச் சிலுவையினால் கொன்று, அதினாலே இருதிறத்தாரையும் ஒரே சரீரமாகத் தேவனுக்கு ஒப்புரவாக்கினார் - (எபேசியர் 2:16).*

*கம்யூனிச தேசங்களுக்கும் அமெரிக்க தேசத்திற்குமிடையே பனிப்போர் நடந்து கொண்டிருந்த காலம் அது. அமெரிக்க தேசத்தை சேர்ந்த ஊழியர் ஒருவர் ருமேனியா தேசத்தில் வெளியரங்கமாய் சுவிசேஷம் அறிவிக்கத்தடை இருந்தும் இரகசியமாய் சில ஊழியங்கள் செய்யும்படி சென்றிருந்தார். ஒருநாள், கடும் குளிரிலே ஆள் நடமாட்டம் அதிகமில்லாத தெரு ஒன்றில் சென்று கொண்டிருந்தார். மக்கள் யாவரும் யாரையும் கண்டு கொள்ளாமல் அவரவர் தங்கள் வேலையாக சென்று கொண்டிருந்தனர். அப்போது ஒரு மனிதனின் விசில் சத்தம் அவரை ஒரு நிமிடம் ஆச்சரியத்தில் ஆழ்த்தி, திடுக்கிட செய்தது. ஏனெனில் அவர் 'மா பரிகாரியான இயேசு' என்ற பாமாலை பாடலை விசில் அடித்தபடி அந்த மனிதன் சென்று கொண்டிருநதார்.*

*கிறிஸ்துவை மறுதலிக்கும் தேசத்தில் இப்படி ஒரு நபரா என மகிழ்ச்சியடைந்து, அம்மனிதனுக்கு பின்பாக இவ்வூழியரும் பின் தொடர்ந்தார். யாரும் பார்த்து விட்டால் பிரச்சனை வரலாம் என்பதால் சிறுது தூரம் அமைதியாய் சென்ற அவர், பின் அந்த பாட்டை இவரும் விசில் அடிக்க ஆரம்பித்தார். அந்த பாட்டைக் கேட்டவுடன் அந்த ருமேனியர் பிரகாசமுள்ள முகத்தோடு திரும்பி வந்து,*

*ஊழியரை கட்டிப்பிடித்து கொண்டு தனது தாய் மொழியில் ஏதோதோ சொல்ல ஆரம்பித்தார். சிறிது நேரத்தில் தனது மொழி அவருக்கு புரியவில்லை என்பதை அறிந்து தனது இருதயத்தின் மேல் கைகளை வைத்தார். பின் கைகளை வானத்திற்கு நேராய் உயர்த்தினார். சிலுவை அடையாளத்தை வரைந்து காண்பித்தார். கட்டுக்கடங்காத மகிழ்ச்சியோடு மொழி, கலாச்சாரம், அரசியல் பின்னணி என ஏதோதோ வித்தியாசத்தில் வாழும் ஒருவருக்கொருவர் சம்மந்தமில்லா அவ்விருவரும் ஒரு சில நிமிடத்தில் இணைக்கப்பட்டனர். காரணம் என்ன? கிறிஸ்துவின் இரட்சிப்பின் சந்தோஷமே!*

*நம்முடைய ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவின் சிலுவை மரணம் மற்றும் உயிர்த்தெழுதலின் மூலம் இரண்டு பெரிய பிளவுகள் சரிசெய்யப்பட்டன.*

1. *தேவனுக்கும் மனிதனுக்கும் இடையேயிருந்த பெரிய இடைவெளியை இணைக்கும் பாலமானார்.*
2. *உலகிலுள்ள ஒவ்வொரு தனிமனிதனுக்கும் இடையேயுள்ள இடைவெளியையும் சரிபடுத்தினார்.*

*எப்படியெனில், மனிதனால் சராசரியாய் மற்றொருவரை நேசிப்பது கடினமான காரியம். மனிதன் மற்றவரிடத்தில் முகரீதியாக சிரித்து பேசினாலும், மற்றவருக்கு இடையே உள்ள கருத்து வேறுபாடுகளால் இருவரின் இருதயத்திற்கும் இடையில் பெரிய இடைவெளி உண்டு. அதை கிறிஸ்து, 'பகையைச் சிலுவையினால் கொன்று, அதினாலே*

*இருதிறத்தாரையும் ஒரே சரீரமாகத் தேவனுக்கு ஒப்புரவாக்கினார்' என்ற வசனத்தின்படி ஒப்புரவாக்குகிறார்.*

*ஒரு மனிதன் தன் சொந்த குடும்பத்தையே முழுமனதோடு நேசிப்பதில் குறைவுபடும்போது சிலுவை எப்படி சம்பந்தமில்லாத இரு வேறு மனிதர்களை இணைத்தது பார்த்தீர்களா? வேதமில்லாத உலகத்தின் சில கொள்கைகள் மக்களை ஓரளவிற்கு இணைக்கக்கூடும். ஆனால் இரு வேறு மனிதர்களின் இருதயங்களை அன்பினால் இணைக்க தேவனால் மட்டுமே முடியும். சிலுவையினால் மிகப்பெரிய பாவியும் கிறிஸ்து அவனுடைய பாவத்தை மன்னிக்கிறதால், தேவனோடு ஒப்புவாகும்படி செய்கிறார். மாத்திரமல்ல மற்ற கிறிஸ்தவர்களோடு ஒரே சரீரமாக இணையும்படி செய்கிறார். முன்பு கிறிஸ்துவுக்கு எதிர்த்து நின்ற சவுல், கிறிஸ்துவின் தரிசனத்திற்கு பிறகு பவுலாக மாறி, கிறிஸ்துவின் அப்போஸ்தலராக மாறின விந்தை கிறிஸ்துவின் சிலுவை அன்பினால் மாத்திரமே முடிந்தது. அல்லேலூயா!*

*சிலுவையின் நிழலில் அனுதினம் அடியான்*
*சாய்ந்திளைப் பாறிடுவேன்*
*சிலுவையின் அன்பின் மறைவில்*
*கிருபையின் இனிய நிழலில்*
*ஆத்தும நேசரின் அருகில்*
*அடைகிறேன் ஆறுதல் மனதில்*

***ஜெபம்:*** *எங்களை அதிகமாய் நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, பகையைச் சிலுவையினால் கொன்று, அதினாலே*

இருதிறத்தாரையும் ஒரே சரீரமாகத் உமக்கென்று ஒப்புரவாக்கினீரே உமக்கு ஸ்தோத்திரம். எந்த வேறுபாடுள்ள இரண்டு மனிதரையும் அன்பினாலே ஒருமனப்படுத்தும் சிலுவையின் அன்புக்காக உமக்கு ஸ்தோத்திரம். அந்த நேச குடும்பத்தில் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்ட ஒவ்வொருவரையும் அங்கத்தினராக வைத்ததற்காக உமக்கு கோடா கோடி நன்றி. எங்கள் ஜெபத்தை கேட்டு எங்களுக்கு பதில் கொடுப்பவரே உமக்கே நன்றி. இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.

## 17. செம்மறியாடா? வெள்ளாடா?

*மேய்ப்பனானவன் செம்மறியாடுகளையும் வெள்ளாடுகளையும் வெவ;வேறாகப் பிரிக்கிறதுபோல அவர்களை அவர் பிரித்து, செம்மறியாடுகளைத் தமது வலதுபக்கத்திலும், வெள்ளாடுகளைத் தமது இடதுபக்கத்திலும் நிறுத்துவார் (மத்தேயு 25:32-33)*

*கர்த்தராகிய இயேசுகிறிஸ்து சொன்ன இந்த உவமையை நாம் அநேகந்தரம் படித்திருக்கிறோம். ஆனால் அதை கூர்ந்து ஆராய்ந்தால், கர்த்தர் ஏன் ஆத்துமாக்களை செம்மறியாடு என்றும், வெள்ளாடு என்றும் வகை பிரித்தார் என அறிய முடியும்.*

*செம்மறியாடு (Sheep ) என்பது அதன் ரோமத்திற்காக வளர்ப்பார்கள். ஆனால் இந்த செம்மறியாட்டின் தன்மைகளை பார்ப்போமானால், அது சாதுவானதாகவும், முரட்டு தன்மை இல்லாததாகவும், தன்னுடைய மேய்ப்பனை சார்ந்ததாகவுமே ஜீவிக்கும். அப்படி இருப்பதானால்தான் ஒரு செம்மறியாடு காணாமல் போனாலும், அதன் மேய்ப்பன் அதை தேடி கண்டுபிடிக்க தன்னால் இயன்றதை செய்வான். அதை எதிர்த்து யாராவது போராட வந்தால் அமைதியாக விட்டுக்கொடுக்குமே தவிர அவர்களோடு போராடாது. அமைதி காக்கும். மேய்ப்பர்கள் அந்த செம்மறியாடுகளை சுற்றுப்புற சூழலிலிருந்து பாதுகாப்பார்கள்.*

*ஆனால் வெள்ளாடுகள் (Goat ) அப்படிப்பட்டவை அல்ல, எதிர்மாறானவை. முரட்டு தன்மை உள்ளதாகவும், எதனோடும் எதிர்த்து நிற்பதாகவும், சண்டையிடும் குணம் உள்ளதாகவும் இருக்கும். தன்னிச்சையாகஈ சுதந்திரமாக செயல்படும் இவை சில நேரங்களில் மனிதர்களை முட்டி தள்ளும் இயல்புடையவை. இவற்றை ஒரு மேய்ப்பன் வழிநடத்துவதில்லை. ஒரு வெள்ளாடு போனால் எல்லா ஆடுகளும் அதன் பின்னே செல்லும். இந்த வெள்ளாடுகளிடமிருந்து சுற்றுப்புற சூழலை மேய்ப்பர்களோ, மற்ற மனிதர்களோ காக்க வேண்டும்.*

*செம்மறியாடுகள் விசுவாசிகளை குறிப்பதாகவும், வெள்ளாடுகள் அவிசுவாசிகளையும், கர்த்தரை அறியாதவர்களை குறிப்பதாகவும் இந்த உவமையில் பார்க்கிறோம். செம்மறியாடுகளை தமது வலது பக்கத்தில் நிறுத்தி வைத்து, 'அப்பொழுது, ராஜா தமது வலதுபக்கத்தில் நிற்பவர்களைப் பார்த்து: வாருங்கள் என் பிதாவினால் ஆசீர்வதிக்கப்பட்டவர்களே, உலகம் உண்டானது முதல் உங்களுக்காக ஆயத்தம்பண்ணப்பட்டிருக்கிற ராஜ்யத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்கள். பசியாயிருந்தேன், எனக்குப் போஜனங்கொடுத்தீர்கள்; தாகமாயிருந்தேன், என் தாகத்தைத் தீர்த்தீர்கள்; அந்நியனாயிருந்தேன், என்னைச் சேர்த்துக்கொண்டீர்கள்; வஸ்திரமில்லாதிருந்தேன், எனக்கு வஸ்திரங்கொடுத்தீர்கள்; வியாதியாயிருந்தேன், என்னை விசாரிக்க வந்தீர்கள்; காவலிலிருந்தேன், என்னைப் பார்க்கவந்தீர்கள் என்பார்' (மத்தேயு 25:34-36) என்று சொல்வார்.*

*இரட்சிப்பு இலவசம் என்றாலும், அதன்பிறகு நம்முடைய கிரியைகளும் மிகவும் முக்கியம். இரட்சிப்பை பெற்றுக் கொள்ள நம்முடைய கிரியைகள் எதுவும் தேவையில்லை என்றாலும், அதை காத்துக்கொள்ள, அதில் நிலைத்திருக்க நம்முடைய கிரியைகள் தேவை. இரட்சிக்கப்படுவதற்கு முன் நாம் செய்த கிரியைகள் ஒருவேளை கர்த்தரால் அங்கீகரிக்கப்படாவிட்டாலும், இரட்சிக்கப்பட்டப்பின் நாம் செய்யும் ஒவ்வொரு கிரியையும் கர்த்தரால் கவனிக்கப்படுகிறது. நம் கணக்கில் வைக்கப்படுகிறது. பசியாயிருந்தவர்களுக்கு போஜனம் கொடுப்பதும், தாகமாயிருந்தவர்களுக்கு தண்ணீரை கொடுத்ததும், வஸ்திரம் இல்லாதவர்களுக்கு வஸ்திரம் கொடுத்ததும் நாம் மறந்திருக்கலாம். ஆனால் கர்த்தர் மறப்பதில்லை. தமது கணக்கில் அவர் வைத்திருப்பார்;. குடைசி நாளில் நம்மை நியாயம் தீர்க்கும்போது, அந்த கிரியைகள் நம்மை செம்மறியாடா, வெள்ளாடா என பிரிக்கும்.*

*வெள்ளாடாயிருந்து, முரட்டாட்டம் செய்து, சுற்றிலும் இருப்பவர்களோடு சண்டையிட்டு, யாருக்கும் அடங்காமல், தன்னிச்சையாக, சுதந்திரமாக வாழ்வோம் என்றால் நாம் வெள்ளாட்டின் கூட்டத்தில், இடது பக்கத்தில் நிற்பவர்களாக காணப்படுவோம். அப்போது நம் நிலைமை பரிதாபமாயிருக்கும். பசித்து வந்தவர்களை துரத்தியும், தாகத்தோடு இருந்தவர்களுக்கு தண்ணீரை கொடாமலும், எத்தனையோ வஸ்திரம் இருந்தாலும், இல்லாதவர்களுக்கு கொடாமலும் சுயநலமாய் ஜீவித்தால் அப்படிப்பட்ட*

*நிலைமை ஏற்படும். அப்பொழுது, இடதுபக்கத்தில் நிற்பவர்களைப் பார்த்து அவர்: சபிக்கப்பட்டவர்களே, என்னைவிட்டு, பிசாசுக்காகவும் அவன் தூதர்களுக்காகவும் ஆயத்தம்பண்ணப்பட்டிருக்கிற நித்திய அக்கினியிலே போங்கள் என்று கர்த்தர் சொல்லுவார்.*

*அந்தப்படி, இவர்கள் நித்திய ஆக்கினையை அடையவும், நீதிமான்களோ நித்திய ஜீவனை அடையவும் போவார்கள் என்றார் (46ம் வசனம்). அது எத்தனை பயங்கரமானதாக இருக்கும்!*

*நாம் வாழும் இந்த நாட்களிலேயே நாம் செம்மறியாடா அல்லது வெள்ளாடா என்று தீர்மானிப்பது நம் கையில்தான் இருக்கிறது. மேய்ப்பனின் குரல் கேட்டு, அவருடைய சித்தத்தின்படி செய்து, அவருக்கு கீழ் அடங்கியிருந்து, அவருடைய நீதியுள்ள நியாயத்தீர்ப்பில் வலதுபக்கம் நிற்பவர்களாக, நித்திய ஜீவனை பெற்றுக்கொண்டவர்களாக நித்திய நித்தியமாய் கர்த்தரோடு வாழ கர்த்தர் நம் ஒவ்வொருவருக்கும் கிருபை செய்வாராக! ஆமென் அல்லேலூயா!*

*பள்ளத்தாக்கில் நடந்தாலும்*
*பயமில்லை பாதிப்பில்லை*
*உம்குரலோ கேட்குதையா*
*உள்ளமெல்லாம் அன்பால் துள்ளுதையா*

*நல் மேய்ப்பரே நம்பிக்கையே*

*நானும் உந்தன் ஆட்டுக்குட்டி*
*உம்மைதானே பின் தொடர்ந்தேன்*
*உம் தோளில்தான் நாம் இருப்பேன்*

*துதித்து துதித்து மகிழ்ந்து புகழ்ந்து*
*தூயவர் உம்மை நான் பாடுவேன்*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, நீர் எங்கள் மேய்ப்பராக இருப்பதற்காக உமக்கு ஸ்தோத்திரம். செம்மறியாடுகளைப் போல மேய்ப்பனுக்கு கீழ்ப்பட்ட ஆடுகளாக, நீர் விரும்பும்படி வாழ்ந்து, நியாயத்தீர்ப்பில் வலது பக்கத்தில் நிற்பவர்களாக எங்களை மாற்றும். எங்களை இப்போதிருந்தே ஆயத்தப்படுத்தும். நியாயத்தீர்ப்பின் நாளிலே வெட்கப்பட்டு போகாதபடி எங்கள் கிரியைகளினாலே உம்மை மகிமைப்படுத்த கிருபை செய்தருளும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

## 18. விழாமல் காத்திடுமே

*இப்படியிருக்க, தன்னை நிற்கிறவனென்று எண்ணுகிறவன் விழாதபடிக்கு எச்சரிக்கையாயிருக்கக்கடவன் - (1கொரிந்தியர் 10:12).*

ஒரு போர் நடந்து கொண்டிருந்த காலத்தில், ஒரு இராணுவ அதிகாரி தன் போர் வீரர்கள் எப்படி செய்கிறார்கள் என்பதை பார்வையிட சென்றிருந்தார். அவர் எதிரிகளுக்கு எதிரான சுவர் போன்ற ஒரு இடத்தில் நின்று கொண்டு எதிரியின் படைகளை பார்க்க சென்றார். அப்போது அந்த இராணுவத்தை சேர்ந்த உயர் அதிகாரிகள், 'இந்த இடத்தில் நீங்கள் குனிந்து செல்ல வேண்டும். எதிரிகள் சுடுவார்கள்' என்று எச்சரித்தனர். ஆனால் அவரோ, 'ஒரு யானையே நின்றாலும் அவ்வளவு தூரத்தில் இருந்து எதிரிகளுக்கு தெரியாது' என்று கூறியவாறு பார்வையிட்டு கொண்டிருந்தார். அவர் சொல்லி முடிக்கவும், அவர் மேல் எதிரியின் ஒரு குண்டு பாய்ந்து, அந்த இடத்திலேயே உயிர் இழக்க நேரிட்டது. எதிரியை குறித்து அத்தனை தவறாக எடை போட்டார். அதனால் அவர் உயிருக்கே ஆபத்து வந்தது.

'தன்னை நிற்கிறவனென்று எண்ணுகிறவன் விழாதபடிக்கு எச்சரிக்கையாயிருக்கக்கடவன்' என்று வேதம் நம்மை எச்சரிக்கிறது. நீங்கள் எத்தனை ஆவிக்குரியவர்களாயிருந்தாலும் சரி, எத்தனை சோதனைகளை ஜெயித்தவர்களாயிருந்தாலும் சரி, வசனம் சொல்கிறது விழாதபடிக்கு எச்சரிக்கையாயிருக்ககடவன் என்று. சத்துருவுக்கு எதிரான

*நம்மை காத்து கொள்வதில் நாம் மிகுந்த எச்சரிக்கையாயிருக்க வேண்டும். கிறிஸ்தவ வாழ்க்கை என்பது, ஒரு இரயிலில் போய் ஏறி, காலை வரை தூங்கி, பின் நம் இடத்திற்கு செல்லும் சொகுசான வாழ்க்கை அல்ல. 'தெளிந்த புத்தியுள்ளவர்களாயிருங்கள், விழித்திருங்கள்; ஏனெனில், உங்கள் எதிராளியாகிய பிசாசானவன் கெர்ச்சிக்கிற சிங்கம்போல் எவனை விழுங்கலாமோ என்று வகைதேடிச் சுற்றித்திரிகிறான்'(1பேதுரு 5:8) என்று வேதம் நம்மை எச்சரிக்கின்றது.*

*தேவன் தமக்கென்று ஒரு கூட்ட ஜனத்தை ஆயத்தபடுத்தி கொண்டிருக்கிறார் என்பதை எதிராளியாகிற பிசாசானவன் அறிவான். தான் ஒரு விழுந்து போன தூதன் என்பதையும், பரலோகத்தில் தான் இழந்த இடத்தை கர்த்தருக்குள் ஜீவிக்கிற பரிசுத்தவான்கள் பெற்று கொள்ள முடியும் என்பதையும் அவன் அறிவான். ஆகவே பரிசுத்தமாய் ஜீவிக்கிற எந்த ஒருவரையும் அவன் விட்டு வைக்க விரும்புவதில்லை. உலகம், மாமிசம் பிசாசு இதன் கீழ் அனைவரையும் சிக்க வைக்க அவன் கெர்ச்சிக்கிற சிங்கம் போல எவனை விழுங்கலாமோ என்று வகை தேடி சுற்றி திரிகிறான். இன்னொரு வார்த்தையில் சொல்லப்போனால், பெண்ணாசை, பொன்னாசை, மண்ணாசை இவைகளை கவர்ச்சியாக்கி பரிசுத்தவான்களை இழுக்க பார்க்கிறான். அநேக பரிசுத்தவான்கள் இவற்றிற்கு விழுந்து போனார்கள். தாவீது ராஜா கர்த்தரையே தஞ்சமாக கொண்டவர், கர்த்தரின் இருதயத்திற்கு ஏற்றவராக இருந்தவர், இந்த பாவங்களில் ஒன்றில் விழுந்து போனார்.*

ஆகவே, நாம் சாத்தானின் தந்திரங்களை லேசாக நினைத்து, அவன் என்னை என்ன செய்ய முடியும் என்று சாதாரணமாக நினைத்தால், விழுந்து போவோம். வசனம் எச்சரிக்கிறது போல, தெளிந்த புத்தியுள்ளவர்களாக, விழித்திருந்து, சத்துரு விரிக்கும் வலையில் சிக்கி கொள்ளாதபடி நம்மை காத்து கொள்ள வேண்டும். தேவன் நாம் வலையில் விழாதபடி, நம் கால்கள் சிக்கி கொள்ளாதபடி காப்பார் என்பது உண்மையாயினும், நாமாக போய் விழும்போது, மனிதனுடைய சித்தத்திற்கு மாறாக அவரால் எதையும் செய்ய முடியாது. அவரவருக்கு சுய சித்தம் இருப்பதால், அதன்படி அவர்கள் செய்யும்போது, கர்த்தரால் அந்த நேரத்தில் பாவத்திலிருந்து தடுத்து நிறுத்த முடியாது.

பாவத்தின் சம்பளம் மரணம் என்று வேதம் நம்மை எச்சரிக்கிறது. ஒரு பரிசுத்தவான் தொடர்ந்து பாவம் செய்து கொண்டே இருப்பானானால் அதன் முடிவு மரணமே. அவனுடைய ஆவிக்குரிய வாழ்வில் மரணம் ஏற்படும், பரிசுத்த ஆவியானவர் அவனிடமிருந்து எடுக்கப்பட்டு போவார், ஆனால் அவனோ அதை அறியாமல், இன்னும் தேவன் என்னோடு இருக்கிறார் என்று தொடர்ந்து பாவத்திலும் பரிசுத்தத்திலும் மாறி மாறி இருப்பானானால், அவன் முடிவு பரிதாபமாக இருக்கும்.

'மனுபுத்திரனே, நீ உன் ஜனத்தின் புத்திரரை நோக்கி: நீதிமான் துரோகம்பண்ணுகிற நாளிலே அவனுடைய நீதி அவனைத் தப்புவிப்பதில்லை; துன்மார்க்கன் தன் துன்மார்க்கத்தைவிட்டுத் திரும்புகிற நாளிலே அவன் தன்

*அக்கிரமத்தினால் விழுந்துபோவதுமில்லை; நீதிமான் பாவஞ்செய்கிற நாளிலே தன் நீதியினால் பிழைப்பதுமில்லை. பிழைக்கவே பிழைப்பாய் என்று நான் நீதிமானுக்குச் சொல்லும்போது, அவன் தன் நீதியை நம்பி, அநியாயஞ்செய்தால், அவனுடைய நீதியில் ஒன்றும் நினைக்கப்படுவதில்லை; அவன் செய்த தன் அநியாயத்திலே சாவான்' - (எசேக்கியேல் 33:12-13)*

*நீதிமான் தன்னுடைய நீதியை நம்பி, நான் இத்தனை நன்மைகளை செய்திருக்கிறேன், நான் இந்த ஒரு தவறை செய்வதினால் என்ன, கர்த்தர் அதை ஒன்றும் பெரிதாக நினைத்து கொள்ளமாட்டார் என்று தன் நீதியை நம்பி பாவம் செய்வானானால், கர்த்தர் திட்டவட்டமாக எச்சரிக்கிறார், அவனுடைய நீதியில் ஒன்றும் நினைக்கப்படுவதில்லை; அவன் செய்த தன் அநியாயத்திலே சாவான். ஆகவே நிற்கிறோம் என்று நினைக்கிற ஒருவரும் பாவத்தில் விழுந்து போகாதபடி எச்சரிக்கையாயிருந்து நம்மை காத்து கொள்வோம். தேவன் தாமே நம் ஒவ்வொருவருக்கும் அந்த இரக்கத்தை கட்டளையிடுவாராக! ஆமென் அல்லேலூயா!*

*எனக்கு உம் கிருபை போதுமே இயேசுவே*
*எனக்கு உம் கிருபை போதுமே*
*கவலைகள் நிறைந்த துன்ப உலகிலே*
*எனக்கு உம் கிருபை போதுமே இயேசுவே*

*நாதனின் வருகை தாமதமானால்*
*விழாமல் காத்திடுமே என்னை*

*விழாமல் காத்திடுமே*

**ஜெபம்:** *எங்களை அதிகமாய் நேசித்து பராமரிக்கும் நல்ல தகப்பனே, சத்துருவானவன் தனக்கு கொஞ்ச காலம் மாத்திரம் இருக்கிறது என்பதை அறிந்து, பரிசுத்தவான்களை விழ தக்கதாக கிரியைகளை செய்து கொண்டிருக்கும் இந்த கொடிய நாட்களில், நாங்கள் விழுந்து போகாதபடி எச்சரிக்கையாயிருக்க எங்களுக்கு உதவி செய்யும் தகப்பனே. எங்களுக்கு உம்முடைய கிருபை போதுமே ராஜா, இந்த பாழ் உலகத்தின் இச்சைகளிலிருந்தும், கவர்ச்சிகளிலிருந்தும் எங்களை காத்து கொள்ள எங்களுக்கு உம்முடைய கிருபை போதுமே தகப்பனே. கிறிஸ்துவின் வருகை சமீபமாயிருப்பதால், நாங்கள் பாவம் செய்து கைவிடப்பட்டவர்களாக போய் விடாதபடி, எங்கள் ஆவி ஆத்துமா சரீரத்தை குற்றமற்றதாக காத்து கொள்ள தேவன் தாமே கிருபை செய்வீராக. இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

## *19.* தேவனுடைய வீட்டில் துவங்கும் நியாயத்தீர்ப்பு

*'நியாயத்தீர்ப்பு தேவனுடைய வீட்டிலே துவக்குங்காலமாயிருக்கிறது; முந்தி நம்மிடத்திலே அது துவக்கினால் தேவனுடைய சுவிசேஷத்திற்குக் கீழ்ப்படியாதவர்களின் முடிவு என்னமாயிருக்கும்? நீதிமானே இரட்சிக்கப்படுவது அரிதானால், பக்தியில்லாதவனும் பாவியும் எங்கே நிற்பான்?' - (1 பேதுரு 4:17-18)*

*நியாயத்தீர்ப்பை குறித்து மிக முக்கியமான ஒரு காரியத்தினை தெளிவாக நமக்காக பேதுருவை கொண்டு தேவன் வேதத்தில் எழுதி வைத்திருக்கிறார். இன்றைய நாட்களின் செய்தித்தாள்களை நாம் வாசித்துப்பார்த்தால் உலகத்தில் நடைபெற்று வரும் காரியங்கள் இது தேவனுடைய நியாயத்தீர்ப்பு வந்திறங்கும் காலம் என்பதை நாம் உணர்ந்து கொள்ளமுடியும். இதனை நாம் மறுக்க முடியாது.*

*தேவனுடைய நியாயத்தீர்ப்பு எங்கு தொடங்கும்? நியாயத்தீர்ப்பு எப்படி நடக்கும்? என்று பலவிதமான கேள்விகள் நம் மனதில் எழும்பினாலும் தேவனது நியாயத்தீர்ப்பு தேவனுடைய வீடாகிய சபையிலேயே துவங்கும் என்று வேதம் கூறுவதை நாம் அறிந்து கொள்ள வேண்டும். 'கிறிஸ்து இயேசுவுக்குட்பட்டவர்களாயிருந்து, மாம்சத்தின்படி நடவாமல் ஆவியின்படியே நடக்கிறவர்களுக்கு ஆக்கினைத்தீர்ப்பில்லை' (ரோமர் 8:1)என்று எழுதப்பட்டிருப்பதால் நியாயத்தீர்ப்பு தேவனுடைய வீட்டில் தொடங்குவது எப்படி என்ற கேள்வி நமக்குள் உண்டாகலாம்.*

ஏன் தேவனுடைய வீட்டிலே நியாயத்தீர்ப்பு உண்டாக வேண்டும்? அது எப்படி நடக்கும்? என்று வேதத்தின் அடிப்படையில் நாம் சில காரியங்களை புரிந்து கொள்வது அவசியம்.

அமெரிக்காவிலே கிறிஸ்தவ மனிதன் ஒருவன் பெரிய செல்வந்தனாகி அவனது தொழில் பெருகிய போது, அதே மனிதன் 'நான் பணக்காரனானதற்கு காரணம் சாத்தானே, எனவே எனது தொழிலில் வரும் இலாபத்தின் பெரும்பகுதியை சாத்தானுக்கும் சாத்தானை வழிபடுகின்ற ஆலயத்திற்கும் கொடுக்கிறேன்' என்று பகிரங்கமாக தொலைக்காட்சியில் அறிக்கையிட்டான். அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் சாத்தானை வழிபடுகின்றவர்களின் கூட்டம் பெருகிவருகின்றது. சமீபத்தில் ஒரு வாலிபன் அவனது சரீரத்தில் நெருப்பு பற்றி எரிவதை போன்று உடலெங்கும் பச்சை குத்தி கொண்டும், அவனது கரத்தில் சாத்தானின் கொடூர முகத்தை பச்சை குத்தியும், சிலுவையை தலைகீழாக வரைந்து, அதன் கீழ் நெருப்பு பற்றி எரிவதை போன்றும் உடலெங்கும் பச்சை குத்தி கொண்டு வந்திருந்தான். அதை பார்க்கும்போதே அருவருப்பாய் இருந்தது. அவன் பெயர் பீட்டர்! என்ன ஒரு விசுவாச துரோகம்!

தற்போது சாத்தானை வழிபடுகின்றவர்கள் ஒன்றுக்கும் அஞ்சுவதில்லை. தைரியமாக வெளியே சுற்றி உலாவி வருகின்றனர். இது போதாமல், போதகர்களும் சபையின் மூப்பர்களுமே சாத்தானின் போதனைகளால் வஞ்சிக்கப்பட்டு வருகின்றனர். மனுஷகுமாரன் வரும்போது பூமியிலே

*விசுவாசத்தைக் காண்பாரோ (லூக்கா 18:8) என்றும், எவ்விதத்தினாலும் ஒருவனும் உங்களை மோசம் போக்காதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; ஏனெனில் விசுவாச துரோகம் முந்தி நேரிட்டு, கேட்டின் மகனாகிய பாவமனுஷன் வெளிப்பட்டாலொழிய, அந்த நாள் வராது - (2 தெசலோனிக்கேயர் 2:3) என்றும் வேதம் கூறுகிறது.*

*பட்டம் பெற்றவர்களும் வேதத்தை படித்தவர்களும் மேடையில் நின்று கொண்டு விசுவாசத்திற்கு விரோதமான பிரசங்கங்களை செய்வது இக்காலங்களில் அதிகரித்து வருகின்றது. நானே கடவுள் என்று சமீபத்தில் போதிக்கிற போதகர்களும், அதனை கைதட்டி இரசிக்கிற மூட ஜனங்களும் வார்த்தைக்கு விரோதமாக போதிக்கிற போதகர்களுக்கு அடையாளம்! சிலர் சாத்தானே இல்லை என்று துணிந்து எழுதுகிறார்கள், பேசுகிறார்கள். வேத வார்த்தைகள் ஒருபோதும் பொய் சொல்வதில்லை. ஆனால் அதை திரித்து எழுதியும்,பேசும் ஊழியர்கள் எழும்பி வருகிறார்கள்! விசுவாசிகள் என்று அழைக்கப்படுகிற விசுவாசத்தை அறிக்கையிடுகிறவர்கள் மத்தியிலேயே விசுவாச துரோகம் நடைபெறுகின்றது. ஒரு ஊழியர் ஒரு சபையில் பேசப்போகும்போது, அதன் போதகர், 'பாவத்தை குறித்து அதிகமாக கண்டித்து பேசாதீர்கள், அதிகமாக கண்டித்தால், ஜனங்கள் ஆண்டவரை விட்டு ஓடிப்போய் விடுவார்கள்' என்று கூறினாராம். யோவான் ஸ்நானகன் பாவத்தை குறித்து கண்டித்து உணர்த்தினான். அவன் அற்புதங்க்ள ஏதும் செய்யாதிருந்தும், அவன் பேசியதை கேட்க வனாந்திரத்திற்கு அநேக ஜனங்கள் அவனை தேடி வந்தார்கள். பாவத்தை*

*குறித்து அதிகம் கண்டித்து பேசினால், காணிக்கை கிடைக்காது என்று பயப்படுகின்ற போகர்களும் இந்நாட்களில் உண்டு. பாவத்திற்கு விரோமாய் போராடுகிறதில் இரத்தஞ்சிந்தத்தகக்கதாக நீங்கள் இன்னும் எதிர்த்து நிற்கவில்லையே (எபிரேயர் 12:4) பாவத்திற்கு விரோதமாய் இரத்தம் சிந்தும் அளவிற்கு நாம் எதிர்த்து நிற்க வேண்டும் என்று தேவன் நம்மிடத்தில் எதிர்ப்பார்க்கிறார்.*

*விசுவாச துரோகம் வெளியில் அல்ல, இக்காலத்தில் சபைக்குள்ளேயே ஏற்படுகின்றது. சத்துரு தன்னுடைய அவலட்சணத்தை ஜனங்களுக்கும் விதைப்பதற்கு அநேக பிரசங்கியார்களையும், போதகர்களையும் உபயோகப்படுத்த தொடங்கி வருகின்றான். எனவே தேவன் தமது நியாயத்தீர்ப்பை தம்முடைய வீட்டிலே துவங்குகின்றார்.*

*'தூற்றுக்கூடை அவர் கையில் இருக்கிறது; அவர் தமது களத்தை நன்றாய் விளக்கி, தமது கோதுமையைக் களஞ்சியத்தில் சேர்ப்பார்; பதரையோ அவியாத அக்கினியினால் சுட்டெரிப்பார்' (மத்தேயு 3: 12) என்று நியாயத்தீர்ப்பின்போது இயேசு செய்யப்போகின்ற காரியத்தை யோவான் தெளிவாக வெளிக்காட்டுகின்றார். தேவன் தமது களத்தை விளக்குவார் என்ற சொல்கின்றார்.*

*எது அவருடைய களம்? கர்த்தருடைய ஆலயம், சபை, வீடு, அதுவே தேவனது களம். தேவன் தமது களத்தை நன்றாக விளக்கி சுத்தம் செய்வார். பதர் தோற்றத்தில் கோதுமை மணியைப் போலவே காட்சியளிக்கும். வெளியில்*

*பார்க்கும்போது, அதன் உருவத்தில் வித்தியாசம் எதுவும் தெரிவதில்லை. ஆனால் பதரை உடைத்து பார்க்கும்போது, அதிலே தானியம் இருக்காது. தேவனது களத்தில் நாம் கோதுமையாக இருக்கின்றோமா அல்லது பதராக காட்சியளிக்கின்றோமா? நாம் ஒளியில் இருக்கின்றவர்களை போல காட்சியளிக்கலாம், கர்த்தருக்காக பாடல்களை பாடலாம், கிறிஸ்துவின் காரியங்களை பேசலாம். ஆனால் நம்மை சோதிக்கும் காலம் வருகின்றது. நாம் பதராயிருந்தால் ஜீவனை பெற்று கொள்ளும்படியாக அவரிடத்தில் ஓடிவர வேண்டும். 'குமாரனை உடையவன் ஜீவனை உடையவன், தேவனுடைய குமாரன் இல்லாதவன் ஜீவன் இல்லாதவன்' (1 யோவான் 5:12) தூற்றுக்கூடை ஏந்தியவராக தமது வீட்டிலே தேவன் நியாயத்தீர்ப்பை தொடங்குவார். அவருடைய நியாயத்தீர்ப்பு நம்மேல் வராதபடிக்கு இப்போதே விழித்திருந்து ஜெபித்து, ஆண்டவருக்காக செயல்பட கர்த்தருடைய வீட்டிலே உண்மையாயிருக்க நம்மை அர்ப்பணிப்போம். ஆமென் அல்லேலூயா!*

*கோதுமையைப் பிரித்து களஞ்சியத்தில் சேர்த்து*
*பதரையோ அக்கினியில் சுட்டெரிப்பாரே*
*கறையில்லாமலே குற்றமில்லாமலே*
*கர்த்தருக்காய் வாழ்ந்து முன்னேறுவோம்*

*பள்ளங்களெல்லாம் நிரம்பிட வேண்டும்*
*மலைகள் குன்றுகள் தகர்ந்திட வேண்டும்*
*கோணலானவை நேராகணும்*
*கரடானவை சமமாகணும்*

*இராஜா வருகிறார் ஆயத்தமாவோம் (2)*
*இயேசு வருகிறார் எதிர் கொண்டு செல்வோம்*

**ஜெபம்:** *எங்களை அதிகமாய் நேசித்து நல்ல தகப்பனே, தேவனுடைய நியாயத்தீர்ப்பு கர்த்தருடைய வீட்டில் துவங்கும் என்றால் நாங்கள் எத்தனை ஜாக்கிரதையுள்ளவர்களாக ஜீவிக்க வேண்டும்! நாங்கள் வெளியிலே கோதுமையை போல காணப்பட்டு, உள்ளேயோ பதரை போல வாழ்ந்து கொண்டிருந்தோமானால், நியாயத்தீர்ப்பிலே எரிக்கப்பட்டு போவோமே, கர்த்தாவே நாங்கள் உண்மையிலே கோதுமை மணிப்போல வாழத்தக்கதாக எங்ளை உம்முடைய சமுகத்தில் அர்ப்பணிக்கிறோம். கர்த்தருடைய வருகை வெகு சீக்கிரம் இருக்கப்போகிற படியால் நாங்கள் ஆயத்தமாகி காத்திருக்க எங்களுக்கு உணர்த்தும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 20. அவர் மேல் விழுந்த ஆக்கினை

*நம்முடைய மீறுதல்களினிமித்தம் அவர் காயப்பட்டு, நம்முடைய அக்கிரமங்களினிமித்தம் அவர் நொறுக்கப்பட்டார்; நமக்குச் சமாதானத்தை உண்டுபண்ணும் ஆக்கினை அவர்மேல் வந்தது; அவருடைய தழும்புகளால் குணமாகிறோம். நாமெல்லாரும் ஆடுகளைப்போல வழிதப்பித் திரிந்து, அவனவன் தன் தன் வழியிலே போனோம்; கர்த்தரோ நம்மெல்லாருடைய அக்கிரமத்தையும் அவர்மேல் விழப்பண்ணினார் - (ஏசாயா 53:5-6).*

*ஜோ என்பவர், கவர்னரின் தனிப்பட்ட ஆலோசகராக இருந்தார். கவர்னர் தன்னுடைய எல்லா காரியத்திலும் அவருடைய ஆலோசனையை கேட்காமல் ஒன்றையும் செய்ய மாட்டார். கவர்னரின் சிறந்த நண்பராக ஜோ இருந்தார். ஒரு நாள் திடீரென்று ஜோ தன் நித்திரையில் மரித்து போனார்.*

*அவர் மரித்த செய்தியை கேட்டவுடனே, அநேகர் கவர்னரிடம் வந்து, தங்களுக்கு அந்த பதவியை தரும்படி வேண்டிக்கொண்டனர். ஆனால் யாருக்கும் அந்த பதவியை கவர்னர் தரவில்லை. 'இந்த மனிதர்களால் அந்த மனிதரின் உடலை அடக்கம் பண்ணுகிற வரைக்கூட காத்திருக்க முடியவில்லை. அதற்குள் தங்களுக்கு அந்த பதவி வேண்டும் என்று கேட்கிறார்களே' என்று வேதனைப்பட்டார்.*

*கல்லறையில் அவரை அடக்கம் பண்ணிவிட்டு, வரும் வழியில் ஒரு மனிதர் அவரிடம் ஓடி வந்து, 'ஐயா, ஜோ*

*இருந்த இடத்திற்கு நான் வருவதற்கு ஏதாவது வழி உண்டா?' என்று கேட்டார். உடனே கவர்னர், 'ஓ இருக்கிறதே, சீக்கிரம் போங்கள், அந்த கல்லறை வெட்டியான், அந்த குழியை சீக்கிரம் மூடப் போகிறான்' என்று கூறினார்.*

*நம்மை சுற்றி இருக்கிற மக்கள் அநேகர், 'அவள் அல்லது அவன் இருக்கிற இடத்தில் நான் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்' என்று எத்தனையோ முறை சொல்வதை கேட்டிருக்கிறோம். ஆனால் மரிக்கும் ஒருவரின் அல்லது மரித்த ஒருவரின் இடத்தில் நாம் இருப்பதை விரும்பமாட்டோம். இங்குதான் தேவனின் அன்பு நம்மிடத்தில் வெளிப்படுகிறது. நீதிமானுக்காக ஒருவன் மரிக்கிறது அரிது; நல்லவனுக்காக ஒருவேளை ஒருவன் மரிக்கத் துணிவான். நாம் பாவிகளாயிருக்கையில் கிறிஸ்து நமக்காக மரித்ததினாலே, தேவன் நம்மேல்வைத்த தமது அன்பை விளங்கப்பண்ணுகிறார் (ரோமர் 5:7-8).*

*பாவத்தில் மரித்த நம்மை, நம் பாவத்தினிமித்தம் நாம் படவேண்டிய பாடுகளை கிறிஸ்து நமக்காக பட்டு, நாம் இருக்கவேண்டிய இடத்தில் அவர் நமக்காக மரித்ததினாலே தேவன் நம்மேல்வைத்த தமது அன்பை விளங்கப்பண்ணுகிறார். அல்லேலூயா!*

*நாமெல்லாரும் ஆடுகளைப்போல வழிதப்பித் திரிந்து, அவனவன் தன் தன் வழியிலே போனோம்; கர்த்தரோ நம்மெல்லாருடைய அக்கிரமத்தையும் அவர்மேல் விழப்பண்ணினார்.*

*மட்டுமல்ல, இருளின் அதிகாரத்தினின்று நம்மை விடுதலையாக்கி, தமது அன்பின் குமாரனுடைய ராஜ்யத்திற்கு உட்படுத்தினவருமாயிருக்கிற பிதாவை ஸ்தோத்திரிக்கிறோம். (குமாரனாகிய) அவருக்குள், அவருடைய இரத்தத்தினாலே, பாவமன்னிப்பாகிய மீட்பு நமக்கு உண்டாயிருக்கிறது(கொலோசெயர்1:13-14).*

*நரகாக்கினையிலிருந்து நம்மை மீட்டு, நாம் அனுபவிக்க வேண்டிய பாடுகளை தாம் சுமந்து, நம் பாவங்களை மன்னித்து, நம்மை இரட்சித்து மீட்ட அன்பின் குமாரனாகிய இயேசுகிறிஸ்துவுக்கு கோடி ஸ்தோத்திரம் உண்டாவதாக. நாம் பாவிகளாயிருக்கையில் கிறிஸ்து நமக்காக மரித்ததினாலே, தேவன் நம்மேல்வைத்த தமது அன்பை விளங்கப்பண்ணுகிறார். அந்த பரிசுத்தமுள்ள தேவனுக்கு நன்றியாக நாம் என்றென்றும் ஜீவிப்போமாக! ஆமென் அல்லேலூயா!*

*என்மேல் பாராட்டின உமதன்புக்*
*கீடாய் என்ன நான் செய்திடுவேன்*
*நரகாக் கினையின் நின்று மீட்ட*
*சுத்த கிருபையை நித்தம் பாடுவேன்*

*மாபாவியாம் என்னை நினைக்க*
*மண்ணான நான் எம்மாத்திரம் ஐயா!*
*தேவதூதரிலும் மகிபனாய் என்னை*
*மாற்றிய அன்பை துதிப்பேன்*

***ஜெபம்:*** *எங்களை அதிகமாய் நேசித்ததினால், நாங்கள் பாவிகளாய் இருக்கையில் கிறிஸ்து எங்களுக்காக மரித்ததினால் நீர் எங்கள் மேல் வைத்த அன்பை விளங்க பண்ணுகிற தயவிற்காக உமக்கு கோடி ஸ்தோத்திரங்கள். நாங்கள் படவேண்டிய ஆக்கினைக்கு எங்களை தப்புவித்து, எங்களுடைய இடத்தில் கிறிஸ்து எங்கள் ஆக்கினையை தம் மேல் சுமந்து எங்களை மன்னித்த தயவை நினைத்து உம்மை துதிக்கிறோம். அந்த நன்றியை என்றும் மறவாதவர்களாக நாங்கள் உமக்கென்று சாட்சிகளாக ஜீவிக்க கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

## 21. கெத்சமெனே பூங்காவினில்

*சற்று அப்புறம்போய், முகங்குப்புற விழுந்து: என் பிதாவே, இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கக்கூடுமானால் நீங்கும்படி செய்யும்; ஆகிலும் என் சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது என்று ஜெபம்பண்ணினார் - (மத்தேயு 26:39).*

இயேசுகிறிஸ்து தமக்கு பிரியமான மூன்று சீஷர்களுடன் கெத்சமனே என்னும் இடத்திற்கு தாம் காட்டிக்கொடுக்கப்பட்ட அந்த இராத்திரியிலே, வியாகுல வியாழனன்று, ஜெபிப்பதற்காக வந்தார். இந்த கெத்தசமனே தோட்டம் ஒலிவ மலையின் அடிவாரத்தில் உள்ளது. ஒலிவ மலை என்றால் இப்போது அங்கு ஒலிவ மரங்கள் இல்லை. இயேசுகிறிஸ்து பரமேறி போன இடத்தில் ஒரு ஆலயம் கட்டப்பட்டு (Church of Ascension) இருக்கிறது. கிறிஸ்து அதே இடத்திற்கு திரும்ப வருவார் (சகரியா 14:4). அந்த மலையின் கீழே கீதரோன் பள்ளத்தாக்கு உள்ளது. அதில் சகரியா தீர்க்கதரிசியின் கல்லறையும் உள்ளது. அந்த பள்ளத்தாக்கின் மறு புறத்தில் கெத்சமெனே தோட்டம் உள்ளது. Gat என்பதற்கு Place of Pressing என்றும் Semanim என்பதற்கு Oil என்றும் பொருள்படும். இந்த இடத்தில் ஒலிவமலையிலிருந்து வரப்படும் ஒலிவ காய்கள், எண்ணையாக பிழியப்படுகிற இடமாக இருந்தது.

இந்த தோட்டத்தின் உள்ளே நுழையும்போது, இயேசுகிறிஸ்து ஜெபித்துவிட்டு, பின்பு, அவர் சீஷர்களிடத்தில்

வந்து, அவர்கள் நித்திரைபண்ணுகிறதைக் கண்டு, பேதுருவை நோக்கி: நீங்கள் ஒரு மணி நேரமாவது என்னோடேகூட விழித்திருக்கக்கூடாதா? என்று ஏக்கத்தோடு சொல்லும் வார்த்தைகள் பொறிக்கப்பட்டுள்ளன. உள்ளே அருமையான தோட்டத்தில் எட்டு ஒலிவ மரங்கள் காணப்படுகின்றன. ஒலிவ மரங்களுக்கு மரத்தின் வயதை நிர்ணயிக்கும் வளையங்கள் இல்லை. அதனால் அதன் வயதை யாரும் கூற முடியாது. இங்கு காண்ப்படும் ஒலிவ மரங்கள் 1000த்திலிருந்து 2000 வருடங்கள் வயதுள்ளதாக இருக்கலாம் என்று வல்லுநர்கள் கூறுகின்றனர். ஒருவேளை 2000 வருடங்கள் இருந்திருக்குமானால் இயேசுகிறிஸ்து வாழ்ந்திருக்கும் காலத்தில் அவைகளும் இருந்திருக்கலாம் என்று கூறப்படுகிறது. ஒரு சாரார், ரோமர்கள் எருசலேமை பிடித்தபோது எல்லா மரத்தையும் வெட்டி, எருசலேமை தரைமட்டமாக்கி விட்டபடியால் இந்த மரங்கள் இருக்க வாய்ப்பில்லை என்று கூறுகினறனர்.

நான் அந்த ஒலிவ மரங்களை பார்த்தபோது, 'ஒரு வேளை இயேசுகிறிஸ்து உலகத்தில் இருந்த நாட்களில் நீங்களும் இருந்திருப்பீர்களானால், என் நேசர் வியாகுலத்தோடு தம் வேர்வை இரத்தமாக சிந்தப்பட ஜெபித்த வேளையில் நீங்கள் அவரை பார்த்து கொண்டிருந்தீர்களே, உங்கள் இலைகளை அசைத்து, அவரை ஆசுவாசப்படுத்தினீர்களோ? உங்கள் இளம் தென்றல் காற்றினால் அவரை தேற்றினீர்களோ?' என்று கேட்க தோன்றிற்று.

*அதற்கு பக்கத்தில் All Nations Church என்னும் அழகிய ஆலயத்தை 12 நாடுகள் சேர்ந்து கட்டியிருக்கிறார்கள். அந்த ஆலயத்தின் உட்புறத்தில், மூன்று பிரமாண்டமான ஓவியங்கள் வரையப்பட்டடிருக்கின்றன. நடுவில் இயேசுகிறிஸ்து, வேதனையோடு பெரிய கல்லின் பக்கத்தில் அமர்ந்து ஜெபிக்கும் வண்ணமாகவும், இடது புறத்தில் யூதாஸ் காரியோத் அவரை முத்தமிடும் காட்சியும், வலது புறத்தில் அவரை ரோம வீரர்கள் சிறைபிடித்து கொண்டு போவதையும் வரைந்து வைத்திருக்கிறார்கள். அந்த ஆலயத்தின் உட்புறம் மிகவும் அமைதியாக உளளது, ஆவியானவரின் தொடுதலை உணர முடிந்தது. வெளியே, ஒரு தூதன் இயேசுகிறிஸ்துவை பெலப்படுத்துவதைப்போல சிலையில் வடித்திருக்கிறார்கள்.*

*இயேசுகிறிஸ்து, தாம் படப்போகிற வேதனைகளையும் பாடுகளையும் அறிந்திருந்தபடியால், 'அவர்களை விட்டுக் கல்லெறிதூரம் அப்புறம்போய், முழங்கால்படியிட்டு: பிதாவே, உமக்குச் சித்தமானால் இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கும்படி செய்யும்; ஆயினும் என்னுடைய சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது என்று ஜெபம்பண்ணினார். அப்பொழுது வானத்திலிருந்து ஒரு தூதன் தோன்றி, அவரைப் பலப்படுத்தினான். அவர் மிகவும் வியாகுலப்பட்டு, அதிக ஊக்கத்தோடே ஜெபம்பண்ணினார் அவருடைய வேர்வை இரத்தத்தின் பெருந்துளிகளாய்த் தரையிலே விழுந்தது' (லூக்கா 22:41-44) என்று பார்க்கிறோம்.*

*இந்த வியாகுலங்களை யாருக்காக அவர் பட்டார்? பிதாவே, உமக்குச் சித்தமானால் இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கும்படி செய்யும் என்று வேதனையோடு பிதாவிடம் மன்றாடினாரே! ஆனாலும் அந்த பாடுகளை முழு இருதயத்தோடு ஏற்றுக் கொண்டு, 'ஆயினும் என்னுடைய சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது' என்றும் ஜெபித்தாரே! அந்த நல்ல தேவனை துதிப்போமா!*

*பாவமறியாத அவர் நமக்காக பாவமாகி, அந்த கொடிய குரிசில் தேவனாலும் கைவிடப்பட்டவராக துடிதுடித்தாரே, அத்தனையும் நம் பாவங்களினிமித்தமாகவே! அவர் அனுபவித்த பாடுகளை இன்றும் நினைத்தால் நம் கணகளில் கண்ணீர் வராமல் இருக்க முடியாது. அவர் பட்ட பாடுகளை நாம் தியானித்து, அவர் நமக்காய் சிந்திய இரத்தத்தை நினைத்து, நாம் பாவங்களை அவரிடம் அறிக்கையிட்டு பரிசுத்தமாவோமா? தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடையமாட்டான்; அவைகளை அறிக்கை செய்து விட்டுவிடுகிறவனோ இரக்கம் பெறுவான் (நீதிமொழிகள் 28:13) என்று வசனம் சொல்லுகிறபடியால் நம் பாவங்களை அறிக்கையிட்டு அவற்றை விட்டுவிடுவோமா? கர்த்தரிடம் இரக்கம் பெறுவோமா? நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார் (1 யோவான் 1:9). ஆமென் அல்லேலூயா!*

*கெத்சமெனே பூங்காவினில்*
*கதறி அழும் ஓசை*
*எத்திசையினிலும் கேட்கின்றதே*
*எங்கள் மனம் திகைக்கின்றதே*
*கண்கள் கலங்கிடுதே*

*கல்வாரி அன்பை எண்ணிடும் வேளை*
*கண்கள் கலங்கிடுதே*
*கர்த்தா உம் பாடுகள் இப்போதும்*
*நினைத்தால் நெஞ்சம் நெகிழ்ந்திடுதே*

***ஜெபம்:*** *எங்களை நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, உம்மை துதிக்கிறோம். கெத்சமனே தோட்டத்தில் கிறிஸ்து வியாகுலத்தோடு ஜெபித்த காட்சி எங்கள் கண்முன் கொண்டு வருகிறோம் தகப்பனே. தம் வேர்வை இரத்தமாய் மாறி கொட்டும் வரை வியாகுலத்தோடு ஜெபித்தாரே அத்தனையும் எங்கள் பாவங்கள் தீர்க்க தாம் படப்போகும் வேதனைகளை நினைத்தல்லவா தகப்பனே! அவர் எங்களுக்காக பட்ட பாடுகளினாலே நாங்கள் பரலோக ராஜ்ஜியத்திற்கு சுதந்தரவாளிகளாக மாறியிருக்கிறோமே அந்த அன்பிற்காக, தியாகத்திற்காக உம்மை துதிக்கிறோம். அவர் பட்ட பாடுகளுக்கு நாங்கள் என்னத்தை திருப்பி செலுத்துவோம் ஐயா? எங்கள் பாவங்களை அறிக்கையிட்டு அதை விட்டுவிடுகிறோம். உமக்கே சாட்சியாக வாழ எங்கள் ஒவ்வொருவருக்கும் கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 22. இயேசு அற்புதமானவரே

*நான் மோசேயோடே இருந்ததுபோல, உன்னோடும் இருப்பேன்; நான் உன்னைவிட்டு விலகுவதுமில்லை, உன்னைக் கைவிடுவதுமில்லை - (யோசுவா 1:5).*

ஒரு கிறிஸ்தவ சகோதரன் தினச்செய்தியை கேட்டு கொணடிருந்தபோது, அவர் இருந்த அமைதியான பள்ளத்தாக்கில் வெள்ள அபாய எச்சரிக்கை விடப்பட்டது. அதை கேட்டவுடன் அவர் முழங்காலில் நின்று ஜெபிக்க ஆரம்பித்தார். அவர் ஜெபித்து கொண்டிருக்கும்போதே, தண்ணீர் அவர் இருந்த வீட்டின் வாசலில் நிறைய ஆரம்பித்தது. அவர் உடனே அடுத்த மாடிக்கு விரைந்து, ஜெபித்து கொண்டிருந்தார். தண்ணீரின் வரத்து உயர ஆரம்பித்தது. கடைசியில் மொட்டை மாடியில் நின்று ஜெபித்தார். அப்போது ஒரு ஹெலிகாப்டரில் இருந்து வெள்ள அபாயத்தில் இருப்பவர்களை மீட்டெடுப்பவர்கள், அவரை நோக்கி ஒலிபெருக்கியில் தாங்கள் ஏணியை கீழே விடுவதாகவும், அதில் ஏறி தங்களிடம் வந்துவிடுமாறும் கூவினர். ஆனால் அந்த மனிதரோ, 'கர்த்தர் என்னை காப்பாற்றுவார், எனக்கு எந்த உதவியும் தேவையில்லை' என்று கூறி மறுத்து விட்டார்.

சிறிது நேரத்தில் அவர் இருந்த வீடு உடைய ஆரம்பித்தது. அவர் அருகில் இருந்த ஒரு மரத்தை இறுக பற்றி கொள்ள ஆரம்பித்தார். அப்போது அங்கு ஒரு படகில் வந்த காவல் துறை காப்பாளர்கள், அவரை தங்களோடு வந்து விடுமாறு

*அவரை பார்த்து கூறினர். ஆனால் அவரோ 'இல்லை கர்த்தர் தன்னை காப்பாற்றுவார்' என்று கூறி தொடர்ந்து அந்த மரத்தையே பற்றி கொண்டிருந்தார். கடைசியில் அந்த மரமும் விழுந்து அந்த மனிதர் தண்ணீரில் மூழ்கி மரித்து போனார்.*

*மரித்த அவர் பரலோகம் சென்று, கர்த்தரிடம் 'நான் இங்கு வந்திருப்பதை குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். ஆனால் நான் ஜெபித்த ஜெபத்திற்கு நீங்கள் பதிலளிக்கவில்லையே' என்று முறையிட்டார். அப்போது தேவன், 'நான் உனக்கு ஹெலிகாப்படரையும், படகையும அனுப்பினேனே நீ ஏன் அதில் ஏறி தப்பித்து கொள்ளவில்லை' என்று கேட்டார்.*

*வேதாகமத்தில் நாம் எங்கும் தேவன் அசாதாரண முறையில் தான் தம்மை வெளிப்படுத்துவார் என்று எழுதப்படவேயில்லை. நம்மில் அநேகர், அற்புதங்கள் செய்யப்படும் இடத்தில் மட்டுமே தேவனுடைய கரம் இருக்கிறது என்று நினைக்கிறோம். எப்போதும் ஏதோ ஒரு அடையாளத்தையும் அற்புதத்தையும் மாத்திரம் நாம் எதிர்ப்பார்த்து கொண்டிருக்கிறோம். ஒரு அற்புத பெருவிழாக்களுக்கு போனால், அங்கு பேசும் ஊழியர் தங்கள் பெயரை சொல்ல வேண்டும் என்று எதிர்ப்பார்த்து போகிற கிறிஸ்தவர்கள் அநேகர். 'நான் உன்னைவிட்டு விலகுவதுமில்லை, உன்னைக் கைவிடுவதுமில்லை' என்று தேவன் சொல்லியிருக்க, அதை உறுதியாய் இருதயத்தின் ஆழத்திலிருந்து விசுவாசிக்கிற கிறிஸ்தவர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள் இந்த நாட்களில்?*

கிறிஸ்தவர்கள் என்று சொல்லி கொண்டும், தினமும் வரும் தினபலனை பார்க்கிறவர்களும், ஊழியக்காரரர் என்னை பற்றியும், என் குடும்பத்தை பற்றியும், என் எதிர்காலத்தை பற்றியும் என்ன சொல்கிறார் என்று எதிர்ப்பார்த்து ஊழியக்காரரிடம் சென்று ஜெபிக்கிற கிறிஸ்தவர்களும் இன்று எத்தனை பேர்கள்? ஒரு பத்து பேர் போய் ஒரு ஊழியக்காரரிடம் ஜெபித்தால், அந்த பத்து பேருக்கும் கர்த்தர் வெளிப்பாடுகளை வெளிப்படுத்துவதில்லை, யாராவது ஒரு மிகவும் தேவையில் இருக்கும் ஆத்துமாவிற்கு தேவன் ஆவிக்குரிய ஆலோசனையையோ, தேற்றுதலையோ கூறுவார். ஆனால், பத்து பேரும் கர்த்தர் எனக்கு என்ன சொல்கிறார் என்று ஊழியர்களை நெருக்குவதால், சில வேளைகளில் தேவன் சொல்லாததை சொல்ல வேண்டிய நெருக்கம் ஊழியக்காரருக்கு ஏற்படுகிறது. அதை விசுவாசிகளே செய்வதால், அந்த ஊழியரை சொல்லி குற்றமில்லை.

ஒரு முறை ஒரு ஊழியர், வரிசையாக உட்கார்ந்திருக்கிறவர்கள் மேல் கைகளை வைத்து ஜெபிக்க ஆரம்பித்தார். அவர் என்னிடத்தில் வந்த போது, என் மேல் கைளை வைத்து, 'உங்களுக்கு இடுப்பு வலி இருக்கிறது, சரிதானே' என்று கேட்டார். எனக்கு இடுப்பு வலியும் இல்லை, ஒன்றும் இல்லை, நான் ஒன்றும் சொல்லாமல் இருந்தபோது அவர் மீண்டும் என்னிடம், 'கர்த்தர் வெளிப்படுத்துகிறார், உங்களுக்கு இடுப்பு வலி உண்டுதானே' என்று எல்லார் முன்னிலும் கேட்டபோது, எனக்கு அவரை வெட்கப்படுத்த விரும்பாமல், ஆம் என்று கூறினேன். அவருக்கு மிகவும் சந்தோஷமாகி விட்டது. இப்படி

*பொய்யாய் சொல்கிற ஊழியக்காரர்களும் அநேகர் இருக்கிறார்கள். இப்படி இவர்கள் பெருக காரணம், விசுவாசிகளே!*

*ஒவ்வொரு விசுவாசியின் சிந்தனையும் மாற வேண்டும். கர்த்தர் 'உன்னோடு நான் எப்போதும் இருக்கிறேன்' என்று சொல்லியிருக்கிறாரே, நான் ஏன் மற்றவர்களை நோக்கி பார்க்க வேண்டும்? ஏன் அற்புதங்களை எதிர்ப்பார்க்க வேண்டும்? அற்புதங்கள் நடந்தாலும் நடக்கவில்லை என்றாலும் தேவன் என்னோடு இருக்கிறார் என்ற ஆணித்தரமான விசுவாசம் ஒவ்வொரு இருதயத்திலும் இருந்தால், நிச்சயமாக நாம் அற்புதங்களையும் அடையாளங்களையும் தேடி போக மாட்டோம். இந்த எண்ணத்தை நாம் வளர்த்து கொண்டால், நம்முடைய வாழ்க்கை தலைகீழாக அற்புதம் நிறைந்ததாக மாறிவிடும். தம்மை அண்டிக்கொண்ட தம்முடைய பிள்ளைகளின் வாழ்வில் அதிசயங்களை செய்யாமல், வேறு யாருக்கு தேவன் தம்மை நிரூபிக்க போகிறார்? கிறிஸ்துவையே அண்டிக்கொள்வோம், அற்புதங்களை பெற்று கொள்வோம். ஆமென் அல்லேலூயா!*

*அற்புதர் அற்புதர் அற்புதர் அற்புதர் இயேசு அற்புதர்*
*அண்டினோர் வாழ்வை இன்பமாய்*
*மாற்றும் இயேசு அற்புதர்*

*எத்தனை துன்பங்கள் நம்மில் வந்தபோதும்*
*காத்த இயேசு அற்புதர்*
*எத்தனை தொல்லைகள் நம்மை சூழ்ந்தபோதும்*

*தீர்த்த இயேசு அற்புதர்*
*உலகத்தில் இருப்போனிலும்*
*எங்கள் இயேசு பெரியவர் அற்புதரே*
*உண்மையாய் அவரை தேடும் யாவருக்கும் இயேசு அற்புதரே*

***ஜெபம்:*** *எங்கள் வாழ்க்கையை அற்புதமாய் மாற்றும் எங்கள் நல்ல தகப்பனே, இந்த நல்ல நாளுக்காக உமக்கு நன்றி. யார் எங்களை கைவிட்டாலும் நீர் எங்களோடு இருக்கிறீர் என்கிற அசைக்க முடியாத நம்பிக்கையை ஒவ்வொருவருக்கும் கட்டளையிடுவீராக. வெளிப்படையானஅற்புதங்களை நாங்கள் எதிர்ப்பார்த்து சோர்ந்து போகாமல், தேவரீருடைய கிருபைகளை மாத்திரம் சார்ந்து ஜீவிக்க எங்களுக்கு கிருபை தாரும். தினசரி வாழ்வில் தேவன் ஒவ்வொரு நிமிடமும் எங்களோடு இருக்கிறீர் என்ற நம்பிக்கையோடு எங்கள் வாழ்க்கையை சந்தோஷமாய் நடத்த கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 23. ஜீவ புஸ்தகம்

*ஆட்டுக்குட்டியானவரின் ஜீவ புஸ்தகத்தில் எழுதப்பட்டவர்கள்மாத்திரம் அதில் பிரவேசிப்பார்கள் (வெளிப்படுத்தல் 21:27)*

மைசூர் பாகு என்றவுடன் நம்மில் சிலருக்கு நாவில் எச்சில் ஊறுகிறது. ஆம் எனக்கும் அது ஒரு விருப்பமான இனிப்புதான். சில ஆண்டுகளுக்கு முன் கர்நாடக அரசு அதன் சில நகரங்களின் பெயர்களை கன்னட மொழியின் உச்சரிப்புக்கு ஏற்றார்போல் மாற்ற வேண்டும் என தீர்மானித்தது. அவைகள் ஆங்கிலேயர்க்ள வைத்தப்பெயரால் அழைக்கப்பட்டு வந்தன. அந்த கோரிக்கையை மத்திய உள்துறை அமைச்சகம் 2014 ஆம் ஆண்டு ஏற்றுக் கொண்டு பெயர் மாற்றத்திற்கான அனுமதியை வழங்கியது. அதன்படி பெங்களூர் என்பது பெங்களூரு என்றும் மைசூர் என்பது மை சூரு என்றும், பெல்காம் என்பது பெல்காவி என்றும் அதிகாரப்பூர்வமாக மாற்றப்பட்டது. இனிமேல் தேசியப்படம், ரயில் பயணச்சீட்டு, பேருந்து பயணச்சீட்டு, கடைகளிலுள்ள பெயர் பலகைகளை மற்றும் இன்னும் இதுபோன்ற ஏராளமான இடஙக்ளனில் பெயர் மாற்றம் வர வேண்டும்.

மைசூர் சில்க் என்பது மிகவும் பிரபலமான சேலையின் பெயர். இதற்கு பல ஆண்டுகளுக்கு முன்னர் சர்வ தேச புவியியல் அடையாளக்குறியீடு பெற்றுள்ளனர். உலக சந்தையிலும் இந்த பெயரிலேயே வலம் வருவதால் திடீரென மைசூரு சில்க் என்று மாற்றினால் குழப்பம் ஏற்படுவதுடன்,

*விற்பனையையும் அது பாதிக்கும். பெயரை மீண்டும் பதிவு செய்வதில் பல வழிமுறைகளை பின்பற்ற வேண்டுமெனச் சொல்லி, அந்த நிறுவனத்தார் மைசூர் சிலக் என்ற பெயரையே தொடர தீர்மானித்தனர். மைசூர் சாண்டல் சோப் இதுவும் மிகவும் பிரபலமான சோப் நிறுவனம். அவர்களும் மேற்கூறிய அதே காரணங்களுக்காக பழைய பெயரையே தொடர தீர்மானித்தனர். மைசூர் பாகு என்ற இனிப்பு வகை உலகில் எங்கும் பதிவு செய்யப்படாத பொதுவான ஒரு இனிப்பின் பெயர். இனிப்பு வியாபாரிகளிடமும், தயாரிப்பாளர்களிடமும் இதை இனிமேல் மைசூரு பாகு என்று அழைப்பீர்களா என்று கேட்டதற்கு அவர்களும் முடியாது என்று கூறி விட்டனர்.*

*அநேக பெயர் மாற்றங்களை வோதகமத்தில் காண்கிறோம். யெதிதியா என்றால் வேதாகமத்தில் யார்? அநேகருக்கு தெரியாது. சாலொமோன் ராஜாவுக்கு தாவீது வைத்த பெயர் சாலொமோன். கர்த்தர் நிமித்தம் நாத்தான் தீர்க்கத்தரிசி வைத்தப்பெயர் யெதிதியா (2சாமுவேல் 12:24,25). இப்படி பலப் பெயர் மாற்றங்கள் நமக்குத் தெரிந்தவையே. நம்மிலும் சிலர் பெற்றோர் வைத்த பெயர் பிடிக்காமல் வேறு பெயர் மாற்றுகின்றோம். ஞானஸ்நான சமயத்தில் சிலர் பெயர் மாற்றுகின்றனர். என்ன பெயராய் இருந்தாலும், மரித்தப்பின் பெயர் முதலாய் மறக்கப்பட்டுவிடும்.*

*ஆனால் நம் பெயர் ஜீவ புஸ்தகத்தில் எழுதப்பட்டிருக்கிறதா? அதுவே மிகவும் முக்கியமானது. அப்படி பெயர் எழுதப்பட்டிருப்பவர்கள் மாத்திரமே நித்திய ஜீவனுக்குள் பிரவேசிக்க முடியும். ஜீவ புஸ்தகத்தில் நம் பெயர்*

*எழுதப்பட்டிருப்பதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்? இயேசுகிறிஸ்துவின் விலைமதியா இரத்தத்தினால் கழுவப்பட்டிருக்க வேண்டும். இரட்சிக்கப்பட்டிருக்க வேண்டும். பாவங்கள் கழுவப்பட்டு, இரட்சிப்பின் அனுபவத்தை பெற்றிருக்க வேண்டும். அப்படி கழுவப்படாத பட்சத்தில் ஜீவபுஸ்தகத்திலே எழுதப்பட்டவனாகக் காணப்படாதவனெவனோ அவன் அக்கினிக்கடலிலே தள்ளப்பட்டான் (வெளிப்படுத்தல் 20:15).*

*ஜீவபுஸ்தகத்திலிருக்கிற அவர்கள்பேர் கிறுக்கப்பட்டுப்போவதாக, நீதிமான்கள் பேரோடே அவர்கள் பேர் எழுதப்படாதிருப்பதாக (சங்கீதம் 69:28) ல் பார்க்கிறோம். இந்த ஜீவ புஸ்தகம் என்பது, வாழ்கின்றவர்களின் புத்தகம் (Book of the living) என்றழைக்கப்படுகிறது. இதைத்தான் மோசே 'ஆகிலும், தேவரீர் அவர்கள் பாவத்தை மன்னித்தருளுவீரானால் மன்னித்தருளும்; இல்லாவிட்டால் நீர் எழுதின உம்முடைய புஸ்தகத்திலிருந்து என் பேரைக் கிறுக்கிப்போடும் என்றான்' (யாத்திராகமம் 32:32); என்று வாசிக்கிறோம். இது ஆட்டுக்குட்டியானவரின் ஜீவ புஸ்தகம் அல்ல (வெளிப்படுத்தல் 21:27) வாழ்கின்றவர்களின் புத்தகமாகும்.*

*தீட்டுள்ளதும் அருவருப்பையும் பொய்யையும் நடப்பிக்கிறதுமாகிய ஒன்றும் அதில் பிரவேசிப்பதில்லை; ஆட்டுக்குட்டியானவரின் ஜீவபுஸ்தகத்தில் எழுதப்பட்டவர்கள் மாத்திரம் அதில் பிரவேசிப்பார்கள் (வெளிப்படுத்தல் 21:27). ஆமென் அல்லேலூயா!*

*பரலோகத்தில் எனது பெயர்*
*எழுதிவிட்டார் என் இயேசு*
*என் வாழ்வின் நோக்கமெல்லாம்*
*என் இயேசுவுக்காய் வாழ்வதுதான்*

*சர்வ வல்லவர் என்சொந்தமானார்*
*சாவை வென்றவர் என் ஜீவனானார்*
*சர்வ வல்லவர் என் எஜமானன்*
*சாவை வென்றவர் என் மணவாளன்*

**ஜெபம்:** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, நாங்கள் இந்த உலகில் வாழ்ந்து அநேக பாடுகளை பட்டு, பொருள் சம்பாதித்து, ஆனால் ஆத்துமாவை நஷ்டப்படுத்தினால் அதினால் என்ன லாபம் ஐயா. எங்கள் பெயர் ஜீவ புஸ்தகத்தில் எழுதப்பட்டிருக்க வேண்டுமே! நாங்கள் ஒவ்வொருவரும் இயேசுகிறிஸ்துவின் தூய இரத்தத்தால் கழுவப்பட்டு, அதினால் எங்கள் பெயர்களும் ஜீவ புஸ்தகத்தில் எழுதப்பட்டிருக்கும்படி கிருபை செய்யும் தகப்பனே. இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

## 24. நெல்சன் மண்டேலா

*கிறிஸ்துவுக்குள் தேவன் உங்களுக்கு மன்னித்ததுப்போல நீங்களும் ஒருவருக்கொருவர் மன்னியுங்கள் (எபேசியர் 4:32)*

*நெல்சன் மண்டேலா 1918ஆம் ஆண்டு ஜூலைமாதம் 18ஆம் தேதி தென் ஆப்ரிக்காவில் பிறந்தார். அவர் வளர்ந்து வாலிபனானபோது அவர்களது நாட்டை ஆண்டு கொண்டிருந்த வெள்ளையர்களுக்கு எதிராக போராட்டங்கள் நடத்தினார். வெள்ளைக்காரர்கள் ஆட்சி செய்தது மாத்திரமல்லாது, கருப்பினத்தவர்களின் உரிமைகளை பறித்து சட்டங்கள் இயற்றி 1948முதல் 1994 வரை பலவிதங்களில் கருப்பினத்தவரை ஒடுக்கினார்கள். இந்த வேறுபாட்டை ஒழிக்க வேண்டுமென்று போராடிய நெல்சன் மண்டேலா பலமுறை சிறைச்சாலையில் அடைக்கப்பட்டார். கடைசியாக 1962ஆம் ஆண்டு அவரை கைது செய்து, 1990ம் ஆண்டுதான் விடுவிக்கப்பட்டார். தொடர்ந்து 28 ஆண்டுகள் சிறையில் வாடினார்.*

*1964 முதல் 1982 வரை ராப்பன் தீவு என்ற இடத்தில் சிறை வைககப்பட்டிருந்தார். அங்கே அவருக்கு மிகச்சிறிய அறை ஒன்று ஒதுக்கப்பட்டிருந்தது. அந்த அறையில் வெறும் பாயில்தான் படுத்து தூங்க வேண்டியதாயிருந்தது. பகலில் பாறைகளை சிறு கற்களாக உடைக்கும் வேலையில் ஈடுபடுத்தப்பட்டார். வெள்ளைக்கார காவலாளிகள் அவரை பலவிதங்களில் துன்புறுத்தினர். சிறை வாழ்க்கையின் சமயத்தில் இவரது தாயாரும், பின்னர் விபத்தில் இவரது மகனும்*

*மரித்தனர். அவர்களது அடக்கத்தில் கலந்து கொள்ள அனுமதி மறுக்கப்பட்டது.*

*இவரது விடுதலைக்காக பல உலக தலைவர்கள் முயற்சி செய்தனர். கடைசியில் 1990ஆம் ஆண்டு பெப்ருவரி மாதம் 11ம் தேதி சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார். 1994ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில் இவரது ஆப்ரிக்க தேசிய காங்கிரஸ் அமோக வெற்றி பெற்றது. மண்டேலா நாட்டின் ஜனாதிபதியாக தெரிந்தெடுக்கப்பட்டார். ஆட்சி கையில் கிடைத்தவுடன், தன்னை சிறையில் கொடுமைப்படுத்தினவர்களை அவர் தண்டித்திருக்கலாம். ஆனால் அவர் வெள்ளைக்காரர்களை வெறுப்பதற்க்குப்பதில் அவர்களை ஆட்சியில் சேர்க்கவும், அவர்களை பாதுகாக்கவும் உறுதியளித்தார்.*

*இனவெறி தலைவர்களுடன் ஒப்புரவாக வேண்டுமென்று நினைத்தார். அப்போது அவர், 'சமாதானத்தையடைய, தைரியமானவர்கள் மன்னிப்பதற்கு பயப்படுவதில்லை' என்றார். தன்னை சிறையில் கொடுமைப்படுத்தினவர்களை மன்னித்து, அவர்களை பதவியேற்பு விழாவில் சிறப்பு விருந்தினராக அழைத்தார். அவரது மன்னிக்கும் தன்மையால் லட்சக்கணக்கான வெள்ளைகக்காரர்கள் மற்றும் உலகத்தினரின் மனதிலும் இடம் பிடித்தார்.*

*சில வேளைகளில் நமக்கு விரோதமாக சிறிய காரியத்தை செய்பவர்களை மன்னிப்பதே நமக்கு பெரிய காரியமாயிருக்கிறது. ஏன் நான் மன்னிக்க வேண்டும் என்று*

*நினைக்கிறோம். ஆனால் தன்னை துன்பப்படுத்தி, ஏறக்குறைய 30 ஆண்டுகள் தன்னை கொடுமைப்படுத்தியவர்களை ஒரு நிபந்தனையுமின்றி மன்னித்தாரே, அங்கு அவர் கிறிஸ்துவின் மாதிரியை வெளிப்படுத்தினார். அல்லேலூயா!*

*நம்முடைய பகைவர்களையும், நம்மை துன்புறுத்தியவர்களையும் நமக்கு தீங்கு செய்பவர்களையம் மன்னிப்பது மிகவும் கடினமாக உள்ளது. நம்முடைய தவறுகளையும், பாவங்களையும் இயேசுகிறிஸ்து மன்னிப்பதுபோல நாமும் மன்னிக்க வேண்டுமென்று தேவன் விரும்புகிறார். நாம் கிறிஸ்துவுக்குள் தைரியமானவர்கள் என்றால் சமாதானத்தை முன்னிட்டு மன்னிக்க பயப்படக்கூடாது. மன்னிப்போம். சமாதானத்துடன் வாழ்வோம். ஆமென் அல்லேலூயா!*

*பகைவர்க்கு அன்பு காட்டிடுவேன்*
*வெறுப்பவர்க்கு நன்மை செய்திடுவேன்*
*சபிப்பவர்க்கு ஆசி கூறிடுவேன்*
*தூற்றுவோருக்காக ஜெபித்திடுவேன்*

*இயேசுவின் கரங்களைப் பற்றிக்கொண்டேன் நான்*
*இயேசுவின் கரங்களைப் பற்றிக்கொண்டேன்*
*எதற்கும் பயமில்லையே*
*இனியும் கவலை எனக்கில்லையே அல்லேலூயா*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, கிறிஸ்து எங்களை மன்னித்ததுப் போல நாங்களும் மற்றவர்களுக்கு*

மன்னிக்க எங்கள் இருதயங்களில் கிரியை செய்தருளும். மண்டேலா போன்ற பரிசுத்தவான்களை எங்களுக்கு சாட்சியாக வைத்திருப்பதற்காக உமக்கு நன்றி. மற்றவர்களுக்கு மன்னித்து சமாதானமாக வாழ கிருபை செய்தருளும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.

## 25. அனுக்கிரகக் காலம்

*அறியாமையுள்ள காலங்களைத் தேவன் காணாதவர்போலிருந்தார், இப்பொழுதோ மனந்திரும்பவேண்டுமென்று எங்குமுள்ள மனுஷரெல்லாருக்கும் கட்டளையிடுகிறார் - அப்போஸ்தலர் 17:30.*

*உலகப் புகழ் பெற்ற டைட்டானிக் கப்பல் மூழ்கும் என்று யாரும் கனவிலும் நினைத்திருக்கவில்லை. 1912-ஆம் வருடம் அந்த பயங்கரமான இரவில் அந்தக் கப்பல் ஒரு பனிமலையின் மேல் மோதி, மூழ்கியது. ஆயிரக்கணக்கானோர் அந்த இரவில் அந்த அட்லாண்டிக் கடலில் மூழ்கி மரித்தனர். இவர்களுடைய விவரங்களை அறிவதற்கு லிவர்பூல் என்னுமிடத்தில் உள்ள காரியாலயத்தில் அவர்களுடைய உறவினர்கள் கூடியிருந்தனர்.*

*அங்கு இரண்டு பெரிய கரும் பலகைகள் வைக்கப்பட்டிருந்தன. ஒன்றில் காப்பாற்றப்பட்டவர்கள் என்றும், மற்றொன்றில் அழிந்தவர்கள் என்றும் எழுதப்பட்டிருந்தது. அவ்வப்போது ஒரு மனிதன் கையில் ஒரு வெள்ளைத்தாளில் ஒரு பெயரோடு வருவான். அவன் அந்தப் பேரை எந்தப் பலகையில் ஒட்டுவான் என்று மொத்த கூட்டமும் ஆவலோடு பார்த்து நிற்பார்கள். எப்படியாவது தங்களுக்கு வேண்டியவர் பிழைத்திருக்க மாட்டாரா என்று நப்பாசையோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள்.*

*ஆம் பிரியமானவர்களே இப்போதும் உலகத்தில் இரண்டு கூட்டம் மாத்திரமே உண்டு. ஒன்று இரட்சிக்கப்பட்டவர்கள் கூட்டம் மற்றது இரட்சிக்கப்படாத கூட்டம். நீங்கள் எந்த கூட்டத்தில் இருக்கிறீர்கள்? என்னோடுகூட ஒரு சகோதரி வேலை செய்தார்கள். அவர்கள் கிறிஸ்துவின் மேல் அன்பு நிறைந்தவர்கள். இரட்சிக்கப் பட்ட ஒரு சகோதரி. நானும் அவர்களும் வேலையில் இருக்கும்போது எங்களது வேலை குறைந்த நேரங்களில் வேதத்துக்கடுத்த காரியங்களை குறித்து பகிர்ந்துக் கொள்வோம். இருவரும் வேத வசனங்களை மனப்பாடமாக சொல்லிப் பார்த்துக் கொள்வோம். எனக்கு மிகவும் இனிமையானவராக இந்த சகோதரி இருந்தார்கள். ஒரு நாள் வேலையில் இருக்கும்போது அவர்கள் பாத்ரூம் போய் வருகிறேன் என்றுச் சொல்லி போனவர்கள் வரவில்லை. போய் கூப்பிட்டுப் பார்த்தால் கதவு திறக்கப்படவில்லை. உடைத்துப் பார்த்த போது மரித்து இருந்தார்கள். அவர்களுக்கு எந்த வியாதியும் இல்லை. திடீரென்று மரித்துப போனார்கள். இந்தச் செய்தி கேட்டபோது நான் அழுதேன், புலம்பினேன். ஆனால் திரும்ப அந்த உயிர் வருமா? நான் அவர்களின் இடத்திற்கு போவேனேயல்லமல் அவர்கள் திரும்ப வர மாட்டார்கள். இதை எதற்கு சொல்கிறேன் என்றால், நாளை நமக்கு என்ன நடக்கும் என்று நமக்கு தெரியாது. நமது உயிர் நம் கைகளில் இல்லை. இரட்சிக்கப்பட்டிருந்தால் எந்த நேரம் நம் உயிர் போனாலும் கவலையில்லை, ஏனென்றால் நாம் தேவனோடு கூட இருப்போம். ஆனால் இரட்சிக்கப்படவில்லை என்றால் நித்ய நித்யமாய் நரகத்தில் தள்ளப்படுவோமே!*

*மனுஷன் உலக முழுவதையும் ஆதாயப்படுத்திக் கொண்டாலும் தன் ஜீவனை நஷ்டப்படுத்தினால் அவனுக்கு லாபம் என்ன? உங்கள் ஆத்துமா இரட்சிக்கப்பட்டிருக்கிறதா? சகோதரனே, சகோதரியே உங்களை நேசிப்பதால் சொல்கிறேன். இரட்சிக்கப்பட்டு விடுங்கள். எந்த நேரம் மரணம் வந்தாலும் கவலையற்றிருப்போம். இந்த உலகத்தில் இருக்கும் வரை நம் தேவன் நம்மோடிருக்கிறார். நாம் மரித்தவுடன் நாம் தேவனோடு இருப்போம் அதுதான் வித்தியாசம். இயேசுகிறிஸ்துவின் மாசில்லாத இரத்தம் நம்முடைய பாவங்களுக்காக சிந்தப்பட்டதே! அவர் சிலுவையில் பட்ட பாடுகள் எதற்காக? நம்முடைய பாவங்கள் மனனிக்கப்பட்டு நாம் நித்திய இராஜ்ஜியத்திற்கு உரியவர்களாக மாறும்படிதானே! இன்றே இரட்சண்ய நாள், இன்றே அனுக்கிரகக் காலம், கிருபையின் காலத்திலேயே நாம் இரட்சிக்கப்பட்டுவிடுவோமா? ஒரு வேளை இன்னும் ஒரு தருணம் நமக்கு கொடுக்கப்படாவிட்டால் என்ன செய்வோம்? ஆகையால் இப்போதே கீழ்க்கண்ட ஜெபத்தை ஏறெடுத்து இயேசகிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்வோம். ஆமென் அல்லேலூயா!*

*இரத்தம் சிந்துதலில்லாமல் மன்னிப்பில்லை*
*இயேசு நாமம் சொல்லாமல் மீட்பு இல்லை*
*கூப்பிடு இயேசு இயேசு என்று*
*குறைகளெல்லாம் நிறைவாக்கி நடத்திடுவார்*

*துன்பமா துயரமா அது*
*தண்ணீர் பட்ட உடை போன்றதம்மா*

*காற்றடிச்சா வெயில் வந்தா*
*காய்ந்து போகும் கலங்காதே*

***ஜெபம்:*** *அன்பின் பரலோக தகப்பனே, இந்த ஜெபத்தின் மூலம் உம்மிடத்தில் என்னுடைய பாவங்களுக்கு மன்னிப்புக் கேட்கிறேன். இயேசுகிறிஸ்து உம்முடைய சொந்தக் குமாரன் என்று நான் விசுவாசித்து என்னுடைய வாயினால் அறிக்கையிடுகிறேன். என் பாவங்களுக்காக அவர் சிலுவையில் மரித்தார் என்றும் நான் நித்திய ஜீவனை அடையும்படிக்கு அவர் சிலுவையில் பாடுபட்டார் என்றும் விசுவாசிக்கிறேன். அவர் மூன்றாம் நாள் மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்தார் என்றும் விசுவாசிக்கிறேன். என்னுடைய இருதயத்தில் இப்போதே வாரும் என்று அழைக்கிறேன். என்னுடைய சொந்த இரட்சகராக இயேசுகிறிஸ்துவை ஏற்றுக் கொள்கிறேன். என் வாழ்நாள் எல்லாம் அவரையே தொழுதுக் கொள்வேன் என்று வாக்களிக்கிறேன். நான் இப்போது இயேசுகிறிஸ்துவின் இரத்தத்தினால் கழுவப்பட்டு, மறுபடியும் பிறந்திருக்கிறேன் என்று என் வாயினால் அறிக்கையிடுகிறேன். இயேசுகிறிஸ்துவின் மூலம் என் ஜெபத்தை ஏறெடுக்கிறேன். என் ஜெபத்தைக் கேட்டதற்காக நன்றி ஆமென் ஆமென்.*

*நீங்கள் இந்த ஜெபத்தை உள்ளத்தின் ஆழத்திலிருந்து சொல்லியிருப்பீர்களானால் கர்த்தருக்கு ஸ்தோத்திரம், நீங்கள் இரட்சிக்கப்பட்டீர்கள். உங்கள் பெயர் ஜீவ புஸ்தகத்தில் எழுதப்பட்டிருக்கிறது. கர்த்தருடைய வருகையில் நீங்களும் காணப்படுவீர்கள். கர்த்தருக்கென்று சாட்சியாக வாழுங்கள். அவருக்கே எல்லா துதி கனம் மகிமை உண்டாவதாக ஆமென்.*

# *26.* விசுவாசிக்கிறவனுக்கு எல்லாம் கூடும்

*இயேசு அவனை நோக்கி: நீ விசுவாசிக்கக்கூடுமானால் ஆகும், விசுவாசிக்கிறவனுக்கு எல்லாம் கூடும் என்றார் - (மாற்கு 9:23).*

ஸ்மித்விகிள்ஸ்வொர்த் என்னும் தேவ ஊழியர், தேவனால் வல்லமையாக பயன்படுத்தப்பட்டவர். ஒரு நாள் அவர், இரண்டு கால்களையும் இழந்த ஒரு செல்வந்தரின் வீட்டிற்கு விருந்துக்கு சென்றிருந்தார். விருந்து மேஜையில் இருவரும் தேநீர் அருந்திக் கொண்டிருக்கும் போது ஊழியர் கூறினார், 'சகோதரனே தேவன் உங்களுக்கு மறுபடியும் கால்களைக் கொடுக்க விரும்புகிறார்' என்று. அதைக் கேட்ட செல்வந்தர் நம்பிக்கையற்றவராக 'எனக்குத்தான் இரண்டு கால்களும் இல்லையே இனிக் காலகள் எப்படி வளரப் போகிறது' என்றார். ஊழியர், 'தேவன் யாவற்றையும் செய்ய வல்லவர்' என்றார். அவரது மனதில் விசுவாசம் துளிர்த்தது. ஆவியானவர் செல்வந்தரிடம் 'இன்றே கடைக்குப் போய் உன கால்களுக்கு காலணிகளை வாங்கிக் கொள்' என்றார்.

செல்வந்தர் கடைக்குப் போய் ஒரு ஜோடி காலணிகளைக் கேட்டார். கடைக்காரரர் மேலும், கீழும் பார்த்தார். 'உங்களுக்குத்தான் கால்கள் இல்லையே எந்த அளவில் காலணி கொடுக்க வேண்டும்' என்றார். அவர் ஏழாம் நம்பர் காலணியை வாங்கி, வீட்டிற்கு வந்து தனது முடமான கால்களில் போட்டுப் பார்த்தார். அப்பொழுது பரிசுத்த ஆவியானவரின் வல்லமை அந்த அறையை நிரப்பிற்று. ஒரு

*நொடியில் மளமளவென்று கால்கள் வளர்ந்தன. அதில் ஆச்சரியம் என்னவென்றால், அவர் வாங்கி வந்து ஏழாம் நம்பர் அளவில்தானே அவர் கால்கள் வளர்ந்தன. மகிழ்ச்சி தாங்க முடியாமல் துள்ளி குதித்தார். கர்த்தருக்கு நன்றி செலுத்தினார்.*

*'விசுவாசமானது நம்பப்படுகிறவைகளின் உறுதியும், காணப்படாதவைகளின் நிச்சயமுமாயிருக்கிறது' (எபிரேயர் 11:1) என்று வேதம் கூறுகிறது. ஆபிரகாமின் விசுவாசமும் அப்படியே இருந்தது. சாத்தியமில்லாத சூழ்நிலையிலும் விசுவாசிக்க இயலாத நேரத்திலும் தனக்கொரு பிள்ளை பிறப்பான் என்று விசுவாசித்தார். நூறு வயதாகி சரீரம் செத்த ஒருவனால் குழந்தை பிறப்பது என்பது நடைமுறையில் சாத்தியமாகுமா?, ஆனால் விசுவாசித்த ஆபிரகாமிற்கு அந்த அற்புதம் நடந்ததே!*

*இன்றும் உங்களை அழுத்துகிற பிரச்சனையின் மத்தியில் தேவனை விசுவாசிக்க இயலாத சூழ்நிலையில் இருக்கும் சகோதரனே, சகோதரியே, நானிருக்கும் இந்த வியாதியில், பிரச்சனையில் எந்த அற்புதமுமே நடக்க முடியாது, என்னை விடுவிக்க யாராலும் முடியாது நான் வாழ்வதை விட சாவது மேல் என்று எண்ணிக் கொண்டிருக்கிறீர்களோ? என் பிரச்சனைக்கு முடிவே இல்லை என்று எண்ணிக் கொண்டிருக்கிறீர்களோ?*

*இன்று அற்புதங்களை செய்யும் நம் தேவனை விசுவாசியுங்கள். விசுவாசிக்கிறவனுக்கு எல்லாம் கூடும், நீங்கள்*

*கலங்கி கொண்டிருக்கிற காரியத்தில் அற்புதங்கள் செய்து உங்களை விடுவிப்பது தேவனுக்கு இலேசான காரியம்.*

*நம் வியாதியின் மத்தியிலும், பிரச்சனைகளின் மத்தியிலும் அவற்றில் நாம் கஷ்டப்பட வேண்டும் என்று நம் தேவன் விரும்புவதில்லை. அவற்றை மாற்ற வல்லவர் அவரே என்ற விசுவாசம் நம் உள்ளத்தில் வரும்போது, இயற்க்கைக்கு அப்பாற்பட்ட விதத்தில் அற்புதம் செய்து, தேவன் நம்மை மகிழ்ச்சிக்குள்ளாக்குவார். கர்த்தர் அற்புதம் செய்யும்போது, மற்றவர்கள் வியப்புக்குள்ளாகி, இந்தக் காரியம் எப்படி நடந்தது என்று ஆச்சரியப்படும் வண்ணம், கர்த்தர் பெரிய காரியங்களை செய்வார். ஆமென் அல்லேலூயா!*

*மண்ணை பிசைந்து மனிதனை படைப்பது*
*இலேசான காரியம்*
*மண்ணான மனிதர்க்கு மன்னாவை அளிப்பதும்*
*இலேசான காரியம்*

*இலேசான காரியம் எதுவும்*
*இலேசான காரியம்*
*பெலமுள்ளவன் பெலமில்லாதவன்*
*யாராயிருந்தாலும் உதவிகள் செய்வது*
*இலேசான காரியம் உமக்கது இலேசான காரியம்*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, எங்கள் விசுவாசமே உலகத்தை ஜெயிக்கிற ஜெயம் என்று வசனம் சொல்வதைப்போல நாங்கள் விசுவாசித்து அற்பதங்களை*

பெற்றுக் கொள்ள கிருபை செய்யும். விசுவாசிக்கிறவனுக்கு எல்லாம் கூடும் என்று சொன்னீரே எங்கள் விசுவாசத்தை வர்த்திக்க செய்வீராக. விசுவாசித்து பெரிய அற்புதங்களை எங்கள் வாழ்வில் பெற்றுக் கொள்ள கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.

# 27. என்னையும் நம்பிடுமே

*அப்பொழுது, இயேசு தம்முடைய சீஷர்களை நோக்கி: ஒருவன் என்னைப் பின்பற்றி வர விரும்பினால், அவன் தன்னைத் தான் வெறுத்து, தன் சிலுவையை எடுத்துக்கொண்டு என்னைப் பின்பற்றக்கடவன் என்றார் - (மத்தேயு 16:24).*

*நேற்றைய தினம் ஒரு வல்லமையுள்ள ஊழியக்காரனின் சகாப்தம் முடிவுற்றது. கர்த்தருக்காக எழும்பி பிரகாசித்த விளக்கு அணைந்தது. அவரை குறித்து மூலை முடுக்கெல்லாம் பேசும் அளவிற்கு பில்லி கிரகாம் தனக்கு கொடுக்கப்பட்ட ஊழியத்தில் உண்மையாக இருந்தார். தன்னை நம்பி தேவன் கொடுத்த ஊழியத்தில் 99 வயது வரை உண்மையுடன் செய்து முடித்து, 'அவனுடைய எஜமான் அவனை நோக்கி: நல்லது, உத்தமமும் உண்மையுமுள்ள ஊழியக்காரனே, கொஞ்சத்திலே உண்மையாயிருந்தாய், அநேகத்தின்மேல் உன்னை அதிகாரியாக வைப்பேன், உன் எஜமானுடைய சந்தோஷத்திற்குள் பிரவேசி என்றான்' (மத்தேயு 25:21) என்று தேவன் தம்மோடே அவர் என்றும் இருக்கும்படி அழைத்து கொண்டார். அல்லேலூயா!*

.

*பில்லிகிரகாம் இளம் வயது வாலிபனாக இருந்தபோது, தேவனுக்காக எதையாவது செய்ய வேண்டும் என்ற ஆர்வம் உடையவராக இருந்தார். ஒரு நாள் தன் நண்பர்களோடு கால்பந்தாடச் சென்றார். விளையாடிக் கொண்டிருந்த நேரத்திலும் அவர் உள்ளம் தேவனோடு உறவாடிக் கொண்டிருந்தது. கர்த்தர் பில்லிகிரகாமின் உள்ளத்தில் உலகத்திலுள்ள மற்ற வாலிபர், வயோதிபர், சிறியோர்,*

*பெரியோரின் ஆத்தும தேவைகளைப் பற்றி பேசிக் கொண்டிருந்தார்.*

*விளையாட்டு முடிந்தது. நண்பர்கள் எல்லோரும் அவரவர் தம்தம் வீட்டிற்கு சென்று விட்டார்கள். ஆனால் பில்லிகிரகாமோ, அந்த கால்பந்து மைதானத்திலே முழங்கால்படியிட்டார். கண்களிலிருந்து தாரை தாரையாய் கண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது.*

*'ஆண்டவரே என்னை நம்பும், என்னை நம்பும், உமது பார்வையிலே என்னை நம்பிக்கைக்குரியவனாக்கும்' என்று கதறினார். அந்த வார்த்தைகளே அவரது ஜெபமாக இருந்தது. அவரது உள்ளம் தேவனிடத்தில் கெஞ்சிக் கொண்டிருந்தது, ஏறத்தாழ நான்கு மணி நேரம் மிகுந்த சத்தத்தோடு ஜெபித்தார், 'ஆண்டவரே என்னை நம்பும்' என்பதுதான் அவரது ஜெபமாக இருந்தது. கர்த்தருடைய ஆவியானவர் வல்லமையாக இறங்கி அவரை அபிஷேகித்தார். அன்றிலிருந்து கர்த்தர் ஒரு பெரிய திருப்பத்தை அவர் வாழ்வில் கட்டளையிட்டார். மாபெரும் விளையாட்டு வீரரான அவரை மாபெரும் சுவிசேஷ வீரனாக மாற்றினார். அல்லேலூயா!*

*பிரியமானவர்களே, நாம் கர்த்தருடைய நம்பிக்கைக்குரியவர்களாக இருக்கிறோமா? நம் வாழ்வு கர்த்தரை நம்மை நம்பி காரியங்ளை, பொறுப்புக்களை கொடுக்கும் விதத்தில் இருக்கிறதா? எல்லாவற்றிலும் உண்மையுள்ளவர்களாக இருக்கிறோமா? பில்லிகிரகாம் கதறினாரே, என்னை நம்பி பொறுப்புக்களை தாரும் என்று.*

*அப்படிப்பட்டதான ஊழிய வாஞ்சை நமது உள்ளத்தில் இருக்கிறதா?*

*கர்த்தருக்காக எதையாவது செய்ய வேண்டும் என்கிற தாகம் நம் இருதயத்தில் இருக்கிறதா? அந்த வாஞ்சை ஆர்வம் நம் உள்ளத்தில் இல்லாவிட்டால் நாம் அனலுமில்லாமல், குளிருமில்லாமல் வாழ்ந்துக் கொண்டிருக்கிறோம் என்று அர்த்தம்!*

*நம்மை நாம் வெறுத்து, சிலுவையை எடுத்துக் கொண்டு, கர்த்தர் சென்ற பாதையில் செல்வோமா? கர்த்தருடைய நம்பிக்கைக்குரியவர்களாக நம் வாழ்வு மாறட்டும்! என்னை நம்பும் என்னை நம்பும் என்று கதறின ஒரு பில்லிகிரகாமை கொண்டு, ஆண்டவர் கோடிக்கணக்கான மக்களுக்கு பிரயோஜனமாக மாற்ற முடியுமென்றால், நம் இருதயத்தின் வாஞ்சை தாகத்தைப் பார்த்து, கர்த்தர் நம்மையும் மற்றவர்களுக்கு பிரயோஜனமாக மாற்றுவது நிச்சயமல்லவா?*

*நம் நேசருக்காக, நம் கர்த்தருக்காக எதையாவது செய்வோம். அவர் நாமத்தை உயர்த்துவோம். அவருக்காக வாழ்ந்திடுவோம். அவர் புகழ் உயர்த்திடுவோம். ஆமென் அல்லேலூயா!*

*தள்ளப்பட்ட கல் நான்*
*எடுத்து நிறுத்தினீரே*
*உண்மை உள்ளவன் என்று கருதி*
*ஊழியம் தந்தீரையா*

*பாலை நிலத்தில் கிடந்தேன்*
*தேடி கண்டு பிடித்தீர்*
*கண்ணின் மணிபோல காத்து வந்தீர்*
*கழுகு போல் சுமக்கின்றீர்*

*உம்மை நினைக்கும் போதெல்லாம்*
*நெஞ்சம் மகிழுதையா*
*நன்றி பெருகுதையா..*
*நன்றி நன்றி ராஜா*
*நன்றி இயேசு ராஜா*

**ஜெபம்:** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே எங்களையும் நம்பி நீர் கொடுத்த, கொடுக்கிற ஊழியங்களுக்காக உமக்கு நன்றி தகப்பனே. அந்த ஊழியங்களில் நாங்கள் உண்மையாக நிலைத்திருந்து, உம்முடைய நாமத்தை உயர்த்த கிருபை தாரும். அநேகருக்கு பிரயோஜனமுள்ளவர்களாக எங்களை மாற்றியருளும். தங்களை உமக்கு அர்ப்பணித்த ஒவ்வொருவரையும் கர்த்தர் வல்லமையாக பயன்படுத்துவதற்காக உமக்கு நன்றி. இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

## *28.* கர்த்தருக்கு பரிசுத்தம்

*"அவரோடேகூட அவருடைய பிதாவின் நாமம் தங்கள் நெற்றிகளில் எழுதப்பட்டிருந்த இரட்சத்து நாற்பத்து நாலாயிரம் பேரையும் கண்டேன்" (வெளிப்படுத்தல் 14:1)*

*1848ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 13ஆம் தேதி பினியாஸ் கேஜ் என்பவர் அமெரிக்காவிலுள்ள வெர்மாண்ட் என்ற இடத்தில் இரயில்வே பாதை அமைக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார். அப்போது பாறை ஒன்றை உடைக்க வேண்டியிருந்தது. எனவே அந்த பாறையை குடைந்து அதனுள் வெடிமருந்தை ஒரு இரும்பு கம்பியை வைத்து குத்தி நிரப்பிக் கொண்டிருந்தார். அந்த கம்பி பாறையில் குத்தியதில் தீப்பொறி கிளம்பியது.*

*உடனே வெடிமருந்து பயங்கர சத்தத்துடன் வெடித்தது. அவர் குத்திக் கொண்டிருந்த மூன்று அடி ஏழு அங்குலமுள்ள கம்பி அவரது இடது பக்க முகத்தின் வழியாய் பிரவேசித்து தலையின் முன்பக்கத்தில் வெளியே வந்து நீட்டிக் கொண்டிருந்தது. உடனே பின்பக்கமாக கீழே சரிந்த பினியாஸ் சில நிமிடங்கள் கழித்து எழும்பி உட்கார்ந்து பேச ஆரம்பித்தார். அதற்கு பின்பு ஒரு வண்டியில் ஏற்றி பக்கத்து நகரத்திற்கு எடுத்து சென்றனர். அங்கே ஹார்லோ என்ற மருத்துவரும், வில்லியம் என்ற மருத்துவரும் சேர்ந்து அந்த கம்பியை உருவி எடுத்தனர். பினியாஸ் பிழைத்து கொண்டார். நவம்பர் மாதம் 25ஆம் தேதி சுகமடைந்து தனது பெற்றோர் வீட்டிற்கு சென்றனர்.*

*இந்த விபத்திற்கு முன் அவர் எல்லாரிடமும் மிகவும் அன்பாக நடந்து கொள்வார். மிகவும் பயபக்தியுள்ள அமைதியான நபராக எல்லாராலும் அறியப்பட்டிருந்தார். விபத்திற்கு பின்னர் அவருடைய குணத்தில் பெரிய வீழ்ச்சி ஏற்பட்டது. மிகவும் கோபப்படுவார். அநாகரிகமாக நடந்து கொள்வார். கெட்ட வார்த்தைகளினால் திட்டுவார். ஆவிக்குரிய குணங்கள் அனைத்தையும் இழந்து விட்டார்.*

*பினியாஸ் தனது தலையிலிருந்து அறுவை சிகிச்சை மூலம் அகற்றப்பட்ட இரும்பு கம்பியை ஞாபகச்சின்னமாக வைத்திருந்தார். அவர் மரிக்கும்போது அதுவும் அவருடன் அடக்கம் செய்யப்பட்டது. 1867ஆம் ஆண்டு அவரது மண்டை ஓட்டையும் அவருடன் புதைக்கப்பட்ட இரும்பு கம்பியையும் எடுத்து, ஹாவர்ட் மருத்துவ கல்லூரி அருங்காட்சியகத்தில் வைத்தனர். இதை ஆராய்ச்சி செய்ததில் நெற்றிக்கு பின்னிருந்த மூளையின் முக்கியமான பகுதியை அந்த கம்பி குத்தியதால், சிதைந்து விட்டது. அந்த பகுதிதான் ஆவிக்குரிய, நியாயமாக யோசிக்கும், நல்ல குணம் ஆகியவற்றிற்கு காரணமான பகுதியாம்.*

*இப்போது வெளிப்படுத்தின விசேஷத்தில் சாத்தான் நெற்றிகளில் முத்திரை தரிப்பதையும், பிதாவின் நாமம் தங்கள் நெற்றிகளில் தரிக்கப்பட்ட பரிசுத்தவான்கள் பற்றியும் எழுதப்பட்டவைகளை விளங்கி கொள்ள முடிகிறதல்லவா? ஆவிக்குரியவைகளை சிந்தித்து நிதானிக்கும் பகுதி நெற்றிக்கு பின்னால் அமைந்துள்ள மூளையில் இருக்கிறது. அதை*

சாத்தான் கெடுத்துவிட்டால் ஆவிக்குரிய தன்மைகளை இழந்து விடுவார்கள்.

'பசும்பொன்னினால் ஒரு பட்டத்தைப் பண்ணி, கர்த்தருக்குப் பரிசுத்தம் என்று அதிலே முத்திரை வெட்டாக வெட்டி, அது பாகையிலிருக்கும்படி அதை இளநீல நாடாவினால் பாகையின் முகப்பிலே கட்டுவாயாக. இஸ்ரவேல் புத்திரர் தங்கள் பரிசுத்த காணிக்கைகளாகப் படைக்கும் பரிசுத்தமானவைகளின் தோஷத்தை ஆரோன் சுமக்கும்படி, அது ஆரோனுடைய நெற்றியின்மேல் இருப்பதாக' (யாத்திராகமம் 28:34-38) என்று வாசிக்கிறோம். ஆரோனின் நெற்றியில் கர்த்தருக்கு பரிசுத்தம் என்று எழுதப்பட்ட ஒரு பட்டம் கட்டப்பட்டிருந்தது. நாம் எல்லாரும் கர்த்தருக்கு பரிசுத்தமுள்ளவர்கள். நம் நெற்றியிலும் கர்த்தருக்கு பரிசுத்தம் என்று எழுதப்பட்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால் சாத்தான் தன் முத்திரையை அங்கு பதித்து விடுவான். கடைசி நாட்களில் நடக்க போகும் அவனது முத்திரை பதிப்பிற்கு அவனுடைய ஆளாய் போய் விடுவோம்.

நம் ஆவிக்குரிய தன்மைகளை நாம் இழந்து போகாதபடி, நம் நெற்றிகளில் கர்த்தருக்கு பரிசுத்தம் என்று எழுதப்பட்டிருக்கும்படியாக நம் வாழ்வில் பரிசுத்தம் காணப்படட்டும். அதை காணும் சாத்தான் நம்மை விட்டு கடந்து போவான். கர்த்தருக்கு பரிசுத்தம் என்று எழுதப்பட்டிருக்கும் ஒவ்வொருவரும் கர்த்தருடைய வருகையில் எடுத்துக் கொள்ளப்படுவோம். ஆமென் அல்லேலூயா!

*பரிசுத்தமான பரமனே என்னை*
*பாத்திரன் ஆக்கிடுமே*
*பரம தரிசனம் தாருமே தேவா*
*பரிசுத்தம் ஆக்கிடுமே*

*கர்த்தருக்கு பரிசுத்தம்*
*கருத்துடன் நெற்றியிலே*
*பதித்திட உதவி செய்யும்*
*பரமனே சுத்தமாக்கும்*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, இந்த கடைசி நாட்களில் எங்கள் நெற்றிகளில் கர்த்தருக்கு பரிசுத்தம் என்று எழுதப்பட்டிருக்கட்டும் ஐயா. கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் வருகையில் நாங்கள் காணப்படத்தக்கதாக எங்கள் வாழ்க்கையை பரிசுத்தப்படுத்தும். சாத்தானுக்கு எங்கள் வாழ்வில் ஒன்றும் இல்லை என்று வெளிப்படுத்தும்படியாக, கர்த்தருக்கு பரிசுத்தம் என்று எங்கள் நெற்றியிலும், எங்கள் எல்லை எங்கிலும் காண கிருபை செய்தருளும். இயேசுகிறிஸ்துவின் ஜீவனுள்ள நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

# 29. சுமக்க முடியாத சிலுவை

*அப்பொழுது, இயேசு தம்முடைய சீஷர்களை நோக்கி: ஒருவன் என்னைப் பின்பற்றி வர விரும்பினால், அவன் தன்னைத் தான் வெறுத்து, தன் சிலுவையை எடுத்துக்கொண்டு என்னைப் பின்பற்றக்கடவன் - (மத்தேயு 16:24).*

*ஒரு மனிதன் கர்த்தரிடம், 'ஆண்டவரே, நான் சுமக்கிற இந்த சிலுவை மிகவும் பாரமாயிருக்கிறது. என்னால் இதற்கு மேல் சுமக்க முடியவில்லை' என்று வருத்தப்பட்டு கொண்டான். அப்போது கர்த்தர், 'சரி மகனே, என்னோடுகூட வா' என்று அந்த மனிதனை அழைத்து கொண்டுபோய், சிலுவைகள் நிறைய இருந்த ஒரு அறைக்குள் கொண்டு சென்று, 'உன் சிலுவையை இங்கே வைத்து விட்டு, அங்கு தெரியும் கதவின் வழியாக சென்று, உன்னால் தாங்ககூடிய அளவு உள்ள சிலுவையை தெரிந்தெடுத்து கொள்' என்று கூறினார். அந்த மனிதனும், தன் சிலுவையை இந்த பக்கத்தில் வைத்துவிட்டு, மற்ற கதவின் வழியாக உள்ளே சென்றான். அங்கு விதவிதமான சிலுவைகள் இருந்தன. சில பாரமானதாக, சில உயரமானதாக, சில தூக்க முடியாததாக இப்படி அநேக சிலுவைகள் அங்கு இருந்தன. கடைசியில் தூரத்தில் ஒரு சிறிய சிலுவை அவன் கண்களில் பட்டது. உடனே, அந்த மனிதன், ஆண்டவரிடம், 'ஐயா, இந்த சிலுவை எனக்கு போதும், இதை நான் எடுத்து கொள்கிறேன்' என்று கூறினான். அப்போது ஆண்டவர், 'மகனே, அந்த சிலுவை நீ முதலில் கொண்டு வந்த அதே சிலுவைதான்' என்று கூறினார்.*

*சில வேளைகளில், நாமும் கூட அப்படித்தான் நினைக்கிறோம். நான் படுகிற மாதிரி பாடுகளை யாரும் பட மாட்டார்கள். நான் தான் பெரிய சிலுவையை சுமந்து கொண்டு இருக்கிறேன் என்று நினைத்து கொள்கிறோம். ஆனால் தேவன் சொல்லுவார், 'மகனே, நீ நினைக்கிறதுதான் அப்படி, ஆனால் உன்னை விட பல விதத்தில் பல மடங்கு சோதிக்கப்பட்ட மக்கள் தங்கள் சிலுவையை சுமந்து சென்று இந்த உலகத்தை ஜெயித்திருக்கிறார்கள். ஆகையால் நீ கலங்காதே' என்று சொல்வார்.*

*'இயேசு தம்முடைய சீஷர்களை நோக்கி: ஒருவன் என்னைப் பின்பற்றி வர விரும்பினால், அவன் தன்னைத் தான் வெறுத்து, தன் சிலுவையை எடுத்துக்கொண்டு என்னைப் பின்பற்றக்கடவன்' என்று கூறினார். இந்த வசனத்தின்படி, இந்த உலகத்தில் இருக்கிற ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு சிலுவை உண்டு. ஒருவன் இயேசுவை பின்பற்ற விரும்பினால், சுகபோகமாக அல்ல, தங்கள் ஆசீர்வாதங்களை பின்பற்றி அல்ல, தங்களது சிலுவையை எடுத்து கொண்டு அவரை பின்பற்ற வேண்டும். உலகத்தில் உங்களுக்கு உபத்திரவம் உண்டு, ஆனாலும் திடன் கொள்ளுங்கள், நான் உலகத்தை ஜெயித்தேன் (யோவான் 16:33) என்று சொன்னவர், நாம் சிலுவையை தூக்கி சுமக்கும்போது, நம்மோடு கூட அவரும் சுமந்து வருகிறார்.*

*நமக்காக அன்று பார சிலுவையை சுமந்த தேவனல்லவா அவர்? ஏற்கனவே அவர் சுமந்த விட்டபடியால், அதனுடைய வேதனைகளை அவர் அறிந்திருக்கிறார். நாம் சுமக்கிற*

*சிலுவைகளாகிய பாடுகள், வேதனைகள், துக்கங்கள், நிந்தைகள், துன்பங்கள் எல்லாவற்றையும், அவர் ஏற்கனவே அனுபவித்திருக்கிறபடியால், நமக்கு எல்லாவிதத்திலும் உதவி செய்ய வல்லவராகவே அவர் இருக்கிறார்.*

*ஒருவேளை இன்று, 'நான் மிகவும் பாரமான சிலுவையை (கஷ்டத்தை) சுமக்கிறேன்' என்று நீங்கள் எண்ணுவீர்களானால், உங்களை தேற்றி கொள்ளுங்கள். 'கர்த்தர்மேல் உன் பாரத்தை வைத்துவிடு, அவர் உன்னை ஆதரிப்பார், நீதிமானை ஒருபோதும் தள்ளாடவொட்டார்'(சங்கீதம் 55:22) என்று அவர் மேல் உங்கள் பாரத்தை வைத்து விடுங்கள். அவர் உங்களை ஆதரிப்பார், அவர் உங்களை விசாரிப்பார், அவர் உங்களை தேற்றுவார். நம்முடைய பாரங்களை சுமக்கிற தேவன் நமக்கு இருக்கும்போது, நாம் எதை குறித்தும் ஏன் கவலைப்பட வேண்டும்? மற்றவர்கள் முன் நாம் வெட்கப்பட ஒருநாளும் அவர் அனுமதிக்க மாட்டார். நீங்கள் ஒருவேளை வருத்தப்பட்டு கனமான சிலுவையை சுமந்து கொண்டிருந்தீர்களானால், கர்த்தராகிய இயேசு கிறிஸ்து கூறுவதை கேளுங்கள், 'வருத்தப்பட்டுப் பாரஞ்சுமக்கிறவர்களே! நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்; நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன்'(மத்தேயு 11:28). இப்படி ஆறுதலாய் சொன்ன ஒரே தெய்வம் இயேசுகிறிஸ்துதான். அவரிடத்தில் செல்லும்போது, அவர் நிச்சயம் உங்களுக்கு இளைப்பாறுதலை தருவார். அவர் வாக்கு மாறாதவர். ஆமென் அல்லேலூயா!*

*கர்த்தர் மேல் பாரத்தை வைத்துவிடு*

*கலங்கி தவிக்காதே*
*அவரே உன்னை ஆதரிப்பார்*
*அதிசயம் செய்வார்*
*நீதிமான் தள்ளாட விடமாட்டார்*
*நித்தமும் தாங்கி நடத்திடுவார்*

**ஜெபம்:** *எங்களை அதிகமாய் நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, உம்மை துதிக்கிறோம். நாங்கள் சுமக்க கூடாதபடி எங்களுக்கு இந்த உலகில் பிரச்சனைகள் அதிகம் உண்டு தகப்பனே, நாங்கள் பாரத்தை சுமந்து சுமந்து களைத்து விட்டோம் தகப்பனே, எங்களுக்கு இளைப்பாறுதல் வேண்டும் ஐயா. உம்மிடத்தில் வருகிறோம். எங்களது பாரத்தை உம்மேல் வைத்து விடுகிறோம். எங்களை ஆதரியும், எங்களுக்கு இளைப்பாறுதலை தாரும். எங்கள் சிலுவைகளை இலகுவாக்கும் தகப்பனே. நீர் அப்படி செய்வதற்காக உமக்கு நன்றி. இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

## *30.* மன அழுத்தங்கள்

*கிறிஸ்துவினுடையவர்கள் தங்கள் மாம்சத்தையும் அதின் ஆசை இச்சைகளையும் சிலுவையில் அறைந்திருக்கிறார்கள் (கலாத்தியர் 5:24)*

ஸ்பெயின் நாட்டின் பார்சிலோனா நகரிலிருந்து நூற்று ஐம்பது பேருடன் ஜெர்மனிக்கு சென்று கொண்டிருந்த ஜெர்மன் விங்ஸ் நிறுவனத்தின் வமானம் பிரான்ஸ் நாட்டின் ஆல்ப்ஸ் மலையில் 2015ஆம் ஆண்டு மார்ச் மாதம் விழுந்து நொறுங்கியது. இந்த விபத்தில் விமானததில் பயணித்த அனைவரும் பலியாயினர். விமானத்தின் கருப்புப்பெட்டி சிதைந்த நிலையில் கண்டெடுக்கப்பட்டது. அதில் விமானிகள் பேசும் பேச்சுகளின் கடைசி முப்பது நிமிட பதிவை கேட்டனர்.

முதல் இருபது நிமிடங்க்ள தலைமை விமானியும், துணை விமானியும் இயல்பாகப் பேசி கொண்டிருந்தனர். தலைமை விமானி டுசல்டார்ப் என்ற நகரத்தில் விமானத்தை தரையிறக்குவது பற்றி விவரிக்க துணை விமானி ஒரு சில வார்த்தைகள் மட்டும் பேசியிருக்கிறார். அதற்க்குப்பின்பு விமானத்தை துணை விமானியின் கட்டுப்பாட்டில் வைத்திருக்குமாறு கூறினவுடன், அவரது இருக்கை பின்னோக்கி சாயும் சத்தமும், கதவு திறந்து மூடும் சத்தமும் கேட்கிறது.

இப்போது விமானம் துணை விமானியின் கட்டுப்பாட்டில் மட்டும் பறந்து கொண்டிருக்கிறது. சிறிது நேரம் கழித்து

*தலைமை விமானி உள்ளே செல்வதற்காக கதவை தட்டுகிறார். திறக்கவில்லை. பலமாக தட்டுகிறார், பதில் இல்லை. பேசும் கருவி மூலம் தொடர்பு கொள்கிறார். எந்த பதிலும் இல்லை. துணை விமானி கதவை உள் பக்கமாக தாழிட்டுக் கொண்டிருந்தார். அதன் பிறகு பயணிகள் அலறும் சததமும், துணை விமானியின் மூச்சுவிடும் சத்தமும் பதிவாயிருக்கிறது. எனவே துணை விமானி வேண்டுமெனறே விமானத்தை கீழ் நோக்கி இறக்கி மலையில் மோதச்செய்துள்ளார் என்று யூகிக்கின்றனர். துணை விமானிக்கு எந்த தீவிரவாத இயக்கத்துடனும் தொடர்பு இல்லை. எனவே அவர் மன உளைச்சலினால் தற்கொலை எண்ணத்துடன் செயல்பட்டிருக்க வேண்டும் என்று துப்பறியும் அதிகாரிகள் கருதுகின்றனர். ஒருவரின் தற்கொலை எண்ணத்தால் ஒன்றுமறியா 149 பேர் மரித்துவிட்டனர்.*

*நவீன காலத்தில் எல்லாருக்கும் ஏதாவது ஒருவகையின் மனபாரங்கள் ஏற்படுகிறது. மனிதர்களின் எதிர்பார்ப்புகள் கூடிவிட்டன. மனிதர்கள் தங்கள் தேவைகளை கூட்டி கொண்டனர். தங்களால் எட்ட முடியாத கனவுகளை அவசரமாக அடைய முயலுகின்றனர். தேவையில்லாத அழுத்தங்களுக்கு ஈடு கொடுக்க முயல்கின்றனர். கடைசியல் மன உளைச்சலுக்கு ஆளாகி விபரீதமான முடிவுகளை எடுக்கின்றனர்.*

*இந்த நாட்களில் நன்கு படித்த வாலிபரும் தற்கொலை முடிவை எடுக்கின்றனர். மன அழுத்தங்கள் அதை வெளியே சொல்ல முடியாத அளவு பாதிப்புக்கள், என்ன செய்வது என்று*

*தெரியாமல் யாரிடமும் ஆலோசனை கேட்க வெட்கப்பட்டு, தவறான முடிவுக்கு வந்து தங்கள் உயிரை மாய்த்து கொள்கிறார்கள். தற்கொலையினால் எல்லா பிரச்சனைகளும் முடிவுக்கு வந்து விடுமா? ஒருவேளை தற்கொலை செய்யும் நபருக்கு முடிவு வரும். ஆனால் அவர்கள் விட்டு செல்லும் குடும்பம், பெற்றோர் அவர்களின் கதி என்னவாகும் என்று யோசிக்காமல் சுயத்தை மாத்திரம் சிந்திப்பதினால் என்ன பயன்? துங்கள் உயிரை மாய்த்து கொள்வதற்கு அவர்களுக்கு அதிகாரம் கொடுத்தது யார்? நம் ஆத்துமாவும் சரீரமும் கர்த்தருக்கே சொந்தம் என்பதை உணர்ந்து வாழ வேண்டுமே!*

*வீணான ஆசை இச்சைகளை சிலுவையில் அறைவோம். இல்லாமற்போகும் பொருள்மேல் உன் கண்களைப் பறக்கவிடுவானேன்? அது கழுகைப்போலச் சிறகுகளைத் தனக்கு உண்டுபண்ணிக்கொண்டு, ஆகாயமார்க்கமாய்ப் பறந்துபோம் (நீதமொழிகள் 23:5) என்று ஞானி கூறுகின்றாரல்லவா? அடையக்கூடாத, அடைய முடியாத இலக்குகளை தவிர்த்திடுவோம். வீண் எதிர்ப்பார்ப்புகளையும் தேவைகளையும் குறைத்து கொள்ளுவோம். கர்த்தருக்குள் போதுமென்ற மனதுடன் வாழ முயற்சிப்போம். அப்போது மன அழுத்தங்கள் குறையும். சந்தோஷமாக வாழ முடியும். கர்த்தர் மேல் பாரங்களை வைத்துவிட்டு, வேலையிடத்து அழுத்தங்கள், குடும்ப பாரங்கள், கடன் சுமைகள் இவைகள் நம் வாழ்வின் சந்தோஷத்தை கெடுக்காதபடி, நமக்கு கொடுக்கப்பட்ட கொஞ்ச கால வாழ்க்கையில் இவை எதுவும் நம்மை பாதிக்காதபடி வாழ கர்த்தர் தாமே நமக்கு உதவி செய்வாராக! ஆமென் அல்லேலூயா!*

*என் ஆத்மாவும் சரீரமும்*
*என் ஆண்டவர்க்கே சொந்தம்*
*இனி வாழ்வது நானல்ல*
*என்னில் இயேசு வாழ்கின்றார்*

**ஜெபம்:** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, எங்கள் சரீரமும், ஆத்துமாவும் உமக்கே சொந்தமையா. அதிலிருந்து உயிரை மாய்த்துக்கொள்ள எங்களுக்கு அதிகாரம் இல்லை என்பதை அறிந்தவர்களாக தேவையில்லாத எல்லா ஆசைகளையும், இச்சைகளையும் சிலுவையில் அறைந்துவிட உதவி செய்தருளும். வாழ்கின்ற வாழ்க்கையிலே உமக்காக வாழ்ந்திட கிருபை செய்தருளும். இயேசுகிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.*

## *31.* கனியுள்ள ஜீவியம்

*அதற்கு அவன்: ஐயா, இது இந்த வருஷமும் இருக்கட்டும்; நான் இதைச் சுற்றிலுங் கொத்தி, எருப்போடுவேன், கனிகொடுத்தால் சரி, கொடாவிட்டால், இனிமேல் இதை வெட்டிப்போடலாம் என்று சொன்னான் என்றார் - (லூக்கா 13:8-9).*

*இந்த வருடத்தின் ஆரம்பத்தை காண செய்த நம் அன்பின் தேவன் இந்த வருடத்தின் முடிவையும் காண செய்த அவரது மட்டில்லாத கிருபைக்காக அவரை முழு இருதயத்தோடும் ஸ்தோத்தரிப்போம். எத்தனையோ வாலிபர்கள், சிறுவயதுடையோர், நம்மை காட்டிலும் பலவான்களாக இருந்த அநேகர் நம்மோடு இந்த நாட்களை காணவில்லை. ஆனால் தேவன் நமக்கு அந்த கிருபையை பாராட்டி, நம்மை போஷித்து, பராமரித்து, பாதுகாத்து இந்நாள் வரை நம்மை நடத்தி வந்த அவருடைய கிருபைகளுக்காக அவரை துதிப்போமா?*

*இன்னும் மூன்று நாட்கள் கழித்து நாம் இந்த வருடத்தை கடந்த வருடம் என்று சொல்ல போகிறோம். இந்த வருடம் நம்மில் அநேகருக்கு ஒரு வேளை ஆசீர்வாதம் நிறைந்த வருடமாக இருந்திருக்கலாம், தேவன் நமக்கு நிறைவாய் கொடுத்த வருடமாக இருந்திருக்கலாம், ஒரு சிலருக்கு இந்த வருடம் தங்கள் உயிருக்குயிரானவர்களை இழக்க கொடுத்த வருடமாக இருந்திருக்கலாம், அல்லது எத்தனையோ காரியங்களை இழந்த வருடமாக இருந்திருக்கலாம். ஆனால்*

*நம்மை இதுவரைக்கும் வழி நடத்தி வந்து, நமக்கு ஆறுதலையும் தேறுதலையும் கொடுத்து, அரவணைத்து வந்தவர் நம் இரக்கங்களின் தேவனல்லவோ!*

*நம் உலக காரியங்களில் நம்மை ஆசீர்வதித்த நம் தேவனுக்கு எத்தனை உண்மையாக நாம் ஆவிக்குரிய காரியங்களில் இருந்தோம் என்றால் அது மிகவும் குறைவாகத்தான் இருக்கும். நமக்கு நேரம் போதாது என்பதே நாம் எப்போதும் கூறும் மன்னிப்பின் காரியமாக இருக்கிறது. நாம் இன்னும் ஆவிக்குரிய காரியங்களில் நம் கவனத்தை அதிகமாக திருப்புவதில்லை, நாம் அவருக்குரிய நேரத்தை அவருக்கு கொடுக்கவில்லை என்பதே உண்மையாகும்.*

*இயேசுகிறிஸ்து ஒரு உவமையை சொல்கிறார், 'அப்பொழுது அவர் ஒரு உவமையையும் சொன்னார்: ஒருவன் தன் திராட்சத்தோட்டத்தில் ஒரு அத்திமரத்தை நட்டிருந்தான்: அவன் வந்து அதிலே கனியைத் தேடினபோது ஒன்றுங் காணவில்லை. அப்பொழுது அவன் தோட்டக்காரனை நோக்கி: இதோ, மூன்று வருஷமாய் இந்த அத்திமரத்திலே கனியைத் தேடி வருகிறேன்; ஒன்றையுங் காணவில்லை, இதை வெட்டிப்போடு, இது நிலத்தையும் ஏன் கெடுக்கிறது என்றான். அதற்கு அவன்: ஐயா, இது இந்த வருஷமும் இருக்கட்டும்; நான் இதைச் சுற்றிலுங் கொத்தி, எருப்போடுவேன், கனிகொடுத்தால் சரி, கொடாவிட்டால், இனிமேல் இதை வெட்டிப்போடலாம் என்று சொன்னான் என்றார்' (லூக்கா 13:6-9). இந்த இடத்தில் ஒரு அத்திமரம் திராட்ச தோட்டத்தில் வைக்கப்பட்டிருந்தது, அது கனியை கொடுக்கும்*

என்றுதான் அந்த மரம் அங்கு வைக்கப்பட்டிருக்க வேண்டும். அது பெரிய மரமானபோது, மூன்று வருஷங்கள் கழித்து, எஜமான் வந்து அதில் கனியை தேடினான். ஆனால் அதில் ஒரு கனியையும் அவன் காணவில்லை. அவனுக்கு கோபம் வந்து, 'இந்த மரம் திராட்ச தோட்டத்தில் வைக்கப்பட்டு இருந்தும் கனியை கொடுக்கவில்லையே, இதை ஏன் இங்கு வைக்கவேண்டும், இதை வெட்டி போட்டால் இது இருக்கும் நிலமாவது நமக்கு கிடைக்கும், சும்மா இடத்தை அடைத்து கொண்டு இருக்கிறது' என்று கூறுகிறான். அதற்கு தோட்டக்காரன் சொன்ன பதில், 'ஐயா, இது இந்த வருஷமும் இருக்கட்டும்; நான் இதைச் சுற்றிலுங் கொத்தி, எருப்போடுவேன், கனிகொடுத்தால் சரி, கொடாவிட்டால், இனிமேல் இதை வெட்டிப்போடலாம்' என்று சொன்னான்.

ஆம், தேவனுடைய கிருபையின்படி, நமக்கு அவர் இன்னும் ஒரு வருடத்தையும் கூட்டி கொடுத்து, நமக்கு அவருடைய வார்த்தைகளை கிருபையாக சொல்லி கொடுத்து, வசனத்தின் மூலம் நம்மோடு பேசி, நாம் எப்படியாவது அவருக்கு கனி கொடுக்க வேண்டும் என்று விரும்புகிறார். அவருடைய வாஞ்சையை நிறைவேற்றுவோமா? வருகிற வருடத்தில் அவர் நமக்கு எருபோட்டு, தண்ணீர் பாய்ச்சி நம்மை வளர்க்கும் போது, எஜமான் வந்து கனியை நம்மிடத்தில் தேடும்போது நாம் அவருக்கு விருப்பமான கனியை கொடுக்கத்தக்கதாக கனியுள்ள வாழ்க்கையை வாழ்வோமா?

*'ஒருவன் என்னிலும் நான் அவனிலும் நிலைத்திருந்தால், அவன் மிகுந்த கனிகளைக் கொடுப்பான்; என்னையல்லாமல் உங்களால் ஒன்றும் செய்யக்கூடாது' (யோவான் 15:5) என்று இயேசுகிறிஸ்து சொன்னாரே, அவரில் நிலைத்திருந்து மிகுந்த கனிகளை கொடுக்கும் வாழ்க்கையை வாழும்படியாக நாம் புது வருடத்தில் புது தீர்மானத்தை எடுப்போமா? நமக்கு வாழ்வு கொடுத்த தேவனுக்கு புதிய வருடத்தில் அவருக்கு நம்மால் இயன்ற கனியுள்ள வாழ்க்கை வாழ அவருக்கு அர்ப்பணிப்போம்.*

*சென்ற வருடத்தில் கனியற்ற வாழ்வை வாழ்ந்த நம்மில் அநேகருக்கு இந்த புதிய வருடத்தில் கனியுள்ள வாழ்க்கை வாழும்படி தேவன் நம்மை கொத்தி எருபோட்டு, தண்ணீர் பாய்ச்சும்படி நம்மை விட்டு கொடுப்போம். அப்போது அவரில் நிலைத்திருந்து புதிய வருடத்தில் அதிக கனிகளை கொடுக்க தேவன் நமக்கு கிருபை செய்வார். ஆமென் அல்லேலூயா!*

*கனியில்லாத மரத்தை போல*
*நான் வாடி நின்றேனே*
*பரனேசு தம் கிருபையாலே*
*கனி தர செய்திட்டாரே*

*நான் கூப்பிட்ட நாளில் தானே*
*இயேசு சுவாமி செவி கொடுத்தாரே*
*நா வறண்ட வேளையிலே*
*ஜீவன் தந்திட்டாரே*

**ஜெபம்:** *எங்கள் அன்பின் நேச தகப்பனே, இந்த வருடம் முழுவதும் தேவரீர் எங்களுக்கு பாராட்டின மட்டற்ற கிருபைகளுக்காக உம்மை நன்றியுள்ள இருதயத்தோடு துதிக்கிறோம் தகப்பனே. எங்களை போஷித்து, பராமரித்து, பாதுகாத்து வழிநடத்தின தயவுள்ள கிருபைக்காக உம்மை துதிக்கிறோம். இந்த வருடம் முழுவதும் நீர் எங்களிடத்தில் எதிர்ப்பார்த்த கனியுள்ள ஜீவியம் எங்களில் காணப்படாதிருந்திருக்குமேயானால், தயவாய் எங்களுக்கு மன்னித்து, வரப்போகிற புதிய வருடத்தில் நாங்கள் கர்த்தரில் நிலைத்திருந்து மிகுந்த கனிகளை கொடுக்கிற ஜீவியத்தை செய்ய எங்களுக்கு கிருபை பாராட்டும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 32. இயேசுகிறிஸ்து உலகில் வந்ததன் நோக்கம்

*பிசாசினுடைய கிரியைகளை அழிக்கும்படிக்கே தேவனுடைய குமாரன் வெளிப்பட்டார் (1யோவான் 3:8)*

ஒரு கிராமத்தில் வைத்திய வசதி எதுவும் இல்லாத இடமாக அந்த கிராமம் இருந்தது. அதை கவனத்தில் கொண்டு வந்து ஒரு சில நாட்களுக்கு ஒரு வைத்தியரை அந்த கிராமத்தின் பஞ்சாயத்து தலைவர்கள்ஆயத்தப்படுத்தினர். அவர்களுடைய வேண்டுகோளின்படி அந்த வைத்தியரும் குறிப்பிட்ட நாளில் அந்த கிராமத்திற்கு வந்தார்.

அவர் வந்ததை கண்ட கிராமத்தினருக்கு உற்சாகம் தாங்க முடியவில்லை. அவரை மேளதாள முழக்கத்தோடு வரவேற்றனர். அவருக்கும் மிகவும் சந்தோஷமாக இருந்தது. ஒரு நாள் முடிந்தது. அடுத்தநாளும் பெரிய விருந்து செய்து அவரை வரவேற்றனர். அவர் சொன்னார், நான் கொஞ்ச நாள்தான் இங்கு இருப்பேன், ஆகையால் யார் வியாதியாயிருக்கிறீர்களோ அவர்கள் வந்து என்னிடம் சிகிச்சை பெற்றுக் கொள்ளுங்கள் என்று மக்களிடம் கூறினார். ஆனால் அவர்களோ, அவர் வந்ததையே குறித்து பேசி அதை பெரிய விழாவாக கொண்டாடி, நாட்களை கடத்தினர்.

அவர் போகும் நாளும் வந்தது. யாரும் அவரிடம் சிகிச்சை பெற்றுக் கொள்ளவில்லை. இன்னும் அவர் வந்ததன் நோக்கத்தை அறியாதவர்களாக அவர் வந்து விட்டார் என்று அதையே கொண்டாடி கொண்டிருந்தார்கள். கடைசியில்

*வருத்தத்தோடு அந்த வைத்தியர் அந்த கிராமத்தை விட்டு கடந்து சென்றார். என்ன ஒரு பரிதாபம்!*

*இந்த நாட்களில் இப்படித்தான் நாமும் பண்டிகை கொண்டாடுகிறோம். அவர் இந்த உலகத்தில் வந்த நோக்கத்தை மறந்தவர்களாக, கிறிஸ்து இந்த உலகில் வந்ததையே பெரியதாக எடுத்துக் கொண்டு, அதையே கொண்டாடிக் கொண்டிருக்கிறோம். அவரிடம் சென்று, நம் பாவ வியாதிக்கு பரிகாரத்தை தேடாமல், அவர் வந்ததையே கொண்டாடி கொண்டிருக்கிறோம்!*

*அப்போஸ்தலனாகிய யோவான் இயேசுகிறிஸ்து எதற்காக உலகத்தில் வெளிப்பட்டார் என்று கூறும்போது, பிசாசின் கிரியைகளை அழிக்கும்படிக்கே வெளிப்பட்டார் என்று கூறுகிறார்.*

*அந்த பிசாசின் கிரியை ஏதோ ஒரு காலத்தில் மட்டுமல்ல, பிசாசின் கிரியை எல்லா மனிதர்களுக்குள்ளும் இயற்கையாக நிகழ்கிறது. அந்த செயல்பாடுள்ள ஒவ்வொரு மனிதர்களிடத்திலிருந்தும் வெளிப்படும் தவறான குணங்கள், விரும்பத்தகாத சுபாவங்கள், முரட்டாட்டமான இயல்புகள், தப்பிதமான பழக்கங்கள் மற்றும் வாழ்க்கை முறைகள் ஆகியவை அடையாளப்படுத்துகின்றன. கோபம், பொறாமை, எரிச்சல், விரோதம், கசப்பு, பொருளாசை, பெருமை, பழிக்குபழி போன்ற துர்க்குணங்கள் எல்லாம் ஒரு மனிதனுக்குள் பிசாசின் செயல்பாடுகள் நடந்து கொண்டிருப்பதை உறுதிப்படுத்துகின்றன. சமுதாயத்தில்*

*நிலவும் அனைத்து தீவினைகளுக்கும் காரணம் தனி மனிதர்களின் இருதயம் பிசாசின் ஆளுகைக்கு உட்பட்டு, அவனுடைய பொல்லாத கிரியைகளுக்கு தங்களை ஒப்புக்கொடுப்பதினாலேயே.*

*எனவே மனிதனுக்குள் நடைபெறும் பிசாசின் கிரியைகளை அழிக்க இருதயத்திற்குள் ஒரு இரட்சகர் வரவேண்டிய தேவை உள்ளது. அவ்விதம் வந்து பாவத்தின் கட்டுகளையும், பிசாசின் கிரியைகளையும் அழித்து அவனை விடுதலையாக்க கிறிஸ்து உலகத்திற்கு வ்நதார். ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து நமது கனத்தையும், ஆராதனையையும், காணிக்கைகளையும், துதி ஸ்தோத்திரங்களையும் பெறுவதை பிரதான நோக்கமாக கொண்டு பூமிக்கு வரவில்லை. அவர் ஒரு விசேஷ செயலை ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் செய்ய வந்தார். நமக்குள் இயங்கி கொண்டிருக்கும் பாவத்தின் ஆதிக்கத்தை அழித்து அப்புறப்படுத்தவே வந்தார்.*

*மருத்துவரை வரவேற்பதிலேயே முழு கவனம் செலுத்தி, சிகிச்சை பெறாமல் போன மக்களை போல நாம் இராமல், முதலாவது ஆண்டவரை நமக்குள் செயல்பட அனுமதிக்க வேண்டும். அவ்வாறின்றி, நாம் செய்கின்ற அத்தனை வழிபாடுகளும், ஆராதனைகளும் பண்டிகை கொண்டாட்டங்களும் அர்த்தமற்றவைகளே. அவைகள் தேவனை பிரியப்படுத்தாமல், கோபப்படுத்தவே செய்யும். அன்று பஸ்கா பண்டிகையை வெகு விமரிசையாக கொண்டாடிய எருசலேம் மக்களை பார்த்து இயேசு கண்ணீர் விட்டார் - (லூக்கா 19:41). ஏனென்றால் பஸ்கா பண்டிகை*

*என்பது விடுதலையை நினைவு கூரும் பண்டிகை. ஆனால் அந்த மக்கள் விடுதலையின்றி, விடுதலையை அளிக்கும் தேவனை குறித்து சிந்தியாமல் வெறும் பாரம்பரிய பணடிகை கொண்டாட்டத்தில் மூழ்கி போயிருந்தனர்.*

*அன்று எருசலேமை பார்த்து அழுத இயேசு இன்று நம்மை பார்த்து மகிழ முடியுமா? அவர் நமக்காக ஆயத்தமாக்கிய பாவ விடுதலையையும், இரட்சிப்பையும் பரிசுத்த வாழ்கையும் நாம் விரும்பி பெற்று கொண்டிருந்தால், அவர் நம்மையும், நம்முடைய ஆராதனைகளையும் கண்டு மகிழுவார். நாம் பாவத்தை குறித்தும் பரிசுத்த வாழ்கை குறித்தும் கவலைப்படாமல் இருப்போமானால் அவர் நம்மை பார்த்து கண்ணீர் விடத்தான் முடியும், இனியாவது கிறிஸ்து உலகிற்கு வந்ததன் நோக்கத்தை நம்மில் நிறைவேற கர்த்தருக்கு நம்மை ஒப்புகொடுப்போமா?*

*பாவங்கள் போக்கவே சாபங்கள் நீக்கவே*
*பூலோகம் வந்தாரையா*
*மனுஷரை மீட்கவே பரலோகம் சேர்க்கவே*
*சிலுவையை சுமந்தாரையா*
*நான் தேடி போகவில்லை*
*என்னை தேடி வந்தாரையா*
*எந்தன் இயேசுவே எந்தன் இயேசுவே*

***ஜெபம்:*** *எங்களை அதிகமாய் நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, இந்த நாளுக்காக உம்மை துதிக்கிறோம். கிறிஸ்துவின் பிறந்த நாளை கொண்டாடும் ஒவ்வொருவரும்*

*அவர் இந்த உலகத்திற்கு வந்த நோக்கத்தை அறிந்தவர்களாக தங்களுடைய இருதயத்தில் கிறிஸ்துவை ஏற்று கொண்டவர்களாக, பிசாசின் கிரியைகளை கிறிஸ்துவினால் தங்கள் இருதயங்களிலிருந்து அழித்தவர்களாக வாழ கிருபை செய்யும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

## 33. நாம் செய்யக்கூடிய எளிய ஊழியம்

*உன் ஆகாரத்தைத் தண்ணீர்கள்மேல் போடு; அநேக நாட்களுக்குப் பின்பு அதின் பலனைக் காண்பாய் - (பிரசங்கி 11:1).*

*ஒரு சுவிசேஷ துண்டு பிரதி மாபெரும் எழுப்புதலை உண்டாக்கியது. ஒன்பது மிஷனெரிகளை உலகிற்கு தர காரணமாயிருந்தது. தமிழ்நாட்டிலும் சிறந்த மருத்துவ பணி மூலம் சரீர சுகம் மட்டுமல்லாமல், ஆத்மீக சுகத்தையும பெற செய்தது. அது என்ன துண்டு பிரதி, யார் அதை படித்தார்? அதன்; மூலம் தமிழ்நாட்டில் மருத்துவ பணியா?*

*ஆம், ஒரு நாள் ஜான் ஸ்கடர் என்பவர் தனது நண்பரை பார்க்க ஓரிடத்தில் காத்திருந்தார். அப்போதுதான் அவர் கண்களில்பட்டது, அந்த துண்டு பிரதி! அதின்தலைப்பு 'உலகத்தின் மனந்திரும்புதல்'. கண்டதும் கையில் எடுத்து படிக்க ஆரம்பித்தார். தன் வாழ்வை இயேசுகிறிஸ்துவுக்கு அர்ப்பணித்தார். பின்நாட்களில் தன்னை ஊழியத்திற்கு அர்ப்பணித்தார்;. அவர் தனது ஏழு மகன்களையும் இரண்டு மகள்களையும் மிஷனெரி பணிக்கு அர்ப்பணித்தார். அவரது குடும்பத்திலுள்ள 43 பேர்களும் கிறிஸ்தவ பணிக்காக அர்ப்பணிக்கப்பட்டவர்களே!*

*ஜான் ஸ்கடரின் பேத்திதான் நம் வேலூரில் C.M.C. மருத்துவமனையை நிறுவி மருத்துவ பணியோடு, சுவிசேஷ பணியையும் செய்த ஐடா ஸ்கடர் அம்மையார் ஆவார்.*

*தலைமுறை தலைமுறையாய் ஒரு குடும்பம் கிறிஸ்துவின் பணியை செய்து வருமாயின் அது சரித்திரத்திலேயே சிறந்த உதாரணம் தானே! ஒரு கைபிரதி ஒருவரை மாற்றியதன் மூலம் பல்லாயிரக்கணக்கானோர் இரட்சிப்பின் பாதையில் கடந்து வந்துள்ளனர்.*

*தேவன் நமக்கு கொடுத்துள்ள கட்டளை 'நீங்கள் உலகமெங்கும் போய் சர்வசிருஷ்டிக்கும் சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள்' என்பதே. அப்படியென்றால் முழு நேர ஊழியர்கள் மட்டுமல்ல, ஒவ்வொரு விசுவாசிக்கும் சுவிசேஷம் அறிவிக்கும் கடமையுள்ளது. ஊழியம் என்றதும் நம் நினைவிற்கு வருவது மேடை ஏறி மைக் பிடித்து பிரசங்கிப்பது மட்டும் தான். இதை நினைத்ததும் நாம் 'ஐயோ நான் மிகவும் பயந்தாங்கோளி நமக்கெல்லாம் இந்த ஊழியம் செய்ய முடியாது' என முடிவு கட்டி, இது முழு நேர ஊழியர்களின் வேலை என ஒதுங்கி விடுகிறோம்.*

*நாம் தேவனுக்காக நம்மால் இயன்ற ஏதாவதொன்றை செய்யும்படி அழைக்கபட்டிருக்கிறொம். வேதம் சொல்கிறது, 'நீ செய்யும்படி உன் கைக்கு நேரிடுகிறது எதுவோ அதை முழு பலத்தோடு செய்' என்று. ஆம் நாம் செய்யும் காரியம் சிறியதோ, பெரியதோ, பிரம்மாண்டமானதோ, அற்பமானதோ எதுவாயினும் அதை முழு உற்சாகத்தோடும் நம்பிக்கையோடும் செய்ய வேண்டும். அதையே தேவன் எதிர்ப்பார்க்கிறார்.*

*நம் அனைவராலும் செய்யக்கூடிய ஒரு ஊழியமுண்டு. அது கைப்பிரதி கொடுத்து சுவிசேஷம் அறிவிக்கும் ஊழியம். இதில்*

உடனே எந்த வித விளைவையும் காண முடியாது ஆனால் நிச்சயமாக பரலோகில் காணலாம். எப்போதும் உங்கள் கையில் இதை வைத்திருப்பீர்களென்றால், பேருந்திலே, ரயிலிலே, வேலை ஸ்தலத்திலே, படிக்கும் இடங்களிலே சந்தையிலே கொடுக்கலாம். சிலவேளை பஸ்ஸில் நாம் இருந்துவிட்டு எழுந்திரிக்கும்போது, அந்த இடத்தில் டிராக்ஸ் எனப்படும் கைப்பிரதிகளை வைத்து விட்டு எழுந்து வரலாம். அங்கு அமர வருபவர்கள் அதை கையில் எடுத்து, என்னவென்று நிச்சயமாய் பார்ப்பார்கள்.

ஆனால் அவைகளை கொடுக்குமுன், நாம் ஜெபித்திருக்க வேண்டும். 'இதை நான் கொடுக்க போகிறேன், கர்த்தாவே இதை பெறும் இந்த நபருடன் இடைபடும்' என சின்ன ஜெபம் செய்து விட்டு கொடுக்க வேண்டும். நாம் கொடுக்கும் டராக்ஸ் தெளிவாய், எளிய முறையில் இயேசுகிறிஸ்துவின் இரட்சிப்பை பற்றியதாக இருக்க வேண்டும். புறமதங்களை தாக்கும் வார்த்தைகள் இல்லாதவாறு பார்த்து கொள்ள வேண்டும். முக்கியமாக வாங்குகிறவர்கள் படிக்கவும், படிப்பவர்கள் இருதயம் மாற்றப்படவும் கருத்தாய் ஒவ்வொரு நாளும் ஜெபிக்க வேண்டும். ஜெபமின்றி நாம் செய்யும் அனைத்தும் வீண் என்பதை மனிதில் கொள்ள வேண்டும்.

ஒரு கைப்பிரதி ஒரு தலைமுறையினரையே மிஷனெரிகளாக உலகிற்கு தர காரணமாயிருந்துள்ளது, என்றால் நீங்களும், இந்த எளிய ஊழியத்தை செய்யலாமே! ஒரு சகோதரன், ஊழிய வாஞ்சை உள்ளவர், கிறிஸ்துவை பற்றி பகிரங்கமாக சொல்லக்கூடாத ஒரு நாட்டில் வேலைக்கு வந்தார். அவருக்கு

*எப்படியாகிலும் தான் காண்கிற ஒவ்வொரு புறமதத்தினருக்கும் கிறிஸ்துவை பற்றி சொல்ல ஆவல். அந்த நாட்டின் மொழியில் கை நிறைய டிராக்ஸ்களை எடுத்து கொண்டு, மருத்துவ மனைக்கு சென்று, அங்கு தனியாக நின்று வைத்தியருக்காகவோ, மருந்துக்காகவோ காத்து கொண்டிருக்கும் ஆட்களிடம் சென்று, ஆங்கிலத்தில், Don't worry, God loves you, He will heal you என்று சொல்லிவிட்டு, அவர்கள் கையில் ஒரு பிரதியை கொடுத்து விட்டு, வேகமாய் சென்று விடுவார். அவருடைய ஊழியம் ஒரு சவாலாக இருந்தது. (மாட்டினால் அவ்வளவுதான், ஆனால் கர்த்தர் அவரை காத்து கொண்டார், அவர் இப்போது அங்கு இல்லை, நம் நாட்டிற்கே வந்து விட்டார்). சுவிசேஷத்திற்கு தடை விதித்திருக்கும் அந்த நாட்டிலேயே அவர் அறிவித்தார் என்றால், சுதந்திரமான நம் நாட்டில் நாம் இந்த எளிய ஊழியத்தை செய்வதற்கு தடை ஏதுமில்லையே!*

*கர்த்தருக்கென்று எதையாவது செய்வோம். ஆத்துமாக்களை கர்த்தரிடம் கொண்டு வருவோம். உன் ஆகாரத்தைத் தண்ணீர்கள்மேல் போடு; அநேக நாட்களுக்குப் பின்பு அதின் பலனைக் காண்பாய். ஆமென் அல்லேலூயா!*

*தரிசு நிலங்கள் அநேகம் உண்டு*
*தரிசனம் பெற்றோர் நீர் முன் வருவீர்*
*பரிசாக இயேசுவை அவர்களுக்கும்*
*அளித்திட அன்பினால் எழுந்து செல்வீர்*
*திறவுண்ட வாசல் அடைபடுமுன்*
*நொறுங்குண்ட மனதாய் முன் செல்வோர் யார்*

*நாட்கள் கொடியதாய் மாறிடுதே*
*காலத்தை ஆதாயம் செய்திடுவோம்*

***ஜெபம்:*** *எங்களை அதிகமாய் நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, இந்த நல்ல நாளுக்காக உம்மை துதிக்கிறோம். இந்த கடைசி நாட்களில், திறக்கப்பட்டிருக்கிற கிருபையின் வாசல் அடைக்கப்படுவதற்கு முன், நாங்கள் எப்படியாவது, உம்மை அறியாத மக்களுக்கு உம்மை குறித்து சொல்ல வழிகளை திறந்து தாரும் ஐயா. ஒரு சிறிய கைப்பிரதி மூலம் ஒரு குடும்பம் தலைமுறையாக உமக்கு உண்மையான ஊழியத்தை செய்ய முடியும் என்றால், அந்த எளிய ஊழியத்தில் நாங்களும் பங்கு கொள்ள எங்களை தகுதிப்படுத்தும். நாங்கள் கைப்பிரதிகளை கொடுக்கிற ஒவ்வொருவரும் உம்மை ஏற்று கொள்ளும்படியாக, ஆவியானவர் தாமே கிரியை செய்யும்படியாக ஜெபிக்கிறோம். இந்த சிறிய ஊழியமானாலும் வேறு எந்த ஊழியமானாலும் அதை முழு இருதயத்தோடும் செய்யவும், அதன் மூலம் உம்முடைய நாமம் அறிவிக்கப்படவும் தேவன் தாமே கிருபை செய்வீராக. இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# *34.* கனிதரும் செடி

*கனிகொடுக்கிற கொடி எதுவோ, அது அதிக கனிகளைக் கொடுக்கும்படி, அதைச் சுத்தம்பண்ணுகிறார் - (யோவான் 15:2).*

*மெர்ஸி என்னும் பெண், ரோஜா செடிகளை வளர்ப்பதில் மிகவும் ஆர்வமுள்ளவள். விடிந்தும் விடியாததுமாக ரோஜா செடியின் முன்தான் நிற்பாள். அவளது பககுவமான பராமரிப்பினால் செடிகள் பூத்துக் குலுங்கின. ஆனால் ஒரு செடி மட்டும் பசுமையான இலைகளுடன் வளர்ந்து நீண்டு கொண்டே சென்றது. அதில் பக்க கிளைகள் தோன்றி அதுவும் போட்டி போட்டு வளர்ந்ததேயன்றி மொட்டு விடும் சாத்தியமே அதில் காணப்படவில்லை. ஒரு நாள் கோபத்தில், 'உனக்கு உரம் போட்டு தண்ணீர் ஊற்றி என்ன பயன்?' என்று சொல்லி அதன் எல்லா இலைகளையும் ஒட்ட நறுக்கி விட்டாள். ஆனாலும் தினமும் தண்ணீர் உற்றினாள். அதை பார்த்த அவளது தோழி ஒருவள், 'இப்படி நீ செய்தால் அந்த செடி செத்துப்போய் விடும். இதை பிடுங்கி விட்டு, வேறு செடியை வை' என்றாள். ஆனால் அந்த செடி ஒரு மாத்திற்குள் துளிர்விட ஆரம்பித்தது. அழகிய பூக்களும் பூத்தது. அந்த செடி செத்து விடும் என்று சொன்ன தோழிக்கும் அது ஆச்சரியமாயிருந்தது.*

*வேதாகமத்திலும் யோசேப்பின் வாழ்வை பார்க்கும்போது, வசதியாக வாழ்ந்து வந்த அவன், சகோதரர்களின் பொறாமையினால் அடிமையாக விற்கப்பட்டு, எகிப்திற்கு*

*கொண்டு செல்லப்படுகிறான். பலவர்ண அங்கியை எப்போதும் தரித்திருந்த அவனது உடை உரியப்பட்டவனாக, இரு கைகளும் கட்டப்பட்டவனாக மீதியானியர் அமர்ந்துள்ள ஒட்டகத்தின் பின்னாக நடந்ததை, அவனுடைய சகோதரர் பார்த்தபோது, 'இனி அவ்வளவுதான், யோசேப்பு என்னும் சொப்பனக்காரன் ஒழிந்தான்' என்று எண்ணியிருந்திருப்பார்கள்.*

*அதன்பின் போத்திபாரின் அரண்மனையில் பொய் குற்றச்சாட்டினால் சிறைக்கு அனுப்பப்பட்டபோது, 'இவன் கடவுள் இவனை கைவிட்டு விட்டார் என்று அரண்மனையில் உள்ள மற்றவர்கள் நினைத்திருப்பார்கள். கிளைகள் நறுக்கப்பட்ட அந்த ரோஜா செடியின் நிலையில்தான்.*

*யோசேப்பும் இருந்தார். உண்மை என்னவென்றால் தேவன் அவரை பலருக்கு கனிதரும் செடியாக மாற்ற விரும்பினார். அதுபோலவே மீண்டும் யோசேப்பின் வாழ்வு துளிர் விட்டது. தேவன் நினைத்தது போலவே யோசேப்பை தான் வாழ்ந்த நாட்டிற்கும் தன் உடன் பிறந்த சகோதரர்களுக்கும் கனி தரும் செடியாகவே தேவன் மாற்றி விட்டார். அல்லேலூயா!*

*பிரியமானவர்களே, நாமும் கூட கிறிஸ்தவர்கள் என்ற பெயரை வைத்துக் கொண்டு ஆனால் யாருக்கும் பலன் தராத ஒரு சுகபோக வாழ்வு வாழ்ந்து கொண்டிருந்தால் அதினாலே யாருக்கும் பிரயோஜனமில்லை. ரோஜா செடி என்றால் நாம் எதிர்ப்பார்ப்பது ரோஜா பூக்களைத்தானே! அதுபோல கிறிஸ்தவர்கள் என்றால் தேவனும் மற்றவர்களும் எதிர்ப்பார்ப்பது கிறிஸ்துவை பிரதிபலிப்பதுதான்.*

*கிறிஸ்துவுக்குள் நீதிமான்களாகிய நமக்கு வரும் போராட்டங்களையும், சோதனைகளையும் தேவன் அவற்றை நம்முடைய கிளைகளை நறுக்கும் அனுபவங்களாக மாற்றி, நம்மை மற்றவர்களுக்கு ஆசீர்வாதமாக வைக்கிறார். ஒரு வேளை நமக்கு வரும் போராட்டங்களை பார்ப்பவர்கள் இவர்கள் இவ்வளவுதான், தேவன் இவர்களை கைவிட்டுவிட்டார் என்று கூட சொல்லலாம். அத்தனை பெரிய சோதனைக்குப்பின் தேவனுடைய மிகப்பெரிய ஆசீர்வாதம் நமக்காக காத்திருக்கிறது என்பதை நாம் மறந்து போகக்கூடாது. யோசேப்பு அத்தனை பாடுகளையும் சகித்தப்பின்பு அவர் அந்த தேசத்தின் அதிபதியாக தேவன் அவரை மாற்றினார். 'யோசேப்பு கனிதரும் செடி; அவன் நீர் ஊற்றண்டையிலுள்ள கனிதரும் செடி; அதின் கொடிகள் சுவரின்மேல் படரும்' (ஆதியாகமம் 49:22). அல்லேலூயா!*

*நாமும் கிறிஸ்து என்னும் செடியை பற்றிக் கொண்டவர்களாக அவரது பலத்த கரத்திற்குள் அடங்கியிருக்கும்போது அவர் நமக்கு அநேக காரியங்களை கற்றுக் கொடுத்து, மீண்டும் நம்மை துளிர்விடச் செய்து கனி கொடுக்கிறவர்களாக மாற்றுவார். ஆமென் அல்லேலூயா!*

*கனி செடி நீர் நிலைத்திருக்கும் கொடியாய்*
*அடியேன் படர்ந்திலங்க*
*கிளை நறுக்கி களை பிடுங்கி*
*கர்த்தரே காத்தென்னை சுத்தம் செய்வீர்*

*உம்பாதம் பணிந்தேன் எந்நாளும் துதியே*
*உம்மையன்றி யாரைப்பாடுவேன் - இயேசையா*
*உந்தன் அன்பு உள்ளம் பொங்குதே*

**ஜெபம்:** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, எங்கள் வாழ்வில் வரும் எல்லா போராட்டங்கள், சோதனைகள் மத்தியிலும் நீர் அவைகளை கிளை நறுக்கும் அனுபவங்களாக மாற்றி, பின் பெருத்த ஆசீர்வாதத்தை வைத்திருக்கிற தயவிற்காக உமக்கு நன்றி. எந்த சோதனையிலும் நாங்கள் சோர்ந்து விடாதபடி, கிறிஸ்துவாகிய செடியை பற்றிக் கொண்டு, எங்களை அதிக கனிகொடுக்கிறவர்களாக மாற்றும்.. இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 35. புதிதான கட்டளை

வேளை வந்தபோது, அவரும் அவருடனேக்கூடப் பன்னிரண்டு அப்போஸ்தலரும் பந்தியிருந்தார்கள். அப்பொழுது அவர் அவர்களை நோககி: நான் பாடுபடுகிறதற்கு முன்னே உங்களுடனேகூட இந்த பஸ்காவைப் புசிக்க மிகவும் ஆசையாயிருந்தேன். தேவனுடைய ராஜ்யத்திலே இது நிறைவேறுமளவும் நான் இனி இதைப் புசிப்பதில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று சொல்லி - (லூக்கா 22:14-16).

இந்த நாள் *Maundy Thursday* என்றழைக்கப்படுகிறது. இந்த நாளில் இயேசுகிறிஸ்து கடைசி இராப்போஜனம் அனுசரித்ததை நினைவுகூறும்படியாக தங்கள் ஆலயங்களில் இராப்போஜனம் வைக்கிறார்கள். *Maundy* என்பதற்கு *mandatum* அதாவது *command* அல்லது கட்டளை என்பது பொருள். இயேசுகிறிஸ்து தாம் காட்டி கொடுக்கப்படுவதற்கு முன்பு 'நீங்கள் ஒருவரிலொருவர் அன்பாயிருங்கள்: நான் உங்களில் அன்பாயிருந்ததுபோல நீங்களும் ஒருவரிலொருவர் அன்பாயிருங்கள் என்கிற புதிதான கட்டளையை உங்களுக்கு கொடுக்கிறேன்' (யோவான்13:34)என்று வியாழனன்று கொடுத்த கட்டளையை நினைவுகூரும்படி *Mandatum* என்பதை *Maundy Thursday* என்று கொண்டாடப்படுகிறது.

இந்த கடைசி இராப்போஜனம் மேல் வீட்டறையில் நடைபெற்றது. இங்குதான் பரிசுத்த ஆவியானவர் இறங்கி வந்தார். இங்குதான் முதலாவது சபை ஆரம்பிக்கப்பட்டது.

*இந்த மேல் வீட்டறை மாற்கு என்னும் பேர் கொண்ட யோவானுடைய தாயாகிய மரியாள் வீடு என்று நம்பப்படுகிறது (அப்போஸ்தலர் 12:12).'அங்கு கிறிஸ்து வஸ்திரங்களை கழற்றி வைத்து, ஒரு சீலையை எடுத்து அரையிலே கட்டிக்கொண்டு சீஷருடைய கால்களை கழுவத்தொடங்கினார்' - (யோவான் 13:4-12). இதை வெளிப்படுத்தும் வண்ணம், முன் காலங்களில் இங்கிலாந்து அரசர் 12 பேர்களின் கால்களை கழுவி, அந்த பாதங்களை முத்தமிடுவாராம். (அவர்களுடைய கால்களை முதலாவது சுத்தம் செய்தபின்புதான் அரசர் கழுவுவார்) இப்போது அந்த பழக்கம் மாறி, Maundy Money என்னும் நாட்டின் வயதான மக்களுக்கு பணத்தை கொடுக்கும் பழக்கம் இன்று வரை கையாளப்பட்டு வருகிறது.*

*இராப்போஜனத்தை முடித்த பின், அவர் கெத்சமெனே தோட்டத்திற்கு வருகிறார். அங்கு தமக்கு பிரியமான மூன்று சீஷர்களை கூட்டிக்கொண்டுபோய் வியாகுலப்படவும் வேதனைப்படவும் தொடங்கி, சற்று தூரம் அப்புறமாக போய், தம் வேர்வை இரத்தமாக மாறும்வரை வியாகுலப்பட்டு ஜெபிக்கிறார். ஆனால் அவருடைய சீஷர்கள் தூக்க மயக்கத்தால் தூங்கிவிடுகிறார்கள். அவர் மூன்றாம்முறை ஜெபித்து வரும்போது, யூதாஸ் காரியோத் அவரை காட்டிக்கொடுத்து, அவரை பிரதான ஆசாரியனாகிய அன்னாவின் அரண்மனைக்கு கொண்டு செல்கிறார்கள். பின்னர் அன்னா பிரதான ஆசாரியனாயிருந்த காய்பாவினிடத்திற்கு கட்டுண்டவராக இயேசுவை அனுப்புகிறான். அங்குதான் பேதுரு மூன்று முறை கர்த்தரை*

*மறுதலிக்கிறான். அங்கிருந்து, தேசாதிபதியாகிய பிலாத்துவின் அரமனைக்கு அவர் கொண்டு செல்லப்படுகிறார். அப்போது விடியற்காலமாயிருந்தது. (யோவான் 18:24-27).*

*இதை கிறிஸ்தவர்கள் கொண்டாட வேண்டுமா என்கிற கேள்விக்கு, அதை குறித்து வேதத்தில் எங்கும் எழுதப்படவில்லை என்றாலும், அவருடைய கடைசி இராப்போஜனத்தையும், அவர் நமக்காக பட்ட பாடுகளையும், அவருடைய தாழ்மையையும் நினைவு கூருவது நல்லது. என்றாலும், கர்த்தர் இல்லாதபடி அவர் செய்த காரியங்களை பேருக்காக, அல்லது ஏதோ கடமைக்காக செய்வோம் என்றால், அவர் பட்ட பாடுகளை நினைவுகூறாதபடி, மற்ற சடங்காச்சாரங்களை மாத்திரம் நாம் கைகொண்டால், அவற்றை செய்வதினால் அல்லது கொண்டாடுவதினால் எந்த பயனும் இல்லை என்பது மட்டும் நிச்சயம்! இதே நாளில் யூதர்கள் தங்கள் பஸ்கா பண்டிகையின் ஆயத்த நாளை கொண்டாடுகிறார்கள்.*

*காட்டி கொடுத்தான் முப்பது வெள்ளி*
*காசுக்காகவே கர்த்தர் இயேசுவை*
*கொலை செய்யவே கொண்டு போனாரே*
*இதை காணும் உள்ளம் தாங்குமோ*
*பாவிக்கு புகலிடம் இயேசு இரட்சகர்*
*பாரினில் பலியாக மாண்டாரே*

***ஜெபம்:*** *எங்களை அதிகமாய் நேசித்து வழிநடத்தும் நல்ல தகப்பனே, உம்மை துதிக்கிறோம். புனித வியாழன் என்று*

*உலகமெங்கும் கொண்டாடும் இன்று, கிறிஸ்தவர்கள் தாங்கள் எதற்காக அதை கொண்டாடுகிறோம் என்பதை உணர்ந்து, கிறிஸ்துவின் பாடுகளை நினைத்து, தங்கள் பாவ வாழ்க்கையிலிருந்து வெளிவர தேவன் கிருபை செய்வீராக. இந்த நாட்களில் லெந்து காலங்கள் என்று உபவாசித்து துக்கப்படுகிற மக்கள், தங்கள் பாவத்தை நினைத்து துக்கப்பட்டு, மனம் திரும்பி, கிறிஸ்து எதற்காக இத்தனை பாடுபட்டார் என்பதை உணரும் இருதயத்தை தாரும் ஐயா. ஏதோ சடங்காச்சாரத்திற்காக காரியங்களை செய்யாதபடி உள்ளத்தின் ஆழத்தில் தேவனை குறித்த நேசத்தையும், அவருடைய பாடுகளின் காரணத்தையும் உணர்ந்து, அதை கடைபிடிக்க தேவன் கிருபை செய்வீராக!. இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

## 36. ஜீவனைக் கொடுக்கும் அன்பு

*ஒருவன் தன் சிநேகிதருக்காகத் தன் ஜீவனைக் கொடுக்கிற அன்பிலும் அதிகமான அன்பு ஒருவரிடத்திலுமில்லை - யோவான் 15:13.*

*டைட்டானிக் கப்பலை (Titanic Ship) கட்டிய மனிதரிடம் ஒருவர் இது எவ்வளவு பாதுகாப்பானது என்று கேட்டதற்கு, அவர் ஆண்டவர் கூட இதை முழ்கடிக்க முடியாது என்று ஆணித்தரமாகக் கூறினாராம். ஆனால் அந்தக் கப்பலுக்கு என்னவாயிற்று என்பது நாம் அனைவரும் அறிந்ததே. அதில் பயணம் செய்த 1528 மக்களில், ஆறுப் பேரே காப்பாற்றப்பட்டனர். அதை திரைப்படமாக எடுத்து, Leonardo Caprice யை ஹீரோவாக சித்தரித்திருந்தார்கள். ஆனால் அந்தக் கப்பலில் இருந்த உண்மை ஹீரோவைப் பற்றிதான் இன்றுப் பார்க்கப் போகிறோம்.*

*ஜான் ஹார்ப்பர் (John Harper) என்னும் அருமையான மனிதர் கிறிஸ்தவ பெற்றோருக்கு 1872-ம் ஆண்டு பிறந்தார். அவர் தனது 13ஆவது வயதில் கர்த்தரை ஏற்றுக்கொண்டு, நான்கு வருடங்கள் கழித்து, கர்த்தரைக்குறித்து அறிவிக்க ஆரம்பித்தார். அவருக்கு திருமணமாகி, மனைவி நான்கு வருடங்களுக்குள் மரித்துப் போனார்கள். அவர்களுக்கு நீனா (Nina) என்னும் பேர் கொண்ட அருமையான பெண் குழந்தை இருந்தது.*

*ஹார்ப்பர், மூடிபிரசங்கியாரின் ஆலயத்தில் பேசுவதற்காக சிக்காகோவிற்கு (Chicago) அழைக்கப்பட்டிருந்தார். அதற்காக **1912** ம் ஆண்டு ஏப்ரல் மாதம் **12**-ம் தேதி அவரும் அவருடைய பிள்ளை நானாவும் டைட்டானிக் கப்பலில் ஏறினார்கள். எதிர்பாராத விதமாக, பனிமலையின்மீது மோதி கப்பல் மூழ்க ஆரம்பித்த போது, அவர் தனது மகள் நானாவை உயிர்காக்கும் (Life Boat) படகில் ஏற்றிவிட்டு, 'நான் உன்னை ஒரு நாள் காண்பேன்' என்றுச் சொல்லி, அனுப்பி வைத்தார். அவருக்கும் படகில் போக இடமிருந்தாலும், அவர் மற்ற மக்களை காக்கும் பொருட்டு அதை விட்டுவிட்டு, தன் மகளை அனுப்பிவைத்தார். பின் மரண பயத்தோடு இருந்த மக்களிடம் வந்து, பெண்களும், சிறுபிள்ளைகளும், இரட்சிக்கப்படாதவர்களும், முதலில் உயிர்காக்கும் படகில் ஏறுங்கள்' என்று அவர் கூறிக் கொண்டு இருக்கும்போதே கப்பல் மூழ்க ஆரம்பித்தது. கப்பலில் இருந்து பயணிகள், கீழே ஐஸ் தண்ணீரி குதிக்க ஆரம்பித்தார்கள். அதில் ஹார்ப்பரும் ஒருவராவார்.*

*அந்த நடுங்கும் குளிரிலும் ஹார்ப்பர், மக்கள் அந்த குளிரில் உறைந்து மரிக்குமுன்னே, அவர்களை கிறிஸ்துவுக்குள் வழிநடத்த ஆரம்பித்தார்.அப்போது, ஒரு இளம் வாலிபன், அங்கிருந்த ஒரு கட்டையின் மேல் ஏறி தப்பும்படி போராடிக் கொண்டு இருப்பதைக் கண்டார். அவனிடம், 'நீ இரட்சிக்கப்பட்டாயா? என்றுக் கேட்டார்'. அவன் இல்லை என்றுக் கூறினான். உடனே தன் மேலே இருந்த உயிர்காப்பு மிதவை ஆடை (Life Jacket) எடுத்து, அந்த வாலிபனுக்கு கொடுத்து. 'என்னைவிட உனக்குத்தான் அது தேவை' என்றுக்*

*கூறிவிட்டு, மற்ற பயணிகளுக்கு சத்தியத்தைச் சொல்லச் சென்றார். பின் மீண்டும் அந்த வாலிபனிடம் வந்து, அவனுக்கு சத்தியத்தைச் சொல்லி, கிறிஸ்துவுக்குள் அவனை வழிநடத்தினார். அன்று மூழ்கின 1528 பேரில் ஆறுப் பேரே காப்பாற்றப்பட்டனர். அதில் அந்த வாலிபனும் ஒருவன்.*

*நான்கு வருடங்கள் கழித்து, அந்த ஆறுப்பேரையும் சேர்த்து நடந்தக் கூட்டத்தில் அந்த வாலிபன் கண்ணீரோடு எழுந்து நின்று, தனக்கு ஏற்பட்ட அனுபவத்தையும், ஹார்ப்பர் எப்படி அந்த பனிநீரிலும், மற்றவர்களுக்கு சுவிசேஷத்தைக் கூறினார் என்பதையும், அவர் நீந்த முடியாமல் கடைசியில் பலவீனமடைந்து, தண்ணீரில் மூழ்கும் நேரம் வந்தபோது, கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசியுங்கள், அப்போது நீங்கள் இரட்சிக்கப்படுவீர்கள் என்று கூறிக் கொண்டே மூழ்கியதையும் நினைவு கூர்ந்து கதறினான். மற்றவர்கள் தங்கள் உயிரைக் காப்பாற்ற எப்படியாவது உயிர் காப்பாற்றும் படகை பிடிக்க வேண்டும் என்று போராடிக் கொண்டிருந்த வேளையில் தனக்கு கிடைத்த வாய்ப்பையும் மற்றவர்களுக்கு கொடுத்து, தனது உயிரையும் கொடுத்த அற்புத மனிதரை ஹாலிவுட் படமெடுக்காமலிருக்கலாம், ஆனால், பரலோகத்தில் அவருக்கு நிச்சயம் பதில் கிடைக்கும்.*

*ஒருவன் தன் சிநேகிதருக்காகத் தன் ஜீவனைக் கொடுக்கிற அன்பிலும் அதிகமான அன்பு ஒருவரிடத்திலுமில்லை. ஆமென். நிச்சயமாகவே ஹார்ப்பர் ஒரு அற்புத ஹீரோதான்.*

*இயேசுகிறிஸ்துவும் நம்மில் அன்பு கூர்ந்து, தமது ஜீவனையே நமக்காக கொடுத்தாரே, தேவனுடைய குமாரனாயிருந்தும், நமக்காக தம் ஜீவனைக் கொடுத்த, தம் மாசில்லாத இரத்தத்தை சிந்தி, நமக்கு இரட்சிப்பை இலவசமாக கொடுத்திருக்கிறாரே அவர், சூப்பர் ஹீரோதான். அவரை விசுவாசித்து, அவருக்காக எந்த தியாகமும் செய்யும் ஒவ்வொருவரும் ஒரு ஹீரோக்கள் தான்.*

*வானம் பூமி படைத்திருந்தும்*
*வாடினேன் உன்னை இழந்ததினால்*
*பரிகாச சின்னமாய் சிலுவையிலே*
*பலியானேன் பாவி உனக்காய்*
*என்னை நேசிக்கின்றாயா?*

***ஜெபம்:*** *எங்களை அளவில்லமல் நேசிக்கும் நல்ல தகப்பனே, ஒருவன் தன் சிநேகினுக்காக தன் ஜீவனைக் கொடுக்கும் அன்பிலும் அதிமான அன்பு ஒருவரிடத்திலுமில்லை என்று சொல்லி, எங்கள் மேல் அன்பு கூர்ந்து, எங்களுக்காக தம் ஜீவனை ஈந்த இயேசு கிறிஸ்துவின் அன்பை நினைத்து நன்றி சொல்கிறோம். எப்படியாவது இரட்சிக்கப்படடிராத மக்கள் உம்மை அறிந்துக் கொள்ளும்படி, எந்த தியாகத்தையும் நாங்கள் செய்ய எங்களுக்கு மாதிரியாக நீர் இருக்கிறபடியால் உம்மைத் துதிக்கிறோம். நாங்கள் எங்களால் இயன்ற அளவு உமது நாமத்தை எடுத்துக் கூற எங்களை பயன்படுத்தும் தகப்பனே. எங்களை அர்ப்பணிக்கிறோம். இயேசுகிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# 37. வியாதி படுக்கையை மாற்றுபவர்

*பலவிதமான வியாதிகளினாலும் உபத்திரவப்பட்டிருந்த அநேகரை அவர் சொஸ்தமாக்கி, அநேகம் பிசாசுகளையும் துரத்திவிட்டார் (மாற்கு 1:34)*

*உலகில் ஆயிரக்கணக்கான வியாதிகள் உள்ளன. இந்த வியாதி மட்டும் நம்முடைய எதிரிகளுக்கும் வரப்கூடாது என்று நாம் சொல்ல கேட்டிருக்கிறோம். தாங்கள் பட்ட கஷ்டத்தின் அகோர தன்மையை சொல்வதற்காக அப்படி சொல்வார்கள். அவர்களுக்கு வந்திருக்கிற வியாதிகளை பார்க்கும்போது நமக்கிருக்கும் வியாதி ஒன்றுமில்லை என்று சிலர் சொல்லவும் கேட்டிருக்கிறோம்.*

*உலகில் வியாதி என்பது எவரையும் விட்டு வைப்பதில்லை. யாருக்காவது விநோதமான வியாதியோ அல்லது குறைபாடோ இருப்பதை பார்த்தோமானால் அதை பார்த்து நாம் அமைதியாக நின்றிருக்கிறோமல்லவா? பரிதாபத்தையும் மன சஞ்சலத்தையும் ஏற்படுத்தும் சிலரது வியாதிகள். உடல் குறைபாடுகள் ஏன் இப்படியெல்லாம் அவர்களது வாழ்க்கையில் நடக்கிறது என்று நமக்குள்ளே கேள்விகள் எழுப்புவதை நம்மால் தடுக்க முடியாது.*

*நியூஜெர்சி என்ற இடத்தில் வசித்து வந்த ஒரு பெண்ணிற்கு அவளது இருபத்தேழாவது வயதில் ஒரு அறுவை சிகிச்சை நடைபெற்றது. அதற்கு பிறகு அவளுடைய இடது கை மற்றும் இடது கால் ஏதோ அதற்கென்று தனி மூளை இருப்பது*

*போன்று செயல்பட ஆரம்பித்தது. நடந்து கொண்டிருக்கும் சமயம் கைப்கைக்குள் இடது கை தானாக கையை விட்டு பொருட்களை எடுத்து கீழே போட்டுவிடும். அது தெரியாமலேயே அவள் சென்று விடுவாள். அப்படி அநேக பொருட்களை அவள் இழந்துள்ளாள்.*

*திடீரென்று அவளுடைய இடது கை அவளையே அடித்து விடும். சட்டை பொத்தானை கழற்றும். இப்படி ஏறுக்குமாறான ஏதாவது ஒன்றை இடது கை செய்யும். அவளது எண்ணத்திற்கும் மூளையின் கட்டுப்பாட்டிற்கும் எதிராக இஷ்டம் போல செயல்படும்.*

*மருத்துவர்கள் அது என்ன என்று சோதித்தபோது அவளுக்கு மூளைப்பகுதியில் நடைபெற்ற அறுவை சிகிச்சையின் பக்க விளைவுதான் இந்த குறைபாடுகளுக்கு காரணம் என்று கண்டுபிடித்தனர். இதற்கான சில மருந்துகளை கொடுத்த போதிலும் அந்த வியாதியை முழுவதும் சுகப்படுத்த முடியவில்லை. இதுபோன்று இன்னும் அநேக விநோதமான வியாதிகள் உள்ளன.*

*பூரணமான ஆரோக்கிய சூழ்நிலையில் உருவாக்கப்பட்ட இந்த பூமி, பாவத்திற்க்கு பின்னர் வியாதியினால் தாக்கப்பட ஆரம்பித்தது. வியாதிகளை சுகப்படுத்த எத்தனையோ மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்டப்பின்னும் மருத்துவமனைகள் பல வந்த பின்னரும், வியாதிக்கும், அதனால் பீடிக்கப்படுவோரின் எண்ணிக்கைக்கும் குறைவில்லை.*

தற்போது இருக்கும் நிலையை பார்த்தால் ஹோட்டல்களுக்கும், மருத்துவமனைகளுக்கும் பஞ்சமேயில்லை. மனிதர்கள் பெருக பெருக வியாதிகளும் பெருகி கொண்டே இருக்கின்றன. வியாதிகளுக்கு மருந்துகளை கண்டுபிடிக்க, கண்டுபிடிக்க, புதிய புதிய வியாதிகள் உருவெடுத்து கொண்டே இருக்கின்றன. சிலவற்றை குணப்படுத்தலாம், சிலவற்றை குணப்படுத்தவே முடியாத நிலையும் உண்டு.

ஆனால் அற்புதமாக ஜெபத்தினால் குணமடைந்த வியாதிகள் பல உண்டு. பலர் சாட்சிகளை சொல்லியும் நாம் கேட்டிருக்கிறோம். 'படுக்கையின் மேல் வியாதியாய் கிடக்கிற அவனைக் கர்த்தர் தாங்குவார். அவனுடைய வியாதியிலே அவன் படுக்கை முழுவதையும் மாற்றி போடுவீர்' (சங்கீதம் 41:3) என்று வசனம் கூறுகிறது. கர்த்தரால் கூடாத காரியம் ஒன்றுமில்லை. அவரால் சுகமாக்க முடியாத வியாதி ஒன்றும் இல்லை. விசுவாசத்தோடு நாம் அவரிடம் கேட்கும்போது அவர் நம்மை தொட்டு சுகமாக்குகிறார். அல்லேலூயா!

கர்த்தர் சிருஷ்டித்த இந்த அற்புத உலகம் பாவத்தின் கோரத்தினால் சாபமாக்கப்பட்டது. வியாதிகளும், வேதனைகளும் வந்தது. கர்த்தர் புதியதாக சிருஷ்டிக்கும் புதிய பூமி வியாதிகளற்றதாக, வேதனைகளற்றதாக, சாபமற்றதாக, பாவமற்றதாக இருக்கும். அப்படிப்பட்ட அற்புத பூமியில் வாழ்வதற்கு நாம் கிறிஸ்துவின் இரத்தத்தால் கழுவப்பட்டு, அவருடைய கற்பனைகளின்படி பரிசுத்தமாக வாழும்போது நாமும் அந்த தேசத்தை சுதந்தரிக்க முடியும். நித்திய

*நித்தியமாக வியாதிகளின்றி, சுகமாய், ஆரோக்கியமாய் வாழ முடியும். ஆமென் அல்லேலூயா!*

*பாவமில்லை அங்கு சாபமில்லை*
*வியாதியில்லை கடும்பசியுமில்லை*
*இராஜாதி இராஜா இயேசு என்றென்றும் ஆண்டிடுவார்*

*இன்பமுண்டு சமாதானமுண்டு*
*வெற்றியுண்டு துதிப்பாடலுண்டு*
*இராஜாதி இராஜா இயேசு*
*என்றென்றும் ஆண்டிடுவார்*

**ஜெபம்:** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, சபிக்கப்பட்ட இந்த உலகில் தீராத வியாதிகளினால் வாடுகின்ற ஒவ்வொருவருக்காகவும் ஜெபிக்கிறோம் தகப்பனே. தொட்டு சுகப்படுத்துவீராக. வேதனைகளை மாற்றுவீராக. சுகமாயிருக்க கிருபை செய்வீராக. வரப்போகும் புதிய பூமியில் வியாதியில்லையே, வேதனையில்லையே அப்படிப்பட்ட இடத்தில் நாங்கள் வாழும்படி பரிசுத்தமாக ஜீவிக்க கிருபை செய்யும். இயேசுகிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் தகப்பனே ஆமென்.*

# 38. ஒவ்வொரு மனிதனும் என் நண்பன்

*அதற்கு ராஜா பிரதியுத்தரமாக: மிகவும் சிறியவராகிய என் சகோதரரான இவர்களில் ஒருவனுக்கு நீங்கள் எதைச் செய்தீர்களோ, அதை எனக்கே செய்தீர்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்பார் - (மத்தேயு 25:40).*

*ஒரு முறை ஒரு கல்லூரியில் பேராசிரியர் புதிதாய் சேர்ந்த மாணவ மாணவிகளுக்கு இரண்டு மாதங்கள் கழித்து, ஒரு கேள்வி பதில் பகுதி வைத்தார். ஒரு மாணவி தனக்கு எல்லாம் தெரியும் என்று நினைத்தவளாக அதில் இருந்த கேள்விகளுக்கு பதில் அளித்துக் கொண்டிருந்தாள். ஆனால் கடைசியாக ஒரு கேள்வி கேட்கப்பட்டிருந்தது.*

*அவளுக்கு அதன் பதில் தெரியவில்லை. அதில் கேட்டிருந்த கேள்வி, உங்கள் வகுப்பறையை தினமும் சுத்தம் செய்யும் பெண்ணின் பெயர் என்ன? என்பதே. அவளுக்கு மட்டுமல்ல, அங்கு இருந்த யாருக்கும் தெரியவில்லை.*

*பதில் தாள்களை பேராசிரியர் எடுத்து சென்றபோது, ஒரு மாணவி அவரிடம் ஐயா, கடைசி கேள்விக்கு பதில் யாருக்கும் தெரியவில்லையே, அதனால் எங்கள் மதிப்பெண்கள் குறையுமா? என்றுக் கேட்டாள். அதற்கு அவர், 'ஆம், உங்கள் வாழ்வில் ஒவ்வொருவரும் உயர்ந்த, தாழ்ந்த மக்களை சந்திக்க கூடும். ஒவ்வொருவரும் முக்கியமானவர்கள் என்பது உங்களுக்கு தெரிய வேண்டும். ஒரு புன்னகை செய்து, எப்படி*

*இருக்கிறீர்கள் என்று கேட்டாலே அவர்கள் முகம் மலரும். நீங்கள் இப்போதிருந்தே இதைக் கற்றுக் கொள்ளவேண்டும் என்பதற்காகவே இந்த கேள்வியை வைத்தேன்' என்றார்.*

*பிரியமானவர்களே, நம்மில் அநேகர் நமக்கு கீழ் தாழ்ந்த வேலை செய்யும் ஒருவரையும் கண்டுக்கொள்வது கிடையாது. அவர்களோடு நான் பேசினால் என் தராதரம் என்ன ஆவது என்று நாமே அவர்களோடு இணைந்து கொள்வதை தடுத்து விடுகிறோம். அநேகருக்கு தங்களுக்கு காபி கொண்டு வந்து வைக்கும் ஊழியனின் பெயர் தெரியாது. வாசலில் நிற்கும் செக்யூரிட்டியின் பெயர் தெரியாது. அவர்களோடு பேசினால் நம்மிடம் பணம் கேட்டு விடுவார்களோ என்று அநேகருக்கு பயம். நம்மிலும் தாழ்ந்தவர்களோடு பேச்சு வார்த்தை வைத்துக் கொண்டால் நாமும் அவர்களில் ஒன்றாக மற்றவர்கள் நினைத்து விடுவார்களோ என்று சிலருக்கு பயம்.*

*அவர்களும் மனிதர்கள்தான் என்பதை நினைக்க வேண்டும். அவர்களிடம் பேச்சுக் கொடுத்து, எப்படி இருக்கிறீர்கள், உங்கள் குடும்பம் சுகம்தானே என்று விசாரித்துப் பாருங்கள். அடுத்த முறை வரும்போது உங்களுக்காக எதையும் செய்வதற்கு அவர்கள் தயாராக இருப்பார்கள். 'என் பிரியமான சகோதரரே, கேளுங்கள்; தேவன் இவ்வுலகத்தின் தரித்திரரை விசுவாசத்தில் ஐசுவரியவான்களாகவும், தம்மிடத்தில் அன்புகூருகிறவர்களுக்குத் தாம் வாக்குத்தத்தம்பண்ணின ராஜ்யத்தைச் சுதந்தரிக்கிறவர்களாகவும் தெரிந்துகொள்ளவில்லையா? நீங்களோ தரித்திரரைக் கனவீனம்*

பண்ணுகிறீர்கள்' (யாக்கோபு 2:5-6) என்று யாக்கோபு கூறுகிறார்.

'நீதிமான் ஏழைகளின் நியாயத்தைக் கவனித்தறிகிறான்' (நீதிமொழிகள் 29:7) என்று வேதம் கூறுகிறது. ஏழைகளையும். சமுதாயத்தில் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களையும் நாம் மதிக்க கற்றுக் கொள்ள வேண்டும். நாமும் ஒரு நாள் தாழ்வில் இருந்துதான் இப்போது கர்த்தருடைய கிருபையால் இந்த நிலையில் இருக்கிறோம் என்பதை நாம் மறக்கக்கூடாது.

ஏழைகளை விசாரிக்கிற தேவன் நம் தேவன். அவர் நியாயமாய் அவர்களுடைய வழக்கை விசாரித்து நியாயம் செய்கிறவர். அவருடைய பிள்ளைகளாய் இருக்கிற நாமும் ஏழைகளையும் தாழ்ந்தவர்களையும் தரித்திரரையும் அன்போடு விசாரித்து நம்மால் இயன்ற அளவு உதவ வேண்டும். வருடத்தில் ஒரு முறையாவது நாம் குருடர்களையும், ஊனர்களையும், ஏழைகளையும் விருந்துக்கு அழைத்து உணவு கொடுப்போமா? அவர்கள் மீண்டும் நமக்கு விருந்து தர மாட்டார்கள். ஆனால் நமக்கு பலன் கர்த்தரிடத்திலிருந்து வரும். 'நீ விருந்துபண்ணும்போது ஏழைகளையும் ஊனரையும் சப்பாணிகளையும் குருடரையும் அழைப்பாயாக. அப்பொழுது நீ பாக்கியவானாயிருப்பாய்; அவர்கள் உனக்குப் பதில் செய்யமாட்டார்கள்; நீதிமான்களின் உயிர்த்தெழுதலில் உனக்குப் பதில் செய்யப்படும் என்றார்' (லூக்கா 14:13-14)

*பிரியமானவர்களே, ஏழைகளை நேசிப்போம், அவர்களுக்கு உதவி செய்வோம் நீதிமான்களின் உயிர்த்தெழுதலில் நமக்கு பதில் செய்யப்படும். ஆமென் அல்லேலூயா!*

*ஒவ்வொரு மனிதனும் என் நண்பன்*
*ஒவ்வொரு மனிதனும் என் சகோதரன்*

*வறுமையில் வாழ்பவன் என் நண்பன்*
*வருத்தத்தில் இருப்பவன் சகோதரன்*
*அல்லல் படுபவன் என் நண்பன்*
*ஆபத்தில் இருப்பவன் என் சகோதரன்*
*காரணம் அவனும் மனிதன்*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே உலகில் பிறந்த ஒவ்வொரு மனிதனும் எங்கள் சகோதரனாக, நண்பனாக நாங்கள் பார்ப்போமென்றால் உலகில் பிரச்சனைகளே இருக்க முடியாதே. நாங்கள் ஏழைகளையும் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களையும் நேசிக்க எங்களுக்கு உதவி செய்யும். எங்களால் இயன்ற உதவிகளை செய்ய கற்றுத்தாரும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

# *39.* வேரோடே பிடுங்கப்படும்

*என் பிதா நடாத நாற்றெல்லாம் வேரோடே பிடுங்கப்படும் (மத்தேயு 15:13)*

*'நிலத்தடி நீர்மட்டம் பெருக வேண்டும், இயற்கை வளம் பாதுகாக்கப்பட வேண்டும், புவிவெப்பமாவதை குறைக்க வேண்டும், சுத்தமான காற்றை சுவாசிக்க வேண்டும், இவை அனைத்தும் வேண்டுமென்றால் ஒன்று மட்டும் செய்ய வேண்டும். சீமை கருவேல மரங்களை வேரோடு அழிக்க வேண்டும்' இது இயற்கை ஆர்வலர்களின் குறிக்கோள் வாசகமாக இருக்கிறது.*

*அரசாங்கமும் இந்த மரங்களை முற்றிலும் அகற்றி விட வேண்டுமென்று தீவிர முயற்சியில் இறங்கியுள்ளது.*

*1960ஆம் ஆண்டு வெளிநாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட இந்த விதைகள் ஹெலிகாப்டர் மூலம் தமிழ்நாடு முழுவதும் விதைக்கப்பட்டது. விசேஷமாக வறட்சி பகுதிகளில் வாழ்ந்து வந்த ஏழைகளுக்கு விறகாக பயன்படவேண்டுமென்ற நோக்கில் கொண்டுவரப்பட்டது. வெளிநாட்டிலிருந்து கொண்டுவரப்பட்டபடியால் சீமைஉடை மரம் என்றும் அழைக்கப்பட்டது. குறைந்த அளவிலேயே இருந்த இந்த மரம் இப்பொழுது தமிழ்நாட்டில் இல்லாத இடமே இல்லை.*

*அதனால் ஏற்படும் தீமைகளை பார்ப்போம், பொதுவாக எல்லா மரங்களும் கார்பன்டை ஆக்சைடை உறிஞ்சிக்கொண்டு*

நாம் சுவாசிப்பதற்கு தேவையான ஆக்சிஜனை தருகின்றன. ஆனால் கருவேல மரம் இதற்கு விதிவிலக்கு. ஆக்சிஜனை எடுத்துகொண்டு கார்பன்டை ஆக்சைபை ஏராளமாக வெளியிடுவதால் இயற்கை வளத்தை கெடுக்கிறது. இந்த மரத்தின் வேர்கள் 175 அடி ஆழம் வரை சென்று நிலத்தடி நீரை உறிஞ்சி விடுகிறது. மற்ற மரங்கள் நூறு லிட்டர் வரை உறிஞ்சினால் அது ஆயிரம் லிட்டர் வரை உறிஞ்சி விடுகிறது. தண்ணீர் தட்டுபாடு ஏற்படுவதற்கு இதுவும் ஒரு முக்கியமான காரணமாகும். அது அதிகமாக பரவி விட்டதால் மற்ற மரஞ்செடிகள் வளருவதற்கும் இடையூறாக இருந்து வருகிறது.

2014ஆம் அண்டு செப்டம்பர் மாதம், முப்பதாம் தேதிக்குள் தமிழ்நாடு முழுவதும் இந்த மரங்களை அழித்துவிடவேண்டுமென்று இலக்கு நியமித்து வேலைகள் துவங்கப்பட்டன. ஆனால் ஒரு சில இடங்கள் தவிர வேறு அநேக இடங்களில் அழிக்க முடியவில்லை. அரசாங்கம் மட்டும் முயறசயடுத்து இந்த மரங்கள் அனைத்தையும் வேரோடு ஒழித்து விட முடிhயது. வேரோடு ஒழித்தால்தான பிரயோஜனம்.இல்லையென்றால் மீண்டும் வளரும். எனவே தனிநபர்கள், பொது சேவை அமைப்புகள் ஒன்று சேர்ந்து இம்மரத்தை ஒழிக்க பாடுபடவேண்டும்.

'என் பிதா நடாத நாற்றெல்லாம் வேரோடே பிடுங்கப்படும்' என்று இயேசுகிறிஸ்து கூறினார். மனிதர்களின் இருதயம் என்ற இந்த தோட்டத்தில் வஞ்சகமான போனைகளும், பாரம்பரியங்களும் தவறான சத்தியங்களும் பரவி ஆவிக்குரிய நிலையை கெடுத்து விட்டன. அவைகள்

*பரம் பிதாவால் நடப்படாதவைகள். அவைகளெல்லாம் காலம் வரும்போது பிடுங்கப்படும் என்று இயேசு கூறினார்.*

*கர்த்தருடைய வார்த்தைகளை படித்து, தியானித்து அதன்படி செய்து வாழ்கிற வாழ்க்கையே அல்லாமல் கர்த்தர் வேறெதை நம்மிடம் எதிர்ப்பார்க்கிறார். அப்படி கர்த்தருடைய வார்த்தைகள் நம் இருதயத்தில் இருக்கும்போது, வஞ்சகமான போதனைகளையும், தவறான சத்தியங்களையும் நாம் புரிந்துகொண்டு அதற்கு விலகி ஜீவிக்க முடியும்.*

*இப்படி ஆத்துமாக்களை இடற செய்கிறவர்களை கர்த்தர் வேரோடே பிடுங்கி எறிந்து போடுவார். எப்படி கருவேல மரங்கள் தீமையை கொடுக்கிறதோ அதுப்போல இப்படிப்பட்டவர்களின் போதனைகளும், சத்தியங்களும் ஆத்துமாவை கெடுத்துப்போடுகின்றன. அதன் தீமையை கண்டு எப்படி அரசாங்கம் அதை வேரோடே பிடுங்கி போட நினைத்ததோ அதுப்போல கர்த்தர் அப்படிப்பட்டவர்களை வேரோடே பிடுங்கி போடுவார்.*

*நல்ல கனி கொடா மரங்களெல்லாம்*
*வெட்டுண்டு அக்கினியில் போடப்படும்*
*இராஜா வருகிறார் ஆயத்தமாவோம்*
*இயேசு வருகிறார் எதிர் கொண்டு செல்லுவோம்*

***ஜெபம்:*** *எங்கள் அன்பின் பரலோக தகப்பனே, இந்த நாளிலும் நல்ல கனியில்லாதபடி, நீர் நடாத நாற்றுகளும்,*

மரங்களும் எங்கும் முளைத்து, ஆத்துமாக்களை கெடுத்து கொண்டிருக்கிறதை காண்கிறீரே, அவற்றை, அவர்களை அகற்றி போடுவீராக. என் தேவனின் தூய்மையான சத்தியம் எங்கும் பரவட்டும். ஒவ்வொரு ஆத்துமாவும் கர்த்தரின் வருகைக்கு தங்களை ஆயத்தப்படுத்தட்டும். இயேசுகிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் நல்ல தகப்பனே ஆமென்.

# *40.* தாகம் தீர்க்கும் ஜீவத் தண்ணீர்

*இயேசு அவளுக்குப் பிரதியுத்தரமாக: இந்தத் தண்ணீரைக் குடிக்கிறவனுக்கு மறுபடியும் தாகமுண்டாகும். நான் கொடுக்கும் தண்ணீரைக் குடிக்கிறவனுக்கோ ஒருக்காலும் தாகமுண்டாகாது; நான் அவனுக்குக்கொடுக்கும் தண்ணீர் அவனுக்குள்ளே நித்திய ஜீவகாலமாய் ஊறுகிற நீரூற்றாயிருக்கும் என்றார் - (யோவான் 4:13-14).*

*தென் அமெரிக்காவில் (South America) உள்ள உலகத்தின் இரண்டாவது நீளமான அமேசான் (Amazon) நதியில் பெருவைச் (Peru) சேர்ந்த ஒரு கப்பலில் பிரயாணம் செய்த கப்பல் ஊழியர்கள், ஒரு காட்சியைக் கண்டனர். அதில், ஸ்பெயினை சேர்ந்த ஒரு கப்பல், அங்கு நடு நதியில் நிறுத்தப்பட்டிருந்தது. அதைச் சேர்ந்தவர்கள் அருகேச் சென்று பார்த்தபோது, ஸ்பெயினைச் சேர்ந்த கப்பலில் பிரயாணம் செய்த ஊழியர்கள் மிகவும், மோசமான நிலையில், காணப்பட்டார்கள். அவர்கள் உதடுகள் காய்ந்து, வீங்கிப் போய், 'தண்ணீர் தண்ணீர்' என்று கதறிக் கொண்டிருந்தார்கள். அதைக் கண்ட பெருவைச் சேர்ந்த மக்கள், 'நாங்கள் உங்களுக்கு உதவலாமா?' என்றுக் கேட்டார்கள். 'ஆம், எங்களுக்கு சுத்தமான தண்ணீர் வேண்டும்' என்று மீண்டும் கதறத் தொடங்கினார்கள்.*

*அதைக் கேட்ட பெருவின் மக்கள், 'உங்களது தோண்டிகளை கீழே இறக்கி, தண்ணீரை எடுத்துக் கொள்ளுங்கள்' என்றுக் கூறினர். அப்போது ஸ்பெயினைச்*

சேர்ந்தவர்கள், 'எங்களுக்கு உப்புத் தண்ணீர் வேண்டாம், குடிக்க நல்லத் தண்ணீர் வேண்டும்' என்று கெஞ்சினார்க்ள. மீண்டும் பெருவைச் சேர்ந்தவர்கள், 'உங்கள் தோண்டிகளை இறக்கி தண்ணீரை எடுத்துக் கொள்ளுங்கள்' என்று மீண்டும் வலியுறுத்தினர். கடைசியில் வேண்டாவெறுப்பாக தண்ணீரை அவர்கள் மொண்டு கொண்டு அதைக் குடித்த போது அந்தத் தண்ணீர் நல்லத் தண்ணீராக இருப்பதைக் கண்டார்கள். அமேசான் நதியின் தண்ணீர் உப்பு அல்ல, நல்லத் தண்ணீர் என்பதை அப்போதுதான் அறிந்துக் கொண்டார்கள். அவர்கள் அத்தனை நாள் கரையை விட்டு தூரமாக இருந்தபோது, அவர்களுக்கு தண்ணீர் வாய்க்கருகே இருந்தபோதிலும், அறியாமையினால் அதை உபயோகிக்காமல் தண்ணீரின் தாகத்தினால் துவண்டுப் போய் வாடிக் கொண்டிருந்தார்கள்.

இந்நாட்களிலும், எத்தனைப்பேர் தங்களைச் சுற்றிலும் இருக்கிற ஆசீர்வாதங்களை அறியாமல், வாழ்ந்துக் கொண்டிருக்கிறார்கள். கர்த்தருடைய இரக்கங்களுக்கு முடிவில்லை. அவை காலைதோறும் புதிதாயிருக்கிறது என்று வேதம் நமக்கு சொல்கிறது. ஒவ்வொரு நாளும் இனிமையான காலையைக் காணவும், நம் வேலைகளை திறம்படச் செய்யவும் கர்த்தர் கிருபையளித்திருக்கிறாரே, அது எத்தனைப் பெரிய ஆசீர்வாதம்! வியாதியில் விழுந்துவிடாதபடி, நம்மைக் காக்கிறாரே, நேரா நேரம் நாம் சாப்பிட உணவு கொடுத்திருக்கிறாரே அது எத்தனைப் பெரிய கிருபை! எத்தனையோப் பேர் உணவைக் காண முடியும், அதை சாப்பிட முடியாது வியாதியின் காரணமாக, அப்படி இல்லாதபடி நாம் எல்லா ஆசீர்வாதங்களையும் அனுபவிக்க

*கொடுத்திருக்கிறரே அது எத்தனைப் பெரிய கிருபை! அதையெல்லாம் மறந்துவிட்டு, எனக்கு அது இல்லை. இது இல்லை என்று முறுமுறுப்பதே மனிதனுடைய குணமாக மாறிவிட்டது. மட்டுமல்ல. ஒரு பாடல் சொல்கிறது,*

*மலையும் மலர்களும் எதற்காக*
*பாடும் பறவைகள் எதற்காக*
*ஓடும் நதிகளும் எதற்காக*
*அத்தனையும் அது உனக்காக*

*என்று. இயற்கை அத்தனையும் படைத்த தேவன், நாம் அதையெல்லாம் அனுபவிக்க அல்லவா படைத்தார்?*

*எல்லாவற்றிற்கும் மேலாக, தேவன் இரட்சிப்பை மிகவும் எளிதாக நமக்கு கொடுத்திருக்க, அது நமது பக்கத்திலேயே இருக்க, அதை விட்டுவிட்டு மனிதன், கங்கை ஆற்றில் மூழ்கினால் தன் பாவம் போய்விடும் என்று அத்தனை தூரம் பயணிக்கிறானே என்ன ஒரு விந்தை! காஷ்மீர் முதல் கன்னியாக்குமரி வரை மனிதன் தன் பாவத்தை தொலைக்க போகத் தயார், ஆனால் இயேசுகிறிஸ்துவை ஏற்றுக் கொள்ள அவனால் முடியாது, ஏனெனில் கிறிஸ்து வேறு யாருக்காகவோ என்று அவனது அறியாமையினால், அவன் அவரை ஏற்றுக் கொள்ள முடியாமல் இருக்கிறான். இவர்களை தேவனிடம் திருப்பிக் கொண்டு வருவது யார்? நாம் தானே! நாம் செய்யாவிட்டால், வேறு யார் செய்ய முடியும்? தேவதூதர்கள் செய்ய முடியாது, கிறிஸ்து திரும்ப பிறந்து வர முடியாது, நாம் தான் அதைச் செய்ய வேண்டும். நான் கொடுக்கும்*

*தண்ணீரைக் குடிக்கிறவனுக்கோ ஒருக்காலும் தாகமுண்டாகாது; நான் அவனுக்குக்கொடுக்கும் தண்ணீர் அவனுக்குள்ளே நித்திய ஜீவகாலமாய் ஊறுகிற நீரூற்றாயிருக்கும் என்று இயேசுகிறிஸ்து சொன்ன வார்த்தைகளை அவர்களும் விசுவாசித்து அந்த ஜீவ தண்ணீரை அவர்களும் பருகி, நித்திய ஜீவனைப் பெற்றுக் கொள்ள நாம் ஜெபத்தில் போராடுவோம், அறிவிப்போம், அவர்களையும் இயேசுவிடம் கொண்டுவருவோம் ஆமென் அல்லேலூயா!*

*சிலுவை சுமந்தது எதற்காக*
*சிந்தின இரத்தம் எதற்காக*
*ஜீவனைக் கொடுத்ததும் எதற்காக*
*அத்தனையும் அது நமக்காக*

***ஜெபம்:*** *எங்கள் கன்மலையும் மீட்பருமாகிய எங்கள் நல்ல தகப்பனே, எங்களுக்காக நீர் படைத்த இயற்கையின் அழகுக்காக உம்மைத் துதிக்கிறோம். எங்கள் புத்திக்கெட்டாத எத்தனையோ காரியங்களும், படைப்புகளும் இந்த உலகத்தில் உண்டு. நாங்கள் எங்கள் கவலைகளையும் துனபங்களையுமே நினைத்து, இவற்றை இரசிக்க தவறி விடுகிறோம். நாங்கள் அனுபவிக்க வேண்டும் என்று நீர் படைத்த இயற்கை காட்சிகளை இரசிக்கவும் உம்மைத் துதிக்கவும் எங்களுக்கு கிருபைச் செய்யும். உம்மை அறிந்திராத மக்களுக்கு உம்மைக் குறித்து தயக்கமின்றி சொல்லவும், உமது எளிமையான இரட்சிப்பின் வழியை போதிக்கவும் எங்களை தைரியப்படுத்தும். இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஜெபிக்கிறோம் எங்கள் ஜீவனுள்ள நல்ல பிதாவே ஆமென்.*

